சென்னை இறையாட்சியாளர் பதிப்பு எண் 2.



# நஞ்சு நூல்
# INDIAN TOXICOLOGY

சென்னை இறையாட்சியாளர்
ஏற்படுத்திய பாடபுத்தகக்
கழகத்தாரால்

எழுதப்பெற்று

சென்னை இறையாட்சி இந்திய மருத்துவக் கலாசாலை
சித்தமருத்துவத் தலைமை ஆசிரியராய
திருவாளர் - மருத்துவ சிரோமணி

**க. ச. முருகேச முதலியாரவர்களால்**

பார்வையிடப்பெற்று




முதற் பதிப்பு

சென்னப்பட்டணம்
கவர்ன்மெண்ட் பிரஸ் சூபரின்டெண்டெண்ட் அவர்களால் அச்சிடப்பெற்றது

1933

PRICE, 1-14-0]

# முன்னுரை.

---

உலகில்வாழ் மக்கள் யாவரும் எக்காலத்தும் நன்னிலை எய்தி இன்னலுறுதிருக்கவே அன்பே யோருருவமாய் அவ்வப்பொழுது தோன்றிய சித்தாதி மருத்துவ அறிஞர்கள், மக்கட்குப் பேருதவியாய்த் தோன்றிய பலபொருள்களிலும் உடனிகழ்ச்சியாகவே யிருக்கும் நற்குண தீக்குணங்களை ஏராளமாக வெடுத்துரைத்துள்ளார்களெனினும், அவைகளை மக்களிற்சிலர் அறியாமலும், சிலர் தெரிந்திருந்தும் உயிர்வாழ்க்கையை வெறுத்து தற்கொலை புரிந்துகொள்ளவும், மற்றுஞ்சிலர் தம் பகைஞரைக் கொல்ல விரும்பியும், கொல்ல விரும்பாது துன்புறுத்தும் பொருட்டும், சில மூடப்பெண்கள் தம்கருப்பையிற்றங்கிய சூலைக் கெடுக்கும் பொருட்டும், ஆடவரிற் சிலர் மகளிரையும் மகளிரிற் சிலர் ஆடவர்களையும், வேலையாட்களிற் சிலர் தம் முதல்வர்களையும் தத்தம் கைவசப்பட்டொழுகுமாறும், சில பொருளைத் தனித்தேனும், மற்றப்பொருளோடு சேர்த்தேனும் உண வாதிப் பொருள்களோடு கலந்தேனும் உட்கொண்டும், ஊட்டியும், அகக் கருவி புறவுறுப்புகளில் புக்கியும் வருகிறுர்கள்.

இச்செயல்களா லுண்டாகுந் தீமைக ளிவ்வளவெனக் கணியாது நிகழ்த் தியபின், அவர்கள் படும்பாடு இத்தகைத்தாமெனக் கூறவே ஏலா! அம்மட்டோ? இல்லை! இல்லை!! அவர்களநுபவிக்கும் கொடிய துன்பத்தைப் பார்த்துப் பொறுத்தற்கியலாத உறவினர்களும், இரக்கமுள்ள மற்றவர் களும், இன்னது செய்ய அவர்கள் நன்மையடைவார்களென்று உண ராது திகைத்து, முகம்வாடி, மனமுளைந்து இங்குமங்குமலைந்து, மருத்துவனைத் தேடிவாடுவதும், மருத்துவன் சென்று பரிகாரஞ் செய்யு முன் உயிர் நீங்குவதையும், பரிகாரத்திற்குப்பின் பலனடையினும் பல நாள்வரை துன்புறுதலையும் நாம் நம்வாழ்க்கையிற் காண்கிறோம். இக் கொடிய துன்பத்திற்கு இலக்காயுள்ள பொருள்களில் முக்கியமானவற்றின் தீக்குணங்களையும், அவற்றுல் விளையுங் கெடுதிகளையும், அக்கெடுதிகளைக் களையும் வழியையுந் திரட்டிய இந்நூலுக்கு "நஞ்சுநூல்" எனப் பெய ரிட்டு, சென்னை இறையாட்சி இந்திய மருத்துவக் கலாசாலை மாணவர்கட்கும், ஏனைய மருத்துவர்கட்கும், ஒவ்வொரு குடும்பத்தாருக்கும் பயன்படுமாறு சென்னை அரசாங்கப் பேருதவி பெற்று அச்சியற்ற நேர்ந்தது.

இந்நூலைத் தொகுப்பதற்கு ஆதாரமாகிய நூல்களின் பெயர்களும் அவைகளைக் குறிக்கும் சுருக்கெழுத்துகளுமடங்கிய அட்டவணையொன்று இம் முன்னுரையின் பின்பக்கத்திற் சேர்த்திருக்கிறோம்.

க. ச. முருகேச முதலியார்.

## நஞ்சுநூலைத் தொகுப்பதற்கு ஆதாரமாகிய நூல்களின் குறிப்பு அட்டவணை.

| நூல்களின் பெயர். | நூலைக்குறிக் கும் சுருக் கெழுத்துகள். |
|---|---|
| தேரையர் யமக வெண்பா வுரை. (Mss.) | தே.ய.வெ. உ. |
| தேரையர் குணபாடம் .. | தே.கு. |
| தேரையர் கரிசல் 300 .. | தே.க.300. |
| தேரையர் தைலவர்க்க சுருக்கம். | .. |
| தேரையர் சேகரப்பா .. | தே.சே. |
| அகத்தியர் விஷப்பிரதி விஷத்திரட்டு. | வி.பி.வி. |
| அகத்தியர் வயித்திய காவியம் 1,500 | அ.வயி.கா. 1,500. |
| போகர் 3,000 .. .. | போ.3,000. |
| கருவூர் தேவர் - தண்டகம். | க.தே.த. |
| தேரையர் கரிசல் .. .. | தே.க. |
| அகத்தியர் பதார்த்த குண சிந்தாமணி. | அ.ப.சி. |
| அகத்தியர் 21,000 .. | அ.21,000. |
| விடசங்கார ஆரூடம் .. | வி..ஆ. |
| நாகாரூடம் .. .. | நா..ஆ. |
| சித்தராரூடம் .. .. | சி..ஆ. |
| சர்ப்பாரூடம் .. .. | ச..ஆ |
| சிவாரூடம் .. .. | சி..ஆ. |
| கருடாரூடம் .. .. | க..ஆ. |
| புலிப்பாணி 500 .. .. | புலி.500. |
| அகஸ்தியர் 21,000 .. | அ.21,000 |
| வாகடசந்திரோதயம். | .. |
| ஆயுள்வாசிட்டம். | .. |
| திருவள்ளுவர் திருக்குறள். | .. |

## நஞ்சுநூல்.

இது, நஞ்சு—நூல் எனப் பிரிக்கப்பட்டு நஞ்சு—(பொருள்களின்) விட குணத்தை (விளக்குவதுடன் அதை விலக்கும் விதிகளையுங்) கூறுகின்ற, நூல்—நூல் என்னும் பொருளைத்தரும்.

" நஞ்சு " என்னுஞ் சொல் வேற்றுமையில் வலித்தல் விகாரம் பெற்று " நச்சு " என ஆகும். இதனை " நச்சரவம் ", " நச்சுக்காற்று ", " நச்சுப் பல் ", " நச்செண்ணெய் " என்னுந் தொடர்மொழிகளாலறிக.

நச்சுப்பொருளென்ப தென்னே ?

உலக சிருட்டிப்பொருளாகிய நிலையியற்பொருள்களிலும் இயங்கியற் பொருள்களிலும் நச்சுப்பொருளென வொன்றுண்டோ வென்றாராயுங்கால், அங்ஙனமோர் பொருளிருப்பதாகக் கருதவிடமில்லை. ஆயினும் ஒவ்வொரு பொருட்கண்ணும் நன்மையுந்தீமையுமுடனிகழ்ச்சியாகவே யிருக்கக் காண்கி றோம். ஆகையால், அதிலுள்ள தீமையை நீக்க, நன்மையே எஞ்சி நிற்கும். உதாரணமாக (1) கடுக்காய், (2) சுக்கு, (3) சேங்கொட்டையைப் போன்ற சிலப்பொருள்களின் தீக்குண நற்குணத்தைக் கவனிப்போமாகில்

(1) கடுக்காய்க்கு அகணி நஞ்சு
(2) சுக்கிற்குப் புறணி நஞ்சு
(3) சுகநீங்கும் சீடியெண்ணெய் சொல்லுமுடல் விம்மும்

என்பதிலிருந்து நாம் அறியக்கிடப்பது, தீக்குணம் நீங்காதிருக்கும்வரை, ஒவ்வொரு பதார்த்தமும் உடல் நன்மைக்குப் பொருந்தாதெனவே விளங்கு கின்றது. நிற்க, இப்பொருட்கள் மேற்கூறிய நச்சுக்குணம் நீங்கித் தூய்மை பெறின்

### (1) கடுக்காய்.

கடுக்காயுந் தாயுங் கருதிலொன்றென் றாலும்
கடுக்காய்அத் தாய்க்கதிகங் காண்நீ—கடுக்காய்நோய்
ஓட்டி உடல்தேற்றும் உற்றஅன்னை யோசுவைகள்
ஊட்டியுடல் தேற்றும் உவந்து. (அ. ப. சி.)

### (2) சுக்கு.

வாதப் பிணிவயி றூதற் செவிவாய்
  வலிதலை வலிகுலை வலியிரு விழிநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
  சிகமலி முகமக முகஇடி கபமார்
சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
  தெறிபடும் எனமொழி குவர்புவி தனிலே
ஈதுக் குதவுமி தீதுக் குதவா
  தெனும்விதி யிலைநவ சுறுகுண முனவே. (தே. கு.)

### (3) சேங்கோட்டை நெய்.

தாதுவும் புருணமுமாந் தத்துரு பறங்கிப்புண்
கோதுபுரி யிருமைக் குட்டினங்கள்—காதுங்
கரிமுகி யூரற் கரப்பான் திமிர்போம்
எரிமுகி நெய்யாலென் றறி. (அ. ப. சி.)

சேரா வழகு வடிவினுக்குச்
　　சேரு மதிக பசியுண்டாம்
சேங்கன் றென்ன வுரமுண்டாஞ்
　　சேகண் டியைப்போல் தொனியுண்டாம்
சேட னெனவே யின்பமெல்லாஞ்
　　சேரத் துணையா மென்மேலும்
சேயின் முகம்போற் கலையுண்டாம்
　　சேற்கே தனன்போ லெழிலுறுமே. (தே.க.)

இவைகளாலுண்டாகும் நன்மை மிகப்பெரிதென அநுபவத்தில் கண்கூடாகக் காண்கிறோம். இவ்வாறாகவே, ஒவ்வொரு பொருளையும் கவனித்தல் இன்றியமையாததாகும். நிற்க, விடத்திற்குவிடம் அவுடதமாம் என்பதை, மரணத்தைத் தருவதாக மிரட்டுகின்ற சில பிணிகளில், கொடிய விடமாகக் கருதப்படுகின்ற பாம்பின் விடத்தைக் கொடுத்துப் பயன் பெறுவதையுங் காண்கிறோம். ஆகையால் எப்பொருளையு முட்கொள்ளுமுன்னரே, அப்பொருட்கள் உடல் நன்மைக்கு ஒற்ற விதிப்படிப் பக்குவபாகத்தைப் பெற்றிருக்கின்றனவா அல்லது அபக்குவ (நச்சுப்) பாகத்தை யடைந்திருக்கின்றனவா என்பதைக் கவனிக்கவேண்டும். அவ்வாறு கவனிக்காமல் நச்சுத் தன்மையுள்ளவற்றை வழங்குங்கால், அவற்றுள் சிலவற்றின் பெயரை யொருவன் கேட்டலிலும் மற்றவற்றைத் தீண்டலிலும், பார்த்தலிலும், சுவைத்தலிலும், உண்பதிலும், முகர்வதிலும், மனதிற்கொரு வெறுப்பும், உடற்கொரு தீமையும் விளைகிறது.

இவ்வாறாக நேரிடும் குற்றங்களைக் களையக் கருதக்கூடியவைகளுள் முக்கியமானவை :—

(1) பொருட்பார்வை (திரவிய திருஷ்டி) அஃதாவது எப்பொருளைக் கொள்ள விருப்பமோ, அப்பொருள் உண்மைப்பொருளா அல்லது போலிப் பொருளா ?

அப்பொருள் பயனளிக்கும் பருவத்தையறிந்து அக்காலத்திற்றானே சேகரித்ததா அல்லவா ?

(2) பொருட்டூய்மை - விதிப்படித்தூய்மை செய்யப்பட்டனவா ? அல்லவா ?

(3) தூய்மை செய்யப்பெற்ற பலபொருட்களை ஒன்று சேர்த்துப் பக்குவஞ் செய்தபின், அது புனிதமுற்றதா அல்லது தாழ்வடைந்ததா ?

(4) தூய்மை யடைந்திருப்பினும் ஒருவன் கொள்ளத்தக்க அளவுப்படி கணிக்கப்பட்ட அளவுதானா ? அல்லவா ?

(“அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் விடம்” என்பதை இங்கு நோக்குக.)

(5) கணிக்கப்பட்ட அளவறிந்தே உட்கொள்ளினும், உட்கொண்ட பொருட்குப் பகைப்பொருளை அறிந்து விலக்கினோமா ? அஃதாவது பத்தியத்தாழ்வை விளைவித்தோமா ?

(6) விடமாயினும், அது அமுதத்தன்மைப் பயக்குந் தறுவாயில் கொள்ளாமல் விடுத்து அதன் நற்குணத்தை இழந்தோமா ?

மற்றுமிவைபோன்ற விதிவிலக்குகளைக் கவனித்து உடலுக்குப் பொருந்திய பொருட்களை யுட்கொள்ள நஞ்சுத்தன்மை யிரா.

இவ்விதிகளைச் சிறிதும் கவனியாது தீங்கை விளைவிக்கும் பொருட்டே அடியிற்கண்ட தீயவழியில் அறிவிலிகள் சில பொருட்களை வழங்குதலு முண்டு.

(1) துணிவுடன் தற்கொலை செய்துகொள்ளவேனும், அல்லது பிறரைக் கொல்லவேனும் வழங்குதல்.

(2) சில மூடப்பெண்கள் சூலைக்கெடுக்கும்பொருட்டு அகக்கருவியிலும் புறவுறுப்புகளிலும் சிலபொருட்களைச் செலுத்துதல்.

(3) ஆடவர்க்கு மகளிரும், மகளிர்க்கு ஆடவரும் தத்தம்வழி நிற்கு மாறு இடுமருந்தை இடுதல்.

(4) நஞ்சையொழிக்க நஞ்சுப்பொருள் வேண்டாவிடத்து அப்பொருளை வழங்குதல் ஆகியவைகளாம்.

நன்மை, தீமை இவ்விரண்டுமுடனிகழ்ச்சியாகவே வுள்ள பொருட்கள், மூவிதப் பிரிவையடையும். அவை (1) தாது, (2) தாவர (மூலிகை), (3) சங்கம (சீவ)ப் பொருட்களாம். இவைகளாலுண்டாகும் நஞ்சுத்தன்மை எக்காரணத்தினுலேனும் உடலைப்பற்றிப் பிணிக்குங்காலத்தில் அவைகளாலுடலுக்குண்டாகும் பிணிகளை முற்றும் பரிகரித்து உடல் நன்மைக்குரிய பரிகாரத்தை எடுத்துக்கூறுவது சிறந்ததாகும்.

---

# நஞ்சு நூல்.

## 1. தாது வகுப்பு.

### (1) இரசாதி பாடாணங்கள்.

இரசம், வீரம், பூரம், இலிங்கம், இரசச்செந்தூரம் இவ்வைந்து தொகைச் சரக்குகளும் "பஞ்சசூதம்" எனப்படும். இவற்றில்,

#### 1. இரச நஞ்சு.

இரச நஞ்சின் பொதுக் குறிகுணங்களும், தன்மையும்.

வாயில் அச்சரத்தைப்போற் சிவந்த புண்ணையுண்டாக்கல்; பற்சந்துகளில் ஈறுகட்டல்; வாயில் நீர் பெருகல்; பனங்கள்ளைப்போல் வாய் குழம்பல்; வாய், தொண்டை இவை வெந்து வீங்கல்; வாய் நாற்றம்; பசிமந்தப்படல்; குடல், வயிறு இவை புண்ணுதல்; மந்தாக்கினியையுண்டாக்கல்; காரம் படவொட்டாமை; பக்கசூலையைப்போல் பக்கத்தில் அடிக்கடி வலித்துக்கொண்டே யிருத்தல்; வயற்றின்மேற் பட்டைபட்டையாகத் தேமல்போற் படர்தல்; பாதங்களில் வெடிப்பு கண்டு விடநீர் கசிதல், விக்கல், நீர் அடைப்பு, இரத்தபேதி, போகங்கெடல், உடல்வெளுத்தல், காது கேளாமை, கண் தெரியாமை, சிரங்கு, புண், செம்படைப்போல் உடம்பில் படை உண்டாதல், நடுக்கல், முதலிய குறிகுணங்களுண்டாம்.

(தே. ய. வெ. உ.)

விருத்தம்.

கலையைக் கிழிக்கும் அவிழ்த் தெறியுங்
கல்லைத் தேடி யெடுத் தெறியும்
மலையிற் குதிக்கும் புனல் மூழ்கும்
மருள்சேர் பித்தந் தனைக் கொடுக்கும்
உலையின் அனல்போல் உடல்வெ துப்பும்
ஓயா உழலை வியர் வாக்கும்
பலகா லமுமே வாய்பி தற்றும்
பாத ரசதோ டமுமி ஃதே.

மேலும், அறிவு மாறின பித்தனைப்போல் வாய் பிதற்றல், தன் துணியையாவது பிறர் துணியையாவது பிடித்துக் கிழித்தல், அவிழ்த்தெறிதல், கல்லாலடித்தல், மலையிலேறிக் குதித்தல், தண்ணீரில் விழல் முழுகி முழுகிக் கிளம்பல், அழலைகொள்ளல், வியர்வை பெருகல், முதலிய குறி குணங்களும் உண்டாம்.

(தே. கு.)

இரசநஞ்சு முறிவு.

வெண்பா.

சேரிரதங் கொண்டோர்க்குச் செப்புவாய் வெண்சங்கின்
சாருகுங் காரவல்லிச் சாருகும்—சீர்நீலி
நல்வேரை வெந்நீரில் நற்சுண்டைக் காயளவு
முந்நா ளருந்தல் முறை.

தூய்மை செய்யப்படாததும், நன்றாய் முடிக்கப்பெறாததும், அளவுக்கு மீறியதுமாய் இரசத்தை உண்டால், மேற்கண்ட தோடங்களுண்டாகும் :

அவைகளைப் போக்க :—வெள்ளைமுட்சங்கனிலைச்சாறுவது, மிதிபாகலிலைச்சாறுவது, வேளைக்கு அரை ஆழாக்காகக் காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் குடிப்பித்தாலும், அவுரி வேர்ப்பட்டையை எடுத்து வெந்நீர் விட்டரைத்துச் சுண்டைக்காயளவு காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் கொடுத்தாலும், மேற்படி இரசநஞ்சு தீரும். (வி. பி. வி.)

**(2) துளசி வேர்ப்பட்டைக் குடிநீர்.**

துளசிவேர்ப்பட்டை பலம் $\frac{1}{4}$, தோல்சீவின சுக்கு பலம் $\frac{1}{4}$ இவைகளை இடித்து ஒரு மண்சட்டியிலிட்டு, ஆழாக்குத் தண்ணீர்விட்டுக் காலாழாக்காகச் சுண்டக்காய்ச்சி வடித்து, அதில் பொட்டிலுப்பு அரைக்காற் பலத்தைப் பொடித்துப் போட்டுக் கலக்கிக் கரைந்தவுடன் குடிக்கவேண்டும். இப்படியே புதிது புதிதாக ஒரு நாளைக்கு இரண்டு வேளையாக கால் மண்டலமாவது, அரை, முக்கால், ஒரு மண்டலமாவது குடித்தால், மேற்படி இரசநஞ்சு தீரும். (தே. ய. வெ. உ.)

**(3) கருவேற் கொப்புளிக் குடிநீர்.**

**(4) அறுகங் குடிநீர்.**

அகவல்.

குணமிகு பாத ரசமதை யுள்ளிடக்
களிகடு கருவேற் கருநெலி நாவல்
வளிதி யெரிநீர் வைத்தெடு கொப்புளி
வாய்வே மதுவிடும் வைத்திடு மறுகும்
காய்நீர் மிளகுட னிட்டிடு வெண்ணெயை
அதிலிடு குடிரச விறஃ தடிபடும்.

களிப்பாக்கு, கடுக்காய்த்தோல், கருவேற்பட்டை, நெல்லிப்பட்டை, நாவற்பட்டை இவைகளை வகைக்கு ஒரு பலம் எடுத்திடித்து ஒரு மண்சட்டியிற் போட்டு, ஒரு படி தண்ணீர் விட்டுக் கால் படியாகச் சுண்டக் காய்ச்சி வைத்துக்கொண்டு காலை, பகல், மாலைகளில் கொப்புளித்து, தோலையும், கணுவையும் நீக்கிய அறுகங்கட்டையையும், மிளகையும் குடிநீர் செய்து வடித்து, அதில் பசுவெண்ணெயிட்டு இரசநஞ்சு தீரும் வரை குடித்து வரவும். (தே. க. 300.)

**அறுகங்கட்டைக் குடிநீர்.**

வாமென்ற . . . . . . . . அறுகம்வேரை
வண்மையா யொருபலந்தா னிடித்து நைய
வேமென்ற மிளகதுதா னிருபத் தைந்து
மிக்கெட்டு நீர்விட்டெட் டொன்ருய்க் காய்ச்சிப்
பாமென்றே யிறக்குகையிற் பாக்களவு வெண்ணெய்
பாலித்துப் பாங்காகக் கொண்டி டாயே.

எனப் போகர் முதலாயிரத்திற் கூறியபடி மேற்படி அறுகங்கட்டை பலம் 1, மிளகு 25, வெண்ணெய் பாக்களவு என்றறிக.

அறுகங்கட்டைக்குத் தோலையும் கணுவையும் நீக்கவேண்டுவது, அவை நஞ்சாதலினென்றறிக. இதனை,

"கணபதியணி மூலந்தோற் கணுத்தள்ளி" எனத் தேரர் தயில வர்க்கச் சுருக்கத்திற் கூறியதாலுமறிக.

சுரைக்கறுப்பு.

கூடிநின்ற சரீரத்தில் ரசசூலை முரிக்கக்
கூறுகிற சுரைக்குடுக்கைக் கரியை வாங்கி
நீடிநின்ற பழமோரிற் கரைத்துக் கொள்ள
நீங்காத ரசசூலை நீருய்ப் போகும்.

சுரை ஓட்டைக் கொளுத்திக் கரியாக்கி, வேளை ஒன்றுக்கு ஒரு வராகனெடை வீதம், காலை மாலை இரண்டு வேளையும் அவ்வீறு தணியும் வரை, புளித்த பசுமோர் அரையாழாக்கிற் கலந்து குடிக்கவேண்டும்.

(அ.வமி.கா. 1500.)

தயிர் வெல்லம்.

"உண்ணையிலே சூதவெட்டை மீறிற் ருனல்
உதரத்தி லுளைச்சலுமாய்க் கடுப்புங் காணும்
திண்ணமுறத் தயிரிலே வெல்லம் போட்டுத்
தின்றிடவே"—யவை தீரும்.

பசுவின் தயிர் அரையாழாக்கில், ஒரு ரூபா எடை நல்ல வெல்லங் கலந்து எழுநாள் குடித்தால், வயிற்றில் வலியுடன் சீதமும் ரத்தமுமாய்ப் போகும் கடுப்புடன் கூடின இரச நஞ்சு தீரும். (அ.வமி.கா. 1500.)

**எருக்குக் குடிநீர்.**

உண்ணையிலே வாயிலெல்லாஞ் சூலை கண்டால்
உறுதியங்கே கொப்புளிக்கக் கியாழங் கேளாய்
எண்ணையிலே வெள்வேலு மெருக்கின் வேரும்
கருவேலுந் துளசியதுங் குடிநீ ரிட்டு
நண்ணையிலே நான்குநா ளுமியி லப்பா
நற்சூலை வாய்ச்சூலை யிரண்டுந் தீரும்.

* * * * *

வெள்வேலம்பட்டை, எருக்கின்வேர்ப்பட்டை, கருவேலம்பட்டை, துளசி வேர்ப்பட்டை இவைகளைச் சரி எடை எடுத்து எட்டளவு நீர்விட்டு, ஒரு அள வாகக் காய்ச்சிக் காலை மாலை இரண்டு வேளையும் நான்கு நாள் கொப்புளித்து உமிழ்ந்தால், வாய்ச்சூலை, சூலை இரண்டுந் தீரும். (அ. வமி. கா. 1500.)

### 2. வீர நஞ்சுக் குறிகுணம்.

இது, நீரில் அதிவிரைவிற் கரையுந் தன்மையுள்ளபடியால் உட்கொண்ட காலத்து அதி விரைவில் இரத்தத்திற் கலந்து விடத்தை அதிக விரைவில் விளைவிக்குங் காரணத்தால், பிறரைக் கொல்லும்பொருட்டும், தற்கொலை புரிந்துகொள்வதன்பொருட்டும் இதை அறிவிலிகள் அதிகமாய்க் கையாள் வதுண்டு.

இதையுட்கொண்ட காலத்து வாயிலோர் வகைக் களிம்புச் சுவையும், வாய் நீரூறல், வாய்புண்ணாகி வீங்கல், தொண்டை, ஆமாசயம் யாவும் வீங்கிப் புண்ணாதல், வாந்தி, மலபேதி, இரத்தபேதி, எச்சிலைக்கூட விழுங்க வொட்டாமற்படி தொண்டை நோதல், முகம் வீங்கிப்போதல், உடம்பு முழு மையுமுள்ள தோல் பட்டை பட்டையாக வெடித்துச் சிலைநீர் வடிதல், பக்கம், விலா இவைகளில் அதிக நோயுங் குடைச்சலு முண்டாதல், அதிதாகம், விக்கல், மூர்ச்சை, மயக்கம், வலி முதலியனவுங்காணும். அன்றியும் மர ணமுண்டாகும். (தே. ய. வெ. உ.)

முறிவு.

வெண்பா.

முறையாகச் சவ்வீர மொய்குழலாய் கொண்டால்
சிறுநெருஞ்சிற் சாறுண்ணத் தீரும்—அறையக்கேள்
நீலிவே ராகுமே நெய்ச்சட்டிச் சாருமே
பாலிதென்னங் கள்ளும் பகர்.

சிறுநெருஞ்சிற் சாற்றைக் காலை மாலை அரைக்கால் ஆழாக்கு வீதம் அருந் தினும், நீலிவேர்ப்பட்டையை வெந்நீரில் அரைத்து ஒரு சுண்டைக்காய் வீதம் இள வெந்நீர் அரை ஆழாக்கில் கரைத்துக் காலை மாலை அருந்தினும், அன்றி அதை விதிப்படி குடிநீர் செய்து குடித்தாலும், நெய்ச்சட்டிக்கீரைச் சாற்றை காலை மாலை அரைக்கால் ஆழாக்கு வீதம் அருந்தினும், தென் னங்கள்ளை யருந்தினும், வீர நஞ்சு முறியும். (வி. பி. வி.)

நாள் கூறுமையால், நஞ்சு முரியுமட்டும் கொடுக்கவேண்டுமென்பதா கும்.

வெண்பா.

(வேறு.)

அண்டத்தின் வெண்கருவை யாவின்பா லிற்கலந்
துண்டுவர வீர னுரமகலும்—கண்டறிவாய்
எணற் கொடியே யிளநீ ரருந்திடினு
மாணப் பெருமை வழுத்து. (206)

கோழிமுட்டை வெண்கருவைத் தண்ணீர் அல்லது பாலுடன் கலந்து அடிக்கடி கொடுத்து வந்தாலும், இளநீர் அருந்தினும் வீரத்தின் வீரம் விலகும். (க. தே. த.)

### 3. பூர நஞ்சுக் குறிகுணம்.

இது வீரத்தைப்போல் அவ்வளவு விரைவாக நீரில் கரையாது. இது தற்கொலை செய்து கொள்ளுதற்கும், மற்றவர்களுக்கு நஞ்சிடுவதற்கும் பெரும்பாலும் கையாளப்படுவதில்லை.

இது தின்னவேண்டிய அளவுக்கு அதிகப்பட்டால், நஞ்சுத் தன்மையை உடலில் காட்டும். அவை : பல்லீறு, நா, வாய், உந்தி, தாடையின் உட்பக்கம் புண்ணுதல், வாய்திறக்கவொட்டாமலிருத்தல், நாவில் நீர் சுரத்தல், அதில் ஒரு வகையான நாற்றமுண்டாய் நீர் கசிதல், எதையும் விழுங்கவொட்டாமை முதலிய குணங்களுண்டாவனவன்றி,

செவ்வாப்புக் கண்ட முகத்தைப்போல முகத்தில் வேர்க்குருவும் பருவுமுண்டாதல், மார்பில் பருக்கட்டி கண்டு இரணமாதல், இடுப்பில்வலிகாணல், வாய் புண்ணுதல், பீசம் வீங்கல், உண்ணுக்கு விரணப்படல், பேதியில் இரத்தங் காணல் முதலிய குணங்களுங்காணும். (தே. ய. வெ. உ.)

முரிவு.

வெண்பா.

பகருவாய் பூரத்தைப் பாங்குடன்றின் றோர்கட்
கிகலரிய குல்லேயின்சா றீக—தகவுடைய
எரண்ட நெய்யா மெழிலவுரி வேராகும்
சீர்கொண்ட பாகலிலே தேர்.

துளசிச் சாற்றையேனும், சிற்றுமணக்கு நெய்யையேனும், பாகலிலேச் சாற்றையேனும் கொடுக்கவேண்டிய விதிப்படி 3 அல்லது 5 நாள் அல்லது நஞ்சு தீரும் வரை கொடுக்கலாம். அன்றி, அவுரிவேர்ப்பட்டையை வெந்நீர் விட்டரைத்து வேளைக்குச் சுண்டைக் காயளவு காலே மாலே 2 வேளேயாக நஞ்சு தீரும் வரை கொடுக்கலாம். (வி. பி. வி.)

(வேறு.)

**நிலப்பனங்கிழங்குக் குடிநீர்.**

(1) நிலப்பனங்கிழங்கு, (2) வல்லாரைவேர், (3) பொன்னுங்காணிவேர், (4) கண்டுபாரங்கி இவைகளே வகைக்குப் பலம் கால் எடுத்துச் சிதைத்து அரைப்படி நீர்விட்டு எட்டுக் கொன்றுகக் குடிநீர் செய்து, இரண்டு மூன்று வாரம் காலே மாலே சாப்பிட, பூரத்தின் வீறு தணியும்.

**4. இலிங்க நஞ்சுக் குறிகுணம்.**

வாய், உண்ணுக்கு முதல் குரல்வளே, இருதயத்தானமென்கிற மார்பு, பெருங்குடல் இவைகள் வெந்து புண்ணுய் வெயிலில் கசக்கிய பருத்திப்பூப் போலிருக்கும், காரம்பட வொட்டாது, தாகஞ்செய்ய வொட்டாது, பிறருடன் பேசக்கூட வொட்டாது, வாயில் துர்க்கந்தத்தையும், வயிற்றில் எரிச்சலேயும் உண்டாக்கும், அரோசகமுண்டாம், வாய்நீர் கெட்டுப்போன பனங்கள்ளேப் போல வெளுத்துக் குழம்பியாவது அல்லது காடித்தண்ணீரைப் போல வாவதிருக்கும்.

முரிவு.

(1) சாதிக்காய், (2) வால்மிளகு, (3) செம்பருத்தி வேர்ப்பட்டை, (4) கற்கண்டு இவைகள் வகைக்கு 1 விராகனெடை, இவற்றில் முதல் மூன்று சரக்குகளேயும் இடித்து 24 பலம் நீர்விட்டு, மூன்று பலம் நீராகக் காய்ச்சி, அதிற் கற்கண்டைப் பொடித்துக் கலக்கி, ஒரு மண்டலம் வரை காலே மாலேயிரு வேளேயும் கொள்ளத் தீரும். (தே. ய. வெ. உ.)

இலிங்க நஞ்சின் குறிகுணங்களும் இரசச் செந்தூர நஞ்சின் குறிகுணங்களும் ஒத்தனவாதலின் வேறு கூறவில்லே யென்றறிக.

**கந்தக நஞ்சுக் குறிகுணம்.**

இது ஒரு கொடிய பாடாணமாகாது. தற்கொலை, கொலை முதலிய செயல்களுக்கிதை உபயோகிக்கின்ற வழக்கமுமில்லை. தூய்மை முறையேனுஞ் செய்முறையேனுஞ் சரிவர முடியாத கந்தியை மருந்து வடிவமாகக் கையாண்டால், நாட்பட்ட காலத்தில் நஞ்சையுண்டாக்கும்.

குறிகுணங்கள்.

கண்கள் மஞ்சளித்துப் பூத்திருத்தல், முகம் வெளுத்தல், உடம்பு பீர்க்கம்பூ போன்ற நிறமடைந்து தன் இயற்கை ஒளி குன்றல், பற்கள் கறுத்துப் பாசியடைந்து விகாரப்படல், மஞ்சள் நிறமொத்த சேற்று சலத்தைப்போன்று இடைவிடாமல் வியர்த்தல், சிறுநீர் வெள்ளாட்டு நீரையொத்திருத்தல், மலம் சாமந்திப் பூவைப்போல மஞ்சள் நிறமடைதல், வாயில் புகை நாற்றமுண்டாதல், பொய்ப்பசி, வயிற்றுவலி, வயிற்றுப்பிசம், தேகத்தில் வியர்க்குரு அல்லது பருவுண்டாதல், முதலிய குணங்களையுண்டாக்கும். (தே. ய. வெ. உ.)

முறிவு.

வெண்பா.

செய்யகந்தி தின்றோர்க்குச் செப்புவா யாவிரம்வேர்
தைவேளை வேர்நீலி தன்மூலம்—துய்யசுக்கு
நல்ல பருத்தியிலை நாகேசுரம் சமனு
மல்லகுடி நீரட்டு வார்.

வார்ப்பா யிளநீரில் வண்டா மரைவிதையை
நேர்ப்பா யரைத்துவடி நீருண்பாய்—கார்ப்பான
நன்மிளகு நீலியின்வேர் நற்சீ ரகஞ்சமனும்
மன்னிரிற் காய்ச்சியதை மாட்டு. (வி. பி. வி.)

(1) ஆவாரம்வேர், தைவேளைவேர், நீலிவேர், சுக்கு, பருத்தியிலை, சிறுநாகப்பூ இவற்றைச் சமனெடை எடுத்துக் குடிநீரிட்டுக் கொடுக்கக் கந்தகக் குற்றம் தீரும்.

(2) தாமரை வித்தை இளநீரிலரைத்து வடித்துண்ணத் தீரும்.

(3) மிளகு, நீலிவேர், சீரகம் இவற்றைச் சமனெடை எடுத்துக் குடிநீரிட்டுக் கொடுக்கக் கந்தக விஷம் முறியும்.

(4) (i) மணத்தக்காளி வேர்ப்பட்டை $\frac{1}{4}$ பலம், (ii) அரிசிதிப்பிலி $\frac{1}{4}$ பலம், (iii) அதிமதுரம் $\frac{1}{4}$ பலம் இவைகள் சேர்ந்த குடிநீரை ஒரு மண்டலம் அல்லது நோய்நீங்கு மட்டுங் காலை மாலை இருவேளையுட் கொள்ளத் தீரும்.
(தே. ய. வெ. உ.)

**தாளகம்.**

இது, மிகு கொடிய நஞ்சை யுண்டாக்கும் பாடாணங்களுள் ஒன்று. இதைக் கர்ப்பச் சிதைவை யுண்டுபண்ணுவதற்கும், உரோமத்தைச் சங்கரிக்கும் பொருட்டும் உபயோகப்படுத்துவதுண்டு. அன்றியும், இந்நாட்டு மருந்துகளிற் பெரும்பான்மையாக உபயோகப்படுத்துவதுண்டு. இதை மருந்துகளி லுபயோகப்படுத்துங் காலத்துத் தூய்மை முறையேனும் செய்முறையேனும் தவறின், விடத்தை யுண்டாக்கும்.

**தாளகவிடக் குறி குணம்.**

நகக்கண்களி லிரத்தம் சுவரிப் பக்குகட்டிப் புண்ணுகிச் சீவடிதல், வயிற்றில் எரிச்சலேயுண்டாக்கல், தொனி மாறி வேறு குரலுண்டாதல், திடீரென மூக்கின் வழியா யிரத்தங்கொட்டல், வாயிலேத்தல், உருசி கெடல், ஊண் வெறுப்புண்டாதல், தலேயில் நமையுண்டாய் மயிர் முனே சிவந்து அக்கினிக் கொழுந்தின் நிறத்தை யொத்தல், மேற்சுவாசத்தைக் கிளப்பிப் பந்திக்கச் செய்தல், பிரமித்தல், அடிவயிற்றில் வீக்கச்சாயலேக்காட்டல், இடைக்குப் பக்கத்தில் தீராத வலியைக் கொடுத்தல், முதலிய குறிகுணங் களே விளேவிக்கும். (தே. ய. வெ. உ.)

முரிவு.

வெண்பா.

தேருவாய் தாளகத்தைத் தின்ருேர்க்கு நீலியதன்
வேருடனே யாவிரம்பூ வெட்டிவேர்—சீரகமும்
மாதளேவித் தோடுதென்னம் வன்குரும்பை காசினிவேர்
தீதகல நற்குடிநீர் செய்.

(1) நீலிவேர், ஆவாரம்பூ, வெட்டிவேர், சீரகம், மாதுளேவித்து, தென் னங்குரும்பை, காசினிவேர் இவைகளே வகைக்குக் கால் பலம் கூட்டிக் குடி நீர் செய்தருந்தத் தாளகத்திஞல் விளேயும் நஞ்சு தீரும். (வி.பி.வி.)

(2) (1) சித்திரமூலவேர்ப்பட்டை, (2) மிளகு, (3) கறியுப்பு இவைகளில் முதலிரண்டுங் கால் பலமும் கடையிலுள்ளதை அரைக்காற் பலமுங் கூட்டி முன்னிரண்டைக் குடிநீரிட்டு கறியுப்பைச் சேர்த்து காலே மாலே இருவேளே அரை, முக்கால், ஒரு மண்டலங் கொள்ளத்தீரும். (தே. ய. வெ. உ.

(வேறு.)

வெண்பா.

கொடிவேலி யாவிரைவேர் கொச்சி மிளகுங்
கடலுப் பிவைகலந்து காய்ச்சி—யுடலினுக்
கூறுசெய்த தாளகத்தா லுற்றவிட நீங்கியிரு
கூறுசெய்து நன்ருய்க் குடி. (199)

(க. தே. த.)

**வெள்ளேப்பாடாண நஞ்சுக் குறிகுணம்.**

இதைத் தற்கொலே புரிந்து கொள்ளுவதற்காகவும், கொலே புரிவதற் காகவும் அதிகமாய்க் கையாளுகிருர்கள். மற்ற விடங்களேவிட இதையே பலர் கையாளுவதற்குக் காரணங்களிருக்கின்றன. அவை :—

(1) கெட்ட சுவையின்றி யிருத்தலாற் சுலபமாய்க் கொடுக்கக்கூடியது.

(2) சிறு அளவிலேயே மரணத்தை விளேவிக்கக்கூடியது.

(3) கடைகளி லெல்லா மெளிதிற் கிடைக்கக்கூடியது முதலியவாம்.

இதை மருத்துவர்கள் அதிகமாய்க் கையாளுகிறதுண்டு. மேலும் இது சுரப்பிணி, மேகவியாதிகளுக்கு நேரான மருந்து. ஆனதால், நோயாளி களுக்குக் கொடுக்கும் பலவித மருந்துகளிற்சேரும். தக்கஅளவிற் கொள்ள

இது உடலுக்குப் பலகாரி செய்கையைப் புரியுமெனினும், அளவுக்கு மிஞ்சிய காலத்தில் மிக்க கொடிய நஞ்சாகும். அதிக அளவில் கொள்ள மரணத்தை விரைவில் விளைவிக்கும். இதைச் சிறு அளவிலும் அளவு கடந்த நாட்களாகவும் உபயோகித்துவரின் நாட்பட்ட விடகுணங்களை விளைவிக்கும்.

### ஷெ பாடாணத்தின் தீவிர விடக் குறிகுணம்.

இரத்த முரிவால் உடலில் சிரங்கு, கொப்புள முண்டாதல், கைகால் விரல்கள் வலித்துக் குரங்கு பைசாசங்களின் விரல்களைப்போலாதல், நாளுக்கு நாள் முகத்தில் வீக்க முண்டாதல், வாய் கசத்தல், மூக்குத்தண்டு பூதத்தின் மூக்கைப்போலதைத்துக் காணல், மேல்வாய், உதடு புண்ணுதல், உள்ளுக்குக் கொண்ட சில நிமிடங்களுக்குள் வாயில் ஓர் வித களிம்புச் சுவையுண்டாதல், நீர் சுரத்தல், வாய் புண்ணுதல், வாய் குமட்டல், தொண்டை நோதல், விழுங்கவொட்டாமை, வயிற்றில் எரிச்சல், வாந்திபேதி, வாந்தியிலும் பேதியிலும் இரத்தம் காணல், வாந்தியில் ஓர் வித கவிச்சு வாசனை வீசல், நீரடைப்பு, மிக்கநீர்வேட்கை இவைகள் தோன்றல், மூர்ச்சித்தல், வியர்த்தல், கையுங் காலும் வியர்த்துத் திமிர்த்தல், குரக்குவலி, வாய் பிதற்றல், அறிவு மங்கல், தலைநோய், மயக்கம், சில வேளைகளில் உடம்பு முற்றும் ஊதல் என்கிற குறி குணங்கள் காணும். இதற்குத் தக்க பரிகாரங்களை உடனே புரியாவிடின் மரணத்தை யுண்டாக்கும். (தே. ய. வெ. உ.)

குறிப்பு.—இதன் குறி குணங்களிற் சில தவிர மற்றவை ஊழி நோய்க் குறி குணங்களை ஒத்திருக்கும்.

### நாட்பட்ட விடக் குறிகுணம்.

இது, நாட்பட்ட விடமாகிற் சீக்கிரத்தில் கொல்லாது. தேகம் முழுதும் தினவெடுத்தல், நமைச்சல், சொறிபோல் பக்கு வீழ்தல், காமாலை, அசீரணம் முதலிய குணங்களுண்டாக்கும்.

### முரிவு.

(1) ஏலம் விராகனெடை 1, (2) முசுமுசுக்கைவேர் விராகனெடை 1 இவ்விரண்டையும் குடிநீர் செய்து அதில் வெள்ளைச் சருக்கரை, படிகாரம் வகைக்கு விராகனெடை 1 சேர்த்து ஒரு நாளைக்கு இரண்டு வேளையாக ஒரு மண்டலஞ் சாப்பிடவேண்டியது. (தே. ய. வெ. உ.)

அவுரி வேரும், மிளகும் குடிநீர் செய்து கொடுக்கலாம்.

### சிகிச்சையின் பொது விதிகள்.

வயிற்றைக் கழுவ வேண்டும். மயில் துத்தம்போன்ற வமனகாரிகளைக் கொடுக்கக்கூடாது. நெய், முட்டைவெண்கரு, முதலியவைகளைக் கொடுக்க வேண்டும்; சிற்றாமணக்கெண்ணெய் கொடுத்து வயிற்றைக் கழிக்கவேண்டும். அபினி சேர்ந்த மருந்துகளையும் கொடுக்கலாம்.

குறிப்பு.—வெண் பாடாண நஞ்சால் வாத தேகிகட்குச் "சண்டிகா கால ரோகமும்" பித்த தேகிக்கு "நமிகாகால ரோகமும்" சேத்தும தேகிகட்கு "ஆரியாகால ரோகமும்" பிறக்கும் என்பதும், இவைகளை நீக்க "சர்வ விட தோடாரிக் குளிகை" பயன்படுமென்பதும் தேரையர் கொள்கை. இதை யமுகத்தின் விரிவுரையில் காண்க.

**கௌரி பாடாணம்—எலிபாடாணங்களின்**

**நஞ்சுக் குறிகுணம்.**

இவை வெண்பாடாணத்தின் இனத்தைச் சார்ந்தவை. இவை வெள்ளைப் பாடாணத்தைப்போல் அதி தீவிரத்தில் விடமிக்கா விடினும் உட்கொண்ட சிலமணி நேரங்களுக்குள் விடமிக்கும் ; அவ்வாறு விடமித்த காலத்து வெள்ளைப் பாடாணத்தின் விடக்குறிகளை யொத்திருக்கும். இப்பாடாணங்களை நாட்டு மருந்துகளில் விசேஷமாகக் கையாள்வார்கள்.

அவ்வாறு கையாளப்படும் பாடாணங்களிற் சுத்திக் கிரமப்படி செய்யாமற் பிணியாளர்க்கு உபயோகிக்கின் விடமிக்கும்.

**விடக் குறிகுணம்.**

பின்னங்கால் கெண்டைச்சதையில் பருக்கள், உள்ளங்கால், மார்புப் பள்ளங்களில் வீக்கம், நடுவயிற்றிலே புடைத்துக் கட்டிகண்டு வருந்தல், உள்ளங்கையில் தோ லுரிந்துகொண்டே யிருத்தல், கண் சிவத்தல், பெருவியாதி, குட்டநோய் முதலியவைகளிலுண்டாவதுபோலத் தேகத்தில் தடிப்புந் திமிருங் காணல், பற்களின் சந்துகளி லிரத்தங் கசிதல், இருமல், உப்பிசம், வெள்ளோக்காளம், தேகத்தில் வெதுப்பு முதலியன காணும்.

கௌரி பாடாண நஞ்சுக்கு முறிவு.

முன்னைவேர்ப்பட்டை ¼ பலம், இதைக் குடிநீர் செய்து அதில் கறியுப்பு, ¼ பலம், பனங்கற்கண்டு ¼ பலம் சேர்த்துக் காலை மாலை இரு வேளையுமாக ஒரு மண்டலம் கொள்ளவும். இதுவே எலிப்பாடாண விடத்திற்கும் முறிவாகும்.
(தே. ய. வெ. உ.)

**மிருதார் சிங்கு**

**நஞ்சுக் குறிகுணம்.**

வாயில்புண், தொண்டைவரட்சி, நாவெடிப்பு, உந்தியிற்புண், உடல்மேற் சொறிப்புண் இவையுண்டாம்.

முறிவு.

வெண்பா.

மாட்டுமிரு தார்சிங்கி மாதேயுண் டோருக்குக்
கூட்டிக் குடிநைபுங்கின் கோற்றோலை—வாட்டமுற
நன்னீரி லேயரைத்து நன்றாய் வடித்துண்ணச்
சொன்னீ யவுரியின்வேர்த் தூள்.

(1) புங்கம்வேர்ப்பட்டையை நீரிலரைத்து ஒரு சுண்டையளவு உண்டாலும், (2) அவுரிவேர்த்தூளை பலம் கால் எடுத்து நீரிலரைத்துண்டாலும் மிருதார் சிங்கியினாலுண்டாகும் நஞ்சு மாறும். (வி. பி. வி.)

**உப்புகள்.**

சோற்றுப்பு, வெடியுப்பு, படிகாரம் முதலிய உப்புகளனைத்தும் இயற்கையாக நஞ்சில்லாவிடினும் மிகுந்த அளவில் நஞ்சாகும்.

### உப்புகளின் நஞ்சுக் குறிகுணங்கள்.

வாந்தி, வயிற்றெரிச்சல், பேதி, நீர்ப்பெருக்கு, உடம்புத்தளர்ச்சி முதலியவைகளாம்.

### உப்பு நஞ்சுக்கு மாற்று.

வெண்பா.

கொடுப்பாய்நீ யுப்பிற்குக் குப்பைமே னிச்சா
றிடுக்கான தாழைவிழு தின்னீர்—குடித்திடுவாய
சிற்றம்மான் பச்சரிசி சீராகத் தின்னலாம்
பொற்றெடியே சொல்வாய் புரிந்து.

குப்பைமேனிச் சாற்றையாவது, தாழை விழுதின் சாற்றையாவது வேளைக்கு $\frac{1}{2}$ ஆழாக்காக 2 வேளையும் குடிக்கலாம். சிறிய அம்மான்பச்சரிசியிலையை அரைத்து வேளைக்குக் கொட்டைப் பாக்களவாக நஞ்சுக்குத் தக்க நாளளவு தின்ன மேற்படி தோடங்கள் மாறும். (வி. பி. வி.)

### உப்புத் திராவகங்களின்

### பொதுவிலக்கணம்.

உப்புகளாற் செய்யப்பட்ட திராவகங்கள் பலவுள. இவைகளாற் பற்ப செந்தூரங்கள் செய்வதுண்டு. இதை நீரில் கலக்காமல் குடித்தாலும், நீரிற் கலந்தும் அதிக அளவாகக் குடித்தாலும் தீத்தன்மைகள் உண்டாம்.

### தீக் குறிகுணம்

நாக்கு, தொண்டை இவ்விடங்களில் புண்ணுதல், வயிறு, குடல் முதலியவைகளில் தாபித முண்டாதல், வாந்தியெடுத்தல், அவ்வாந்தி கறுப்பாயுஞ் சிலசமயம் இரத்தம் கலந்துமிருத்தல், பலநிறங்களாகவேனும் இரத்தத்துடனேனும் பேதி காணல், தேகத்தளர்ச்சி, நாடிமங்கல், மரணத்தையுண்டுபண்ணல் முதலியவையாம்.

### முறிவு.

இதற்கு அரிசிமாக்கஞ்சி, முட்டை வெண்கரு, சிலாசத்து பற்பம், குங்கிலிய பற்பம், குங்கிலிய நவநீதம் ஆகிய பற்பங்கள் கொடுத்தலும், நாவற்பட்டை, வேலம்பட்டை, ஆவாரம்பட்டை முதலிய துவர்ப்புப் பொருள்களை குடிநீரிட்டுக் கொப்புளிக்கச் செய்தல் முதலியவைகளுமாம்.

சோற்றைப் பசுவின்பால்விட்டுப் பொங்கல்போல் வேகவைத்து நன்றாகக் களிபோற் பிசைந்து வெள்ளைச் சீலையில் தடவி, அத்துணியை வயிற்றின் மேல் வைத்துக் கட்டவேண்டும்.

அன்றியும், இளநீர், தேங்காய்ப்பால், மாதளைரசம் போன்றவைகளையும் உபயோகிக்கலாம்.

### (சூடன்) கர்ப்பூரம்

### நஞ்சுக் குறிகுணம்.

இது, நீரிற் கரையுந் தன்மையின்மையாலும், ஓர் வகை மணமுள்ளதாலும் இதைப் பிறரைக்கொல்லும்பொருட்டுக் கையாள்வதில்லை. ஓர் வகைக் கைப்புச் சுவையும் விறுவிறுப்பும் உள்ளது. இதை, அளவு கடந்து உட்கொண்டால், பின்பு வயிறெரிதல், வயிற்றி னுட்கருவிகள் வேக்

காடடைதல், இரத்தபேதி, வாந்தி, இவற்றில் கர்ப்பூர மணம் வீசல், தலை கனத்தல், நோதல், தேக அயர்ச்சி, தொண்டை முதல் ஆசனம் வரையி லோர்விதக் கடுப்புண்டாகி எரிச்சல் காணல், ஏப்பம் அதிகரித்துக் கர்ப்பூர வாசனை வீசல், அரற்றல் புரட்டலுடன் நாடி நடை கனத்தும், துடி துடித் தும் படபடத்தும் நடத்தல், வியர்வை யதிகரித்தல், இசிவுண்டாகிக் காற் றில் பறப்பதுபோலும் விமானத்தில் ஏறிப்பறப்பதுபோலும் தோன்றல், அறிவு தவறி நீர் போதல், மயக்கம், மூர்ச்சை முதலியன காணலாம்.

முறிவு.

வெண்பா.

துணித்திடுகர்ப் பூரத்தைச் சோர்விற்கொண் டோர்க்குப்
பணித்திடுவாய் சம்பீரச் சாற்றிற்—கணித்தபலம்
நற்காய்ச்சுக் கட்டிதனை நன்று யரைத்தெடுத்தங்
கற்கவான் மோரினுண்பா யன்று.

எலுமிச்சம்பழச்சாற்றில் ஒரு பலம் காய்ச்சுக்கட்டியைக் கெட்டியாயரைத்து அதைப் பசுமோரிற் கரைத்துக் கொடுக்க மேற்படி கர்ப்பூர நஞ்சின் வேகந் தணியும். (வி. பி. வி.)

குறிப்பு.—வாந்தியை யுண்டு செய்யத் தகுந்த பொருட்களையும் உபயோ கிக்கலாம்.

**உலோகங்கள்.**

**தாம்பிரபற்பம்.**

நஞ்சுக் குறிகுணம்.

பதினான்கு சீர்க்கழி நெடில் முடுகு விருத்தம்.

"பிசகு பற்பமுறை யெனின லத்திநெறி
பிறழு மச்சமிகு மிருமலே
பிறகு விக்கலொடு தலைதி ருப்பிவரு
பிரமை மிகுத்துவரு மறல்கள்வாய்ப்
பெருகி யக்குலரு முரமெ ரிச்சலுறும்
பிளிறல் மெத்தவரு மிவைகடீர்
பெலம ருத்துமுறை யுணர்ம ருத்துவர்கள்
பெலமு ரைப்பரிய தவர்செய்வார்
முசிவ கற்றுவது நெளிவு பத்யவழி
முறைகொ ளப்பிணிகள் வதிதல்போல்
மூளரி யொத்தகடு பசிமி குக்கவெரி
முடுகு மற்றவது தணியவே."

(2)

"இவ்வகை புரிந்த தாம்பிர பற்பத்
தியற்கையை யென்சொல்வேன் பிசகில்
இடையருக் களிம்பாற் கொல்லுவ ததுவே." (தே. க.)

எனவுந் தேரையர் கூறியபடி உடலுக்குண்டாம் நன்மைகளெல்லாம் மாறல், மனம் திகிலடைதல், கண்டோர் அச்சப்படக்கூடிய இருமல், விக்கல், தலை திரும்பிப்போதல், அறிவு மயங்கல், வாய்நீரூறல், தொண்டை யுலர்தல், மார்பு எரிதல், பிதற்றல், அதிபசி, உயிர் நீங்கல் என்னுங் குறிகுணங்க ளுண்டாகும்.

(3)

வெண்பா.

புனிதமுரு் செம்பைப் புசித்தா லிருமல்
மனிதனெறி மாறி வருதல்—தனிப்பிரமை
வாய்நீரூ றல்விக்கல் மார்பெரிவு நெஞ்சுலரல்
ஒய்விலாப் பேச்சுண்டா முன். (கூகூ)

(க. தே. த.)

முறிவு.

" எலுமிச்சை சுக்கிளுலது போம் ". எனவும்,

முகிலெ னக்கிருத மிழுது மப்பமடை
முதிய சர்க்கரைகள் பூரியா
முனைய வற்பொரி பயறு கனித்திரள்
முதலு ணப்பரவு முடலெலா
மிசைய ரத்தமிகு மெழில்வி ருத்தியுறும்.

எனவும் தேரையர் சேகரப்பாவிற் கூறியுள்ளபடி, தாம்பிரத்தின் களிம்பால் உண்டான விடத்தைப் போக்கும் பொருட்டு எலுமிச்சம்பழ ரசத்தையும் சுக்கையுங் கூட்டி யுபயோகிக்கவேண்டும். தீக்குணங்களில் முதன்மையான அதிபசியைப் போக்க நெய், வெண்ணெய், அப்பம், அடை, சருக்கரை, பூரி, அவல், பொரி, பயறு, பழவகைகள் ஆகிய இவைகளைக்கொண்டு செய்த உணவாதிகளைக் கொடுக்கவும்.

செம்பின் (தாம்பிரத்தின்) களிம்புக்கு மாற்று.

வெண்பா.

புரிந்திடுவாய் தாம்பிரத்தின் பொல்லாக் களிம்பை
அருந்திவிடி னுமலகச் சாறுண்—பொருந்தவே
சம்பீர நற்பழத்தின் சாறுகு மேதியதன்
இம்புளித்த மோரென் றிசை.

நெல்லிக்காய்ச்சாற்றை வேளைக்கு $\frac{1}{4}$ ஆழாக்காகக் கொடுக்கலாம் அல்லது எலுமிச்சம்பழச் சாறு அல்லது எருமையின் புளித்த மோரைக் குடிக்கலாம். இவைகள் தாம்பிரக் களிம்பின் விடத்தை முறிக்கும். (வி. பி. வி.)

**துருசு நஞ்சுக் குறிகுணம்.**

துருசு செம்பினின்றுஞ் செய்யும் ஓர் வகை உப்பு. இது நீரிற் கரையுந் தன்மையுள்ளபடியாலும், கொண்டவுடன் சீக்கிரத்திலிரத்தத்துடன் கலக்குந்தன்மையுள்ளபடியாலும் இது செம்பைக்காட்டிலும் அதிதீவிரத்திற் கொல்லும் ஓர் நஞ்சாகும். தற்கொலைக்காக இதை உட்கொள்வதுண்டு.

இதை உள்ளுக்குக் கொண்ட காலத்து வாயில் ஓர்வித களிம்புச்சுவை, வாய்குமட்டல், வாய் நீரூறல், வாந்தி, வாந்தியி லிரத்தம் கலந்திருத்தல், கவிச்சுநாற்றம் வீசல், நீலமாக வாந்தியாதல், வயிற்றுக்கடுப்பு, வயிற்றெரிச்சல், வயிற்றுப் பொருமல், தொண்டையுலர்தல், அதிதாகம், நீரடைப்பு, காமாலை, பாரிச வாயு, கண் சொருகல், பசி மந்தப்படுதல், கண்களில் நீர் வடிதல் என்னுங் குணங்களுண்டாகி மரணத்தை விளைவிக்கும்.

முரிவு.

வெண்பா.

தூளா மயில்துத்தஞ் சோர்வுடனுண் டோர்கட்குத்
தாளான சம்பீரச் சாறுடனே—கேளாய்நீ
இஞ்சிநீர் தேனு மிரும்பஞ்ச தாரையுடன்
கொஞ்சுமொழி யுண்ணக் கொடு.

(1) எலுமிச்சம் பழச்சாற்றில், வேளைக்குக் காலாழாக்காக 3 வேளை கொடுத்தாலும், (2) இஞ்சிச்சாறு, தேன், சர்க்கரை, இம்மூன்றையுங்கூட்டி யருந்தினுலும் மயில் துத்த நஞ்சு முறியும். (வி. பி. வி.)

(வேறு.)

வெண்பா.

துத்தஞ் சுவைத்தார்க்குத் தூயமஸ்து நீராம்பு
ளித்த வவந்திய ளிக்கலாஞ்—சுத்த
வருணக் கனிச்சாறுக் கவ்வளவிக் குச்சா
றுறக்கலந் துண்பிக்க வோடும். (உ0கூ)

(க. தே. த.)

பொது விதிகள் :—வயிற்றைக் கழுவவேண்டும். முட்டையின் வெண் கருவையாகிலும் பாலையாகிலும் கொடுக்கவேண்டும். மூத்திரம் போகா திருந்தால் மூத்திரத்தைப் பெருக்கும் மருந்துகள் கொடுக்க வேண்டும்.

**இருவங்க**

நஞ்சுக் குறிகுணம்.

" வங்கம் கெட்டால் பங்கம் " என்னும் முது மொழிக்கிணங்கச் சுத்திக் கிரமம் அல்லது செய் முறை தவறிய கருவங்க வெள்வங்கங்களைப் பற்ப செந்தூராதிகளாகச் செய்து பிணியாளர்களுக்குக் கொடுத்தால் அது சிறிதள வில் தேகத்திலூறி நாட்பட விடக்குணங்களை யுண்டாக்கும்.

வங்கம் நாட்பட்டு விடமித்த குறிகுணங்கள் :

பல்ஈறு கறுத்தல், அல்லது நீல வர்ண மாதல், வயிறு நோதல், கொப்பூழ் வலித்தல், மலபந்தம், உப்பிசம், கைகால்தளர்ச்சி, பாரிசவாயு, காமாலை, இளைப்பு, ஈளை முதலியன உண்டாதலும் தேகத்தின் மேல் ஒருவித சொறியுண்டாதலுமாம். (தே. ய. வெ. உ.)

முரிவு.

(வெண்பா.)

இசைப்பா யிருவங்கங் கொண்டோர்க்கு நல்ல
இசைப்பாங் கரும்பூ லிலையைத்—தசைப்படாக்
கருங்கோழி மாமிசமாங் காட்டுப் புளியரணை
நறுவேரா மென்றேநீ நாட்டு

கறுப்புப் புல்லாஞ்சி யிலையை இடித்துப் பிழிந்த சாறு வேளைக்குக் காலாழாக்காகக் காலை மாலை இரண்டு வேளையும் நஞ்சு மாறும் வரைக்கும்

குடிக்க வேண்டும். அன்றி, கருங்கோழி மாமிசத்தைச் சமைக்கும் முறைப் படி சமைத்துச் சாப்பிடவேண்டும். அன்றி, காட்டுப் புளியரணை வேரை அரைத்து வேளைக்கு சுண்டக்காயளவாக நஞ்சு மாறும் வரை கொள்ள லாம். (வி. பி. வி.)

**அப்பிரக**

நஞ்சுக் குறிகுணம்.

வெண்பா.

சுத்திசெயா வப்பிரகந் துய்த்தார்க்குச் சோபையுடன்
சத்திரத்த காசந் தழையுமே—மெத்த
விடமருந்துக் கேய்ந்தகுண மெல்லா மமைந்து
கெடமருமைத் தேகமிதைக் கேள். (கசசச)

(க. தே. த.)

அப்பிரகத்தை மருத்துவர்கள் பற்ப செந்தூரங்களாகவும் பற்பல முறைகளாகவும் செய்து உபயோகிப்பார்கள். இவைகள் குற்றமற்றதாயிரு ப்பின் நற்பயனைக் கொடுக்கும்.

அன்றியும் பற்பத்தையேனும், சிந்தூரத்தையேனும் இதர சரக்கு களுடன் சேர்த்து மாத்திரைகளாகவும் செய்து உபயோகிக்க விதியுண்டு.

பற்ப செந்தூரங்களை எவ்வாருக உபயோகிக்கினும் அவைகள் செய் பாகம், கைபாகந் தவருது செவ்வனே முடிந்ததாக இருக்க வேண்டும். சிறிது தப்பினும் கெடுதலையே உண்டு பண்ணும். அக்கெடுதல்கள் மருந் திட்டால் உண்டாகின்ற குற்றங்களுக்கு ஒப்பாமென்பர். அவை :—

வயிற்றுப் பொருமல், வயிற்றிரைச்சல், நெஞ்சில் கோழிக் குஞ்சின் சப் தத்தைப் போலும் கின்னர வாத்தியத்தின் சப்தத்தைப் போலும் தொனித் தல், கய (க்ஷய—இளைப்பு) ரோகியைப் போல இருமல், ஈளையைத் துப்பல், சுவாசம் தடைப்பட்டு மார்பில் ஒருவித சங்கடத்தை அனுபவித்தல் ஆகிய இவைகளாம். அன்றியும், உப்பிசரோகத்தை விளைவித்து மரணத்திற் கும் ஏதுவாக்கும் என்பர். இதனைக் கீழ்கண்ட மேற்கோட் செய்யுட்களா லறிக.

" இந்தவப் பிரக பற்பத்தா லெவர்க்குமின் பங்க ளுண்டாம்
முந்துமிச் சரக்கின் சுத்தி முறையெனி லின்றேற் றுன்பம்
வந்திடு மிதனுன் மெத்த மருந்திடு கெடுதி போல
அந்தநோ யகற்று மாறே தறிந்திடிற் றேன்றி சுக்கே "

"தப்பிதமி லேச்சிறிது தப்பிலது தப்புமிகு
தத்துவரு முப்பிச மதே " (தே. கரிசல்)

முரிவு.

மேலே, மேற் கோளாகக் காட்டிய முதற் செய்யுளின் கடை அடியில் கூறிய

" அந்த நோயகற்றுமாறே தறிந்திடிற்றேன்றி சுக்கே." என்பதுடன், கீழ்கண்ட செய்யுளின் கருத்தையும் ஒன்று சேர்த்து கவனிக்குமிடத்தில் எவ் விதம் மேற்கண்ட சரக்குகளை முரிவாக உபயோகப்படுத்தலாமென்பது நன்கு விளங்கும்.

அறுசீர் விருத்தம்.

சொல்லுமிவ் விரண்டின் முன்வேர் தொடியோஒவ் வொன்றுக் காக
நல்லதண் ணீர தற்கு நாலைந்து பால்மே லாகப்
புல்லவிட் டதற்குக் காலாய்ப் பொங்கவிட் டிறக்கி மாந்தச்
சொல்லுமப் பிணிக்கொட் டாலைத் துன்பறுங் குணம தாமே.

(தே. சே.)

(கருத்து)—காந்தட் கிழங்கு, சுக்கு வகைக்குப் பலம் ஒன்று எடுத்து இடித்து இவ்விரண்டும் சேர்ந்த எடைக்கு இருபது பங்கு நல்ல தண்ணீர் விட்டு நான்கில் ஒரு பங்கு குடிநீர் செய்து, காலை மாலை இருவேளையாக அப்பிரக தோடம் நீங்கு மட்டும் உபயோகித்து வரவும்.

(வேறு.)

என்றூழி லேகிருமி யென்னமருந் தீடசத்தி
என்றூழி லேகிருமி யெய்க்குமுன்னே—யென்றூழி
பூரவள்ளி யப்பிரகை பொய்த்தாலி தேமுனகர்ப்
பூரவள்ளி யீயஃதும் போம்.

(கருத்து)—அப்பிரகதோடம் கர்ப்பூரவள்ளியால் நீங்கும்.

(தே. ய. வெ. உ.)

(வேறு.)

அறுசீர் விருத்தம்.

சுத்திசெய்யா வப்பிரகந் தனைவழங்கும் பண்டிதர்க்குத் துணையா [வாரேல்
அத்திசெய்யாக் காமவல்லி மழையிலாக் கொட்டையுடைக் கரத்த [ராக
வுத்திசெயா தொழிந்தோருஞ் செயம்பெறுவர் தப்பிதம்வந் துற் [றால் வேறு
புத்திசெய்யா திவையிரண்டுங் குடிநீராய்க் குடிக்கிலது போந்தப் [பாதே.

(கருத்து)—வெற்றிலைச் சாற்றையும், இஞ்சிச் சாற்றையும், சம அளவு ஒன்று சேர்த்து காலை மாலை இருவேளையும் கால் முதல் அரையாழாக்கு வீதம் தோடம் விலகுமட்டும் கொடுத்துவரலாம். (தே. சே.)

**சுண்ணும்பு**

நஞ்சுக் குறிகுணம்.

இதை யுட்கொண்ட மாத்திரத்தில் வாய், நாக்கு, தொண்டை முதலியன தாபித மடைதல், பிறகு அக்கரம் போல வாய் சிவந்தும் மெல்லிய தோல் வெந்தும் புண்ணுதல், வயிற்றில் எரிச்சல், பேதி, வாந்தி முதலியவைகளுண்டாதலாம்.

முரிவு.

இவ்வாறு உண்டாகும் சுண்ணும்பின் வேகத்தைத் தடுக்க தேங்காய்ப் பால், வெண்ணெய், நெய், முதலியவற்றையும், விரணத்தைச் சாந்தப் படுத்த ‘‘ நவநீத பற்பம் ’’ அல்லது‘‘ குங்கிலிய வெண்ணெயையும், துவர்ப் புள்ள குடிநீரையும் கொடுக்கலாம். அன்றியும்,

" சொல்லுவாய் சுண்ணத்தைக் கொண்டோர்க்குத் தூயதாம்
நல்லமஞ்ச ளாமேதி நன்மோராம் "——

* * * * * *
* * * * * *

மஞ்சளை நாக்கில் தேய்த்தாலும், மஞ்சளை யரைத்துத் தண்ணீரிற் கலக்கி வடிகட்டிய நீர் அல்லது எருமை மோரைக் கொடுத்தாலும் மேற்படி நஞ்சு வேகந் தீரும். (வி. பி. வி.)

(வேறு.)

சுதையுண்டா ரண்ணுவாய் தொண்டைமுதல் வெந்து
வதைவார்க்கு மஞ்சள் வழங்கு—அதையன்றித்
தெங்கின்பா லாநெய் தெவிட்டக் கொடுப்பாய்நீ
குங்கிலிய வெண்ணெயையுங் கோரு. (க. தே. த.)

**கண்ணுடி**

முதலியன நஞ்சுக் குறிகுணம்.

தற்கொலை செய்து கொள்ளும் பொருட்டு கண்ணுடி, மாணிக்கம், வைரம் முதலியவற்றைப் பொடித்து உட்கொள்வதுண்டு.

மேற்கூறியவைகளைக் கொண்டபின் அவைகள் ஆமாசயங்களிற் புரளுங்காலத்து அவைகளை அறுத்து, அதனுல் வயிறு நோதல், மலத்தி லிரத்தம் கலந்து விழல், முதலிய குணங்களுடன் வயிற்று வலியுமுண்டாகி மரணத்தை விளைவிக்கும்.

முறிவு.

இதற்கு வாழைப்பழம் முதலிய பசையும் வழுவழுப்புள்ள பொருள்களைக் கொடுத்தும், சிற்றுமணக்கெண்ணெயைக் கொடுத்தும் வயிற்றைக் கழிக்கவேண்டும்.

————————

## 2. தாவர வகுப்பு.

### உழுந்து

நஞ்சுக் குறிகுணம்.

அளவு கடந்து உழுந்தை யுட்கொள்ள, செரியாமை, வயிறு பளுவாதல், மலச்சிக்கலாயினும், பேதியாயினுமாதல், நெஞ்சுகரிப்பு, பசிமந்தம் என்னும் இவைகள் உண்டாம்.

இதற்கு முறிவு.

வெண்பா.

நாட்டுவாய் மாடத்தை நன்ருகத் தின்றோர்க்குக்
கூட்டுவாய் கொள்ளுக்கா வேளையின்வேர்—வாட்டமற
நன்மிளகு சீரகந்தே னுன்குங் கலந்துநன்ருய்க
கோன்விழியாய் காய்ச்சிக் கொடு.

உளுந்தின் நஞ்சுக்குக் கொள்ளுக்காய்வேளை வேர் வராகனெடை ஒன்று, மிளகு வராகனெடை ஒன்று, சீரகம் வராகனெடை ஒன்று, இவைகளை வேளை ஒன்றுக்குப் புதிது புதிதாக இடித்து மண்சட்டியிலிட்டு $\frac{1}{8}$ படி நீர் விட்டுக் கால்ஆழாக்காகக் காய்ச்சித் தேன் வராகனெடை ஒன்று சேர்த்து நஞ்சு வன்மைக்குத் தக்க நாளளவு கொடுக்க மேற்படி நஞ்சு வேகந் தணியும். (வி.பி.வி.)

### கடலை, துவரை, மொச்சை

நஞ்சுக் குறிகுணம்.

செரியாமை, வயிற்றுப்பிசம், புளியேப்பம், பேதி, ஆசனவடைப்பு என்னும் இவைகள் உண்டாம்.

### நெய்

நஞ்சுக் குறிகுணம்.

வயிற்று மந்தம், கல்லீரல் மலர்ச்சி, செரியாமை என்னும் இவைகள் உண்டாம்.

கடலை, துவரை, மொச்சைக்கும், நெய்க்கும் முறிவு.

வெண்பா.

மொழிகடலை யாடகநன் மொச்சைமூன் றிற்கும்
வழுவறுசெம் மண்ணைநீர் வார்த்துப்—பழுதறவே
நன்ருய்க் கரைத்தருந்த நாடாது நெய்தனக்கு
நன்ருவின் பாலினையே நாட்டு.

கடலை, துவரை, மொச்சை, இம்மூன்றையும் அளவுக்கு மீறி உண்பதால் விடமித்ததற்கு, செம்மண்ணை நீரிற் கரைத்தருந்திஞல் மேற்படி நஞ்சு தீரும்.

நெய்யை அளவு மீறி உண்டவர்க்குப் பசுவின் பால் குடித்தால் மேற்படி நஞ்சு வேகம் தணியும். (வி.பி.வி.)

**நெய், தேன்**

நஞ்சுக் குறிகுணம்.

நெய்யையும் தேனையும், ஒரு அளவாகச் சேர்த்துக் குடித்தால், வயிற்று வலி, வாந்தி, உடல் கொதிப்பு, நீர் எரிச்சல், வாயில் நீர் சுரத்தல், என்னுங் குணங்களுண்டாம்.

நெய் தேனுக்கு முறிவு.

வெண்பா.

ஆவின்நெய் நற்றே னளவு சரியாக
மேவியதை யுண்டால் விளம்பக்கேள்—தாவில்
இருந்தையை நீர்விட் டிளக வரைத்தே
அருந்தப்போ மென்றே யறை.

நெய்யையுந் தேனையுஞ் சம அளவாய்க் கலந்துண்டு அதனல் வரும் நஞ்சிற்குக் கரியை, நீர் விட்டரைத்து உண்ண மேற்படி நஞ்சு வேகந்தணியும். (வி.பி.வி.)

**வேர்க்கடலை**

நஞ்சுக் குறிகுணம்.

இதை அளவுக்கு மீறி உண்டால் வாந்தி, தலை மயக்கம், வாயில் நீர் சுரத்தல், சிலர்க்குப் பேதியாதல், சுவை மாறல், தண்ணீர் வேட்கை என் பனவுண்டாகும்.

**தேங்காய்**

நஞ்சுக் குறிகுணம்.

இதை அளவுக்கு மீறி உண்டால் வாயில் நீர் சுரத்தல், நாச்சுவை யின்மை, வாந்தி, பேதி, தலைமயக்கம், தண்ணீர்வேட்கை என்பன நேரிடும்.

வேர்க்கடலைக்கும் தேங்காய்க்கும் முறிவு.

வெண்பா.

உகந்துநல் வேர்க்கடலை யுண்டோர்க்குச் சொல்லச்
செகம்புகழுஞ் சீர்கன்னற் கட்டி—சுகம்பெறவே
தின்னப்போம் தேங்காயைத் தின்றோர்க்கு மீதேயாம்
பன்னுவாய் பச்சரிசி யாம்.

வேர்க்கடலை தின்று நஞ்சானமைக்குக் கரும்பு வெல்லம் தின்றல் அந்நஞ்சு வேகம் தணியும். (வி.பி.வி.)

தேங்காயை யதிகமாய்த்தின்று நஞ்சாயின், கரும்பு வெல்லத்தையாவது, பச்சரிசியையாவது அளவுடன் தின்றல், மேற்படி நஞ்சு வேகந்தணியும். (வி.பி.வி.)

**கோழிமுட்டை**

நஞ்சுக்குறி குணமும் முறிவும்.

அளவுக்கு மீறியட்ட வண்டத்தை யாதல்
அளவுபட வெந்ததைமிக் கயிலின்—புளியேப்பம்
மந்தஞ் செரியாமை மாறுமன முண்டிதற்குத்
தந்திமருப் பீயப்போந் தான் (க. தே. த.)

இதை அளவுகடந்து வேகவைத்தேனும் அளவுக்கு மிஞ்சியேனும் தின்ப தால் பசிமந்தம், புளி எப்பம், செரியாமை, முதலியன உண்டாகும்.

* கோழி முட்டையை அதிகமாய்ச் சாப்பிடுவதால் உண்டாகும் நஞ்சிற்கு முள்ளங்கிக் கிழங்கை அருந்த மேற்படி நஞ்சு வேகந் தணியும்.

### வாழைப்பழ

நஞ்சுக் குறிகுணம்.

இதை அளவுக்கு மிஞ்சித் தின்பதால் மந்தப்பட்டு வயிறு பொருமல், பலமுறை வயிற்றை வழித்தல், அம் மலம் மிகவும் சூடாக வெளிப்படல் என்பனவுண்டாகும்.

கோழி முட்டைக்கும் வாழைப்பழத்திற்கும் முரிவு.

வெண்பா.

* அறைந்திடுவாய் வாரணத்தி னண்டத்தின் வேகம்
சிறந்திடுமுள் ளங்கிழ லத்தாற்—பறந்து விடும்
† வாழைக் கனியருந்தின் மாதே புகையிலையின்
கோழைக் குடிநீரைக் கூறு.

† வாழைப்பழத்தை மிகுதியாக அருந்தி உண்டாகும் நஞ்சிற்குப் புகை யிலைக்குடி நீரையுண்டால் மேற்படி நஞ்சு வேகந் தணியும். (வி.பி.வி.)

### பலாப்பழ

நஞ்சுக் குறிகுணம்.

வாய்க்கு இனிப்பைத் தருவதாயினும், வாயு அதிகரித்தலினால் உண்டாம் துன்பங்களான மந்தம், பசியின்மை, எப்பம்வரின் அந்தப் பழத்தின் மணமே வீசல், கபம், மயக்கம், வாய்கரித்தல், என்பவைகளன்றி வேறு பிணிகளையும் விளைவித்தலாம்.

### பாலாடை

நஞ்சுக் குறிகுணம்.

பாலாடை உடலுக்கு வன்மையைத் தருவதானாலும், அதனால், தீமை களும் விளைவனவாகும். அவை பசி மந்தப்படல், வயிற்றுப் பொருமல், பேதி, வாந்தி, வயிற்றுவலி என்பவைகளாம்.

பலாப்பழத்திற்கும் பாலாடைக்கும் முரிவு.

வெண்பா.

கொடுப்பாய் வருக்கைக் கனியருந்திற் கோற்றேன்
தடிப்பார் நறுநெய்யுந் தானும்—இடுக்கான
பாலாடை தின்னின் பகற்புளித்த மோரதனை
வேலாம் விழியாய் விடு.

பலாப்பழத்தை யதிகமாய்த் தின்றதனுல் உண்டாம் நஞ்சுக்கு, நஞ்சின் வன்மைக்குத் தக்க அளவாக நெய்யையாவது, தேனையாவது கொடுக்கின் மேற்படி நஞ்சு வேகந் தணியும்.

பாலேடு தின்றதால் வரும் நஞ்சிற்குப் புளித்த மோர் குடித்தால் மேற்படி நஞ்சு வேகந் தணியும். (வி.பி.வி.)

### இலவம் பிசின்

நஞ்சுக் குறிகுணம்.

இதை அளவுக்கு மீறியுண்டால் மலச்சிக்கல், வயிற்றுப் பொருமல், நீர்க்கட்டு, உடம்பெல்லாங் கொதித்தல் என்பவைகளுண்டாம்.

முறிவு.

" உண்டக்கா னல்லிலவி னெண்பிசினை வெல்வதற்குத்
தண்டாச் சிவன் வேம்பைத் தானரைத்துண்.— *
* * * *

சிவனர் வேம்பு பலம் $\frac{1}{4}$ எடுத்து வெந்நீர் விட்டு நன்ருயரைத்து நாளொன்றுக்கு 2 வேளையாக 3 அல்லது 5 நாள் கொண்டால், இலவம் பிசினல் உண்டாம் நஞ்சுகள் தீரும். (வி.பி.வி.)

### குன்றிமணி

நஞ்சுக் குறிகுணம்.

இதனுடைய உறுப்புகள் எல்லாவற்றைப் பார்க்கிலும் இதன் பருப்பு மிக நஞ்சுத் தன்மை பொருந்தியது. இதைக் குழந்தைகள் அறியாமல் உட்கொண்டு துன்பமடைவார்கள். இதைக் கர்ப்பம் அழிப்பதற்குக் கையாள்வதுமுண்டு.

வாந்தி, வயிற்றுக் கடுப்பு, மயக்கம், உடல் அழற்சி, வயிற்றெரிச்சல், பேதி, மந்தம், முதலியவற்றை விளைவித்து மரணத்தையு முண்டு பண்ணும்.

முறிவு.

வெண்பா.

விருப்பான குன்றிவித்தை மேவியரைத் துண்டால்
பொரிகாரந் தன்னைப் பொரித்து—விரைகுழலாய்
வெந்நீரி லிட்டுண் விடதாரி வேரதனை
வெந்நீரி லிட்டுண் விரைந்து.

வெங்காரத்தைப் பொரித்து $\frac{1}{2}$ வராகனெடை நீரிற் கரைத்தருந்தினுலும் $\frac{1}{4}$ பலம் விடதாரி வேரை வெந்நீரிலரைத்துண்டாலும் மேற்படி குன்றிமணியின் நஞ்சு தீரும். (வி.பி.வி.)

### ஊமத்தங்கிழங்கு

நஞ்சுக் குறிகுணம்.

ஊனுங் கிழங்கைத்தின்ருல் வாந்தி, பேதி, வயிற்றுப் பொருமல், அறிவு மயக்கம், தடுமாற்றம், சுரம் என்பவைகள் உண்டாம்.

**நாவற்கொட்டை**

நஞ்சுக் குறிகுணம்.

இதனுல் மலச்சிக்கல், மார்வலி, வயிற்றை யிழுத்துப் பிடித்தல், நீரைச் சுருக்கல் என்னும் இவைகள் உண்டாம்.

ஊனுங் கிழங்குக்கும், நாகக் கொட்டைக்கும் முரிவு.

வெண்பா.

ஓட்டுமூ னுங்கிழங்கை யுண்டோர்க்கு வெள்ளையென
நாட்டுசங் கம்பழத்தின் நற்சாற்றை —மாட்டுவாய்
நாகக்கொட் டைக்குநீ நன்னீரிற் கொள்ளரைத்துத்
தோகையே கொள்ளத் துணி.

ஊனுங்கிழங்கு விடத்திற்கு வெள்ளைச் சங்கம் பழத்தின் சாற்றை நஞ்சளவுக்குத் தக்கபடி கொடுக்க அவ்விடம் முறியும்.

நாகக்கொட்டை நஞ்சுக்கு நஞ்சினளவிற்குத்தக்கபடி கொள்ளை நீரிலரைத்துக் கொடுக்க நஞ்சு வன்மை தணியும். (வி.பி.வி.)

**கோடற்கிழங்கு**

நஞ்சுக் குறிகுணம்.

கோடற் கிழங்கையுண்டால் வாந்தி, அறிவுமயங்கல், கண் சிவத்தல், கண் எரிச்சல், சுவைகெடல் என்பவைகள் உண்டாம்.

**மிளகாய்**

நஞ்சுக் குறிகுணம்.

மிளகாயை மிகுதியாக உண்டால் கண்ணில் நீர் வடிதல், கண் சிவத்தல், குடல், தீனிப்பை, மார்பு, வாய் முதலியவை புண்பட்டுக் காரம்பட முடியாமை, சீத பேதி, சாதாரணமாய் மலம் போனுலும் கொதிப்பாய்ப் போதல், வயிற்று நோய், என்பவைகள் உண்டாம்.

கோடற் கிழங்கிற்கும் மிளகாய்க்கும் முரிவு.

வெண்பா.

ஆங்கோட லின்கிழங்கை யாற்றவுணி னீலியின்வேர்
பாங்காய்வெந் நீரிற் பருகுவாய்—தேங்காமல்
கார மிகுந்த கடிமிளகாய் தின்றோர்க்குச்
சீர்கொத்து மல்லிநெய்யுஞ் சேர்.

வெண் காந்தட் கிழங்கு நஞ்சுக்கு அவுரி வேர்ப் பட்டையை வெந்நீர் விட்டரைத்துக் கொட்டைப் பாக்களவு நோய் வன்மைக்குத்தக்க நாளளவு கொடுத்தால் மேற்படிநஞ்சு வேகந் தணியும்.

மிளகாய் வேகத்திற்குக் கொத்துமல்லியையும் நெய்யையும் அதிகமாகச் சேர்த்துக் கொண்டால் மேற்படி வேகந் தணியும். (வி.பி.வி.)

### சிவனார்க் கிழங்கு

நஞ்சுக் குறிகுணம்.

பெருங்கிழங்கை யுண்டால் வாந்தி, வயிற்றுப் பொருமல், நீர்க்கட்டு, ஒரு வேளை பேதி, மயக்கம், போட்ட காலும் போட்ட கையுமாய்க் கிடத்தல், உடற் சோர்வு என்பவைகள் உண்டாம்.

முறிவு.

வெண்பா.

அன்று சிவனார்க் கிழங்கை யருந்திவிடின்
நன்றுய்ச்சுக் கின்குடிநீர் நாட்டுவாய்—ஒன்றுசுவை
வெள்ளரியின் வித்ததனை வெந்நீரி லேயரைத்துண்
ஒளியநா வற்கொழுந்து முண்.

தோல் சீவின சுக்கு பலம் $\frac{1}{4}$, $\frac{1}{4}$ படி நீர் விட்டு $\frac{1}{2}$ ஆழாக்காகக் காய்ச்சிய குடி நீரை 3 வேளை அல்லது 5 வேளை உண்டாலும்,

வெள்ளரி விதை $\frac{1}{4}$ பலத்தை மேல் தோல் நீக்கி வெந்நீர் விட்டரைத்து 3 அல்லது 5 நாள் கொடுத்தாலும், நாவற் கொழுந்து $\frac{1}{4}$ பலத்தை நீரி லரைத்து உண்டாலும் மேற்படி நஞ்சு தீரும். (வி.பி.வி.)

### மகிழம்பிஞ்சு

நஞ்சுக் குறிகுணம்.

மகிழம் பிஞ்சைத் தின்றால் வாந்தி, மலச்சிக்கல், நாவரட்சி, நீர்வேட்கை உண்ணு விறுவிறுத்தல் என்பவைகள் உண்டாம்.

### சோற்று

நஞ்சுக் குறிகுணம்.

சோறு மிகுதியாயுண்டாலும், நொந்ததும் சில்லிட்டதுமான சோற்றை யுண்டாலும் அது நஞ்சுத்தன்மையடைந்து, செரியாமை, வயிற்றுப் பொருமல், பேதி, புளியேப்பம், நெஞ்சு கரித்தல், செரியா அன்னத்தை எதிரெடுத்தல், சுரம் என்பவைகள் உண்டாம்.

மகிழம் பிஞ்சு, சோற்று நஞ்சுகளுக்கு முறிவு.

வெண்பா.

விரைமகிழம் பிஞ்சுவித்தை வெய்யசுண்ணந் தீட்டி
வரையினுத் தாமணிவேர் மாதே—அரைத்துருட்டிக்
கொள்ளப்போ மேயமலை கொண்டோர்க்குச் சீரகமாம்
கொள்ளுக்காய் வேளைவேர் கொள்.

மகிழம்பிஞ்சு நஞ்சு முறிவு.

உத்தாமணி வேருடன் சிறிது சுண்ணாம்பு கூட்டி யரைத்து மிளகளவு உருண்டை செய்து 3 அல்லது 5 நாள் அருந்த மகிழம் பிஞ்சின் வீறு அடங்கும்.

சோற்றின் நஞ்சு முரிவு.

கால் பலம் சீரகத்தை நன்றுயாய்ந்து வெந்நீர் விட்டரைத்தாவது அதைப் பொரிய விட்டுப் பொரிந்தவுடன் $\frac{1}{4}$ படி நீர் விட்டு $\frac{1}{2}$ ஆழாக்காக் குடிநீர் காய்ச்சியாவது 3 அல்லது 5 வேளை கொடுத்தாலும்,

கொள்ளுக்காய் வேளை வேர் ஒரு வராகனெடையை வெந்நீர் விட்டரைத்து 3 அல்லது 5 வேளை கொடுத்தாலும் சோற்று நஞ்சு தீரும்.

(வி.பி.வி.)

**மருதோன்றியும் எண்ணெயுஞ் சேர்ந்த**

நஞ்சுக் குறிகுணம்.

மருதோன்றியை எண்ணெயுடன் சேர்த்தரைத்துண்பதால் வரும் நஞ்சுக் குறிகுணங்களாவன :

வாந்தி, நாவரளல், தொண்டைவரட்சி, பசி மந்தப்படல், முதலியவை களாம். இது சில சமயங்களில் மரணத்தையு முண்டாக்கும்.

**நுங்கு**

நஞ்சுக் குறிகுணம்.

நுங்கு தின்றால் வயிறு அடிக்கடி போதல், வயிற்று வலி, வயிற்றுப்புசம், பசியின்மை, மந்தப்படுதல், என்பன உண்டாகும்.

மருதோன்றி-எண்ணெய் சேர்ந்ததற்கும், நுங்குக்கும் முரிவு.

நேரா மருதோன்றி நீள்திலத்தி னெண்ணெயுடன்
நேராவரைத் துண்டால் நீகேளாய்—சீராக
தான்றிக்காய் நற்குடிநீர் தானுகு நுங்கினுக்குப்
போன்றுபெருங் காயம் புகல்.

மருதோன்றி என்னும் ஐவணத்தை எண்ணெயுடன் சேர்த்தரைத்துண்பதால் உண்டாம் நஞ்சிற்குத் தான்றிக்காய்த்தோலை நசுக்கி விதிப்படி குடிநீர் செய்து குடித்தால் மேற்படி நஞ்சு தீரும்.

முரிவு.

நுங்கு நஞ்சிற்குப் பெருங்காயத்தை நோய் வன்மைக்குத் தக்கபடி பொரித்துக் கொடுத்தால் மேற்படி நஞ்சு தீரும். (வி.பி.வி.)

**புளித்த தயிர்ச்சோற்று**

நஞ்சுக் குறிகுணம்.

ஒருவன் தன் பசியினளவிற்கு மீறி புளித்த தயிர்ச் சோற்றையுண்டால், மந்தம், கழிச்சல், சோம்பல், சோர்வு, புத்திமந்தம், தூக்க முதலியவை யுண்டாகும்.

**கொடிக்கள்ளிப்பால்**

நஞ்சுக் குறிகுணம்.

இப்பாலைத் தனித்தேனும், வேறு பொருளோடு கலந்தேனு முட்கொண்டால், வாய்குமட்டல், தொண்டை கரகரத்தல், பேதி, வாந்தி, வாய்ப்புண், ஆசனக்கடுப்பு, முதலியவைகளுண்டாகும்.

புளித்த தயிர்ச்சோற்றிற்குங் கொடிக்கள்ளிப் பாலுக்கும் முரிவு.

வெண்பா.

கொள்வாய் புளித்தயிருங் கூறமலைக் காங்கடுகும்
நள்ளாக் கொடிக்கள்ளி நாட்டுப்பால்—உள்ளாயின்
கோவைச்சா றுகுமே கோமளத்தின் கோமயமாம்
மாவைகு நாமமண்ணு மாம்.

கடுகைப் பொரியவிட்டு விதிப்படி நீர் விட்டுக் குடிநீர் செய்து குடித்தால், புளித்த தயிர்ச் சோற்றுலுண்டான நஞ்சு தீரும்.

கள்ளிப் பாலைக் கொண்டால் கோவைச் சாற்றையாவது, பசுவின் சாணிப் பாலையாவது, வெள்ளை மண்ணை நீரிற் கரைத்து வடித்தாவது விதிப்படி குடித்தால் மேற்படி நஞ்சின் வேகந் தணியும். (வி.பி.வி.)

**நல்லெண்ணெய்ச் சோற்றின்**

நஞ்சுக் குறிகுணம்.

இவ்விரண்டையும் கலந்துண்பதால் மந்தம், மயக்கம், வாந்தி, பேதி, ஆசன வாயடைப்பு, வயிற்றுப் பொருமல், செரியா ஏப்பம், நெஞ்சு கரித்தல் என்பவையுண்டாகும்.

**வெற்றிலைச்சாறு, நல்லெண்ணெய்**

நஞ்சுக் குறிகுணம்.

இவ்விரண்டையும் கலந்து குடிப்பதனுல் வேக்காடு, வாந்தி, அரோசகம் செரியாமை, வயிற்றுப் பொருமல் உண்டாம்.

நல்லெண்ணெய்ச் சோற்றுக்கும் ; வெற்றிலைச் சாற்றுடன்கூடிய எண்ணெய்க்கும்

முறிவு.

வெண்பா.

கூறுவா யெள்ளெண்ணெய் கூட்டியரைத் தேசோற்றை
வீறுடனுண் டாற்காடி வேகமதை—ஊறுசெய்யும்
வெற்றிலைச்சா றெள்ளெண்ணெய் மேவியுண்டோர் தங்களுக்கு
முற்றினதேங் காய்ப்பால் மொழி.

நல்லெண்ணெயையும் சோற்றையுஞ் சேர்த்துண்டதனுல் உண்டாம் நஞ்சிற்குக் காடியைச் சாப்பிட நஞ்சு வேகந் தணியும்.

வெற்றிலைச்சாறு நல்லெண்ணெய் இவ்விரண்டையும் சேர்த்துச் சாப்பிட்டு உண்டாம் நஞ்சிற்குத் தேங்காய்ப்பால் உண்டால் நஞ்சு வேகந்தணியும். (வி.பி.வி.)

**நெல்வேர் எண்ணெய்**

நஞ்சுக் குறிகுணம்.

இவ்விரண்டையுங் கலந்துண்பதால் மஞ்சள் நிறத்தோடு கைத்தவாந்தி, தலைசுற்றல், வாயில் நீர்சுரத்தல், நீர்வேட்கை, பேதி ஆகிய துர்க்குணங்களுண்டாகும்.

**நெல்வேர் சர்க்கரை**

நஞ்சுக் குறிகுணம்.

இவைகளைக்கூட்டி யுட்கொள்ளின் வாந்தி, அருசி, வாயில் நீர்சுரத்தல், நீர்வேட்கை, என்பவைக ளுண்டாகும்.

**நெல்வேர்**

நஞ்சுக் குறிகுணம்.

இதனுல், வாந்தி, வயிற்றுப்பிசம், பசிமந்தம், பேதி, சுவையின்மை என்பவை நேரிடும்.

நெல்வேர்-எண்ணெய், நெல்வேர்-சர்க்கரை, நெல்வேர்
இவற்றிற்கு முரிவு.

வெண்பா.

சாற்றுவாய் நெல்வேருஞ் சர்க்கரையுங் கொண்டோர்க்கு
மாற்றெருக்க நல்லிலைச்சா ருமானே—ஆற்றவவ்
வேருடனெள் ளெண்ணெய்க்கு வீறு சுரையிலையாம்
பேரெலுமிச் சம்வேரைப் பேசு.

பேசிடுவாய் நெல்வேர்க்குப் பேய்ப்பீர்க்கின் வேரை
ஆசிலா நீர்விட்டே யட்டுண்பாய்—வீசுகின்ற
நண்ணுவிலா மிச்சம்வேர் நற்குடிநீர் தன்னையே
உண்ணப்போ மென்றே யுரை.

நெல்வேரையும் சர்க்கரையும் சேர்த்துத் தின்றதால் உண்டாகும் நஞ்சிற்கு எருக்கிலைச் சாற்றை உண்டால் அந்நஞ்சு வேகந் தணியும்.

நெல் வேருடன் எண்ணெய் சேர்த்து உண்ட நஞ்சிற்கு, சுரையிலைச்சாருவது குடிநீராவது, எலுமிச்சம் வேர்க்குடி நீராவது உண்டால்மேற்படி நஞ்சு வேகந்தணியும். நெல்வேர் நஞ்சிற்கு பேய்ப் பீர்க்கு வேரை நீர்விட்டு அரைத்து உண்டாலாவது, விலாமிச்சம் வேர்க்குடி நீர் உண்டாலாவது மேற்படி நஞ்சு தீரும். (வி.பி.வி.)

**கோதுமை**

நஞ்சுக் குறிகுணம்.

இதை அளவுக்கு மீறி யுண்பதால், மிகுந்த சூட்டைத் தந்து சிலருக்கு மலச்சிக்கல், சிலருக்குப் பேதியாதல், வயிற்றுப் பொருமல், பசி மந்தப்படுதல் ஆகியவை உண்டாகும்.

**எண்ணெய்**

நஞ்சுக் குறிகுணம்.

இதை அளவுக்கு மீறி யுண்டால், நெஞ்சு கரிப்பு, மந்தம், வயிற்றில் எண்ணெய் சிக்கிச் சங்கடஞ் செய்தல், ஆசனவாய் அடைப்பு, புத்தி எதிலுஞ் செல்லாமை, என்பவையுண்டாம்.

கோதுமைக்கும், நல்லெண்ணெய்க்கும் முரிவு.

வெண்பா.

விட்டிடுவாய் கோதுமைக்கு வெய்ய மிளகாயும்
மட்டிலான் பானெய்யு மாகுமே—திட்டமுடன்
எள்ளெண்ணெ யுண்டா லெழிலூசற் பட்டைதனைக்
கொள்ளப்போ மென்றே குறி.

கோதுமை நஞ்சுக்கு, மிளகாய், பசுவின்பால் நெய் முதலியவற்றைச் சமயத்திற்குத்தக்கவாறு கையாடினால் மேற்படி நஞ்சு வேகந்தணியும்.

நல்லெண்ணெய் நஞ்சுக்கு ஊசற்பட்டையை அரைத்துத் தின்றாலும் குடி நீரிட்டுக் குடித்தாலும் நஞ்சு வேகந் தணியும். (வி. பி. வி.)

**எருக்கு**

நஞ்சுக் குறிகுணம்.

இதன் பாலை யநேகமாக மருந்திற்கு உபயோகிக்கிறார்கள். அன்றிக் கர்ப்பச்சிதைவுக்கும் சிசுஹத்திக்குங்கூட இதனை உள்ளுக்குப் பிரயோகிக்கிறார்கள்.

இதைப் பிசகாக உபயோகிக்கப்பட்ட இடத்தில் விரணத்தை உண்டுபண்ணும். உள்ளுக்குக் கொடுக்கில் வாய், வயிறு முதலியவைகள் விரணமாவதுடன் வாந்தி, பேதி முதலியவைகளையும் விளைவிக்கும்.

முறிவு.

வெண்பா.

புகலெருக்கம் பாலுக்குப் பொற்புடைய வெள்ளும்
தகவுடைய சர்க்கரையுந் தானும்—மிகுபருத்தி
வானிலையிற் காடிதனை வார்த்தரைத்துக் கொள்ளப்போம்
சீர்நிசியே ரண்டநெய்யாஞ் செப்பு.

எள்ளை ஒரு வராகனெடையாக சருக்கரையுடன் சேர்த்துத்தின்னக் கொடுத்தாலும், பருத்தியிலையைக் காடி வார்த்தரைத்துக் கொட்டைப் பாக்களவு கொடுத்தாலும், மஞ்சட் பொடியும் சிற்றாமணக்கு நெய்யும் கலந்து உச்சிக் கரண்டி கொடுத்தாலும், மேற்படி நஞ்சு வேகந் தணியும்.

" கானு மெருக்குக் கண்டவுட னல்லெண்ணெய்
ஆனதினி மாவிலிங்கை யாகுமே " என்றபடி.

நல்லெண்ணெய் வேளைக்கு $\frac{1}{2}$ பலமாக 3 அல்லது 5 வேளையுட் கொண்டாலும், மாவிலிங்கப்பட்டை $\frac{1}{4}$ பலம் தண்ணீர் விட்டரைத்துக் கொடுத்தாலும் தீரும். **(வி.பி.வி.)**

**சதுரக்கள்ளிப்பால்**

நஞ்சுக் குறிகுணம்.

இதைத் தனியாகவாவது, வேறு ஒன்றிற் கலந்தாவது அளவுக்கு மீறிக் கையாண்டால், பேதியதிகரித்தல், அது விரைவில் நிற்காமையால் இரத்தமாய்ப் பேதியாதல், வாந்தி, மயக்கம், கைகால் குரக்குவலி வலித்தல், கண் சிவத்தல், சோறு செரியாமை, எப்பம், வயிற்றுப்புசம் முதலியவைகளுண்டாம்.

முறிவு.

" * * * * *
கொள்ளப்போங் கள்ளியின்பால் கொண்டா லாவாரையிலை
மெள்ளவரைத் துண்ண விரும்பு."

ஆவாரையிலை பலம் கால் எடுத்து வெந்நீர் விட்டரைத்து, ஒரு நாளைக் கிரண்டு வேளையாக 3 அல்லது 5 நாள் கொண்டால் கள்ளிப்பாலானுண்டான நஞ்சுகள் தீரும். **(வி.பி.வி.)**

## தில்லைப்பால்

### நஞ்சுக் குறிகுணம்.

இதன்பால் வாடை படின், உடல் பூதம்போல் பாரித்தல், உடலில் மிக்க சூடுண்டாய் அதனுற் பித்தம் மிகுதிப்பட்டு வாய்வரளல், நீர் வேட்கை, சுவை மாறல், பசி மந்தம், பேதி, வாந்தி, என்பன உண்டாகும். இதன் பால் உட் சென்ருல் சகல உறுப்புகளும் வெந்து புண்ணுவதுடன், வாய் நாற்றம் ஆகாரத்தில் அருவருப்பு, சுரமுண்டாதல் ஆகிய துர்க்குணங்களை யுண் டாக்கி மரணத்துக்கு ஏதுவாக்கும்.

### முறிவு.

### வெண்பா.

உரைத்திடுவாய் தில்லைப்பா லூறுசெயின் மாதே
நரைக்கோவைச் சாற்றையுண்ண நன்ரும்—விரைத்தவிளக்
கெண்ணெயுமாங் காரெருமை யின்கோ மயமாகும்
உண்ணெருமை மோரு முகந்து.

தில்லைப்பால் நஞ்சிற்குக் கோவைச் சாற்றையாவது, சிற்ருமணக்கெண் ணெயையாவது, எருமைச்சாணிப்பாலையாவது, எருமை மோரையாவது விதிப்படி உண்டால் மேற்படி நஞ்சு வேகந் தணியும்.

(வி.பி.வி.)

## நேர்வாளம்

நமது நாட்டு மருந்து முறைகளில், நேர்வாளத்தை யொருமிக்கச் சிறந்த மருந்தாகக் கையாடுவார்கள்.

“ சோபியெனு நேர்வாளம் புனிதமாகிற்
சுரரருந்து மருந்தாகு மருந்தாகாது
பாபியதே யாகுமஃதாகா விட்டால்
* * * *

எனத் தேரையர் அருளிச் செய்த சேகரப்பாவிற் கூறியுள்ளவாறு, முறைப்படி தூய்மை செய்யப்பட்ட நேர்வாளம் விண்ணவர்களருந்தும் அரு மருந்திற்கொப்பாகும்.

அவ்வாறு தூய்மையாகாதிருப்பின் பாவி போன்ற கொடிய நஞ்சிற் கொப்பாகும். மேலும், இதை யளவுக்கதிகமாக வேனும், மருத்துவ நூல் களில் இதனை உட்கொள்ளத்தகாதவர்கள் இன்னுர் என்று நீக்கப்பட்ட பேர்களுக்குக் கொடுக்கினும், நஞ்சாகவே முடியும்.

### நேர்வாள நஞ்சுக் குறிகுணம்.

வாய் குமட்டல், வாந்தியும் பேதியுமதிகமாதல், வயிற்றில் புண்ணுண்டா தல், வாய்நீரூறல், ஒரு வேளை வாய் வரளல், கண் சொருகல், மயக்கம், களைப்பு, வியர்வை, கண்டைச் சதையில் ஓர்வித வலிப்புண்டாதல், உடல்

அனல் வீசல், கண் பார்வை மங்கல், வாய்கசத்தல், பல்கறுத்தல், அடிக்கடி மூர்ச்சையுண்டாதல் முதலியனவாம். இதற்கு உடனே முறிவு செய்யா விடில் மரணம் விளையும்.

நேர்வாள நஞ்சுக்கு முறிவு :—

1. * * * * *
* * * *—வெல்லரிய
வாளந்தனக் காம் வசம்பி னடலையுமா
நீள்புளிக்கோ தின்னீறு நேர். (வி.பி.வி.)

வசம்புச் சாம்பலையும், புளியங் கோதின் சாம்பலையும் வகைக்கு 2 விராக னெடைகூட்டி உழக்கு நீர் விட்டு ஒரு ஆழாக்காய்க் குறுக்கி, இரண்டு மணி நேரத்திற்கொரு முறை, காலாழாக்கு வீதம் கொடுக்க வாந்தியும் பேதியும் நிற்கும்.

2. கால் பலம் சீரகத்தைத் தேனில் வதக்கி $\frac{1}{2}$ படி நீர் விட்டு உழக்காய்க் குறுக்கி வேளைக்கு $\frac{1}{2}$ ஆழாக்கு வீதம் நாள் ஒன்றுக்கு 4, 5, முறை கொடுக்கத் திரும். (அநுபவம்.)

3. (1) நெய்ச்சட்டிக் கீரை வேர்ப்பட்டை பலம் $\frac{1}{4}$, (2) முருங்கை வேர்ப் பட்டை பலம் $\frac{1}{4}$, (3) பன்னீர்ச் செடி வேர்ப்பட்டை பலம் $\frac{1}{4}$, (4) சீரகம் பலம் $\frac{1}{4}$, இவைகளைக் குடிநீர் செய்து இரண்டு வாரம் காலை மாலை கொடுத்து வர இதன் கொரேத் தன்மை தணியும். (தே. ய. வெ. உ.)

**சித்திரமூல வேர்**

நஞ்சுக் குறிகுணம்.

இது நமது நாட்டு மருத்துவர்களால் மிகுதியாய்க் கையாளப்படும் மூலிகை. இதன் வேர்ப்பட்டையைச் சிதைத்து உடலின் தோலிற் பூசினல் அவ்விடத்தில் தோல் சிவக்கும்; எரியும்; புண்ணுமுண்டாகும்.

சில மூடப்பெண்கள் கருச்சிதைவுக்காக இதன் வேரையரைத்து யோனித் துவாரத்துள் செலுத்துவார்கள். சில வேளைகளில், இது கருப்பை வாய் வரை புண்ணுக்கி விடுவதுமுண்டு.

இம்மாதிரியான துர்ப்பிரயோகங்களினல் கருப்பை புண்ணுவதுடன் தேக நிலையுங் கெட்டு மரணத்துக்கு மிடந்தரும்.

இதை உள்ளுக்கு அளவுக்கு மிஞ்சிக் கொடுக்கின் வயிற்றில் அழற்சியையும் எரிச்சலையுமுண்டாக்கி மரணத்தையுங்கூட உண்டாக்கும்.

முறிவு.

வெண்பா.

நாட்டாய் கொடிவேலி நல்வேர் தனக்குநீ
கூட்டாய் நறுநெய்யைக் கூசாமல்—வாட்டமிலா
மாட மரைத்ததனை மாதே திலநெய்யில்
போட்டுவடை யாக்கிப் புசி.

(1) பசு நெய்யைக்குடித்தாலும், உளுந்தையரைத்து நல்லெண்ணெயில் வடையாகச் சுட்டு உண்டாலும், (வி.பி.வி.)

(2) பேய்ப் பீர்க்கு, கோரைக் கிழங்கு ஆகிய விரண்டையும் சேர்த்துக் கியாழ மிட்டுக் கொடுத்தாலும் விடம் நீங்கும்.

**சேங்கொட்டை**

நஞ்சுக் குறிகுணம்.

இதை நம் நாட்டு மருத்துவர்கள் மிகுதியாகக் கையாள்கின்றூர்கள். முறைப்படி தூய்மை செய்து கையாள அமிர்தத்தினும் மிக மேன்மை வாய்ந்ததாகுமிது. அப்படி செய்யாவிடில் சிறு அளவிலும் உடலைக் கெடுக்கும். அன்றி, இதை இந்நாட்டுப் பெண்கள் கள்ளப் பிள்ளைகளை யழிப்பதற்குக் கையாள்கின்றனர். தூய்மை செய்த பின்னரும் அளவுக்கதிகப் படின் நஞ்சுத் தன்மையே புரியும்.

இதற்குத் தோலில் கொப்புளமுண்டாக்கும் செய்கை யிருக்கின்றபடியா லுடம்பிற்பட்ட மாத்திரத்தில் வேக்காட்டை விளைவித்து விரணமாக்கும். செவ்வையாக முடியாத மருந்தைக் கொள்ளில், வாய், வயிறு, குடல், முதலியன விரணமாகிச் சிலசமயம் மந்தம், எரிச்சல், வாந்தி, பேதி முதலியவைகளை விளைவிக்கும். உடலை யூதப்பண்ணும். உடலில் வெப்பத்தை யதிகப்படுத்தி வியர்வைக் குருவைப் போற் சிறு கொப்புளங்களை விளைவிக்கும். தூக்கத்தைக் கெடுத்து உடலுக்கு இன்னும் பல துன்பங்களை யுண்டாக்கிச் சில காலங்களில் சாவையும் விளைக்கும். பொதுவில் இதில் இரசத்தின் வன்மை இருக்கின்றபடியினுல் இதனுல் விளையும் துன்பங்களனைத்தும் இரசத்தின் குற்றத்திற்கு ஒப்பாகும்.

முறிவு.

வெண்பா.

சுகநீங்குஞ் சீடியெண்ணெய் சொல்லுமுடல் விம்மின்
வகையாகச் செங்கல் வறுத்து—மிகப்பொடிசெய்
தொற்றுமெழு கெண்ணெயுடன் காய்ச்சிமேற் பூசுவையேல்
வற்றுமுட லென்றே மதி.

மேற்படி சேராங்கோட்டை நெய், உடல் மேற்பட்டு அதனுல் அவ்வுடல் ஊதிவிட்டால், செங்கல்லைப் பொடி செய்து வறுத்துடலில் ஒற்றடம் போட்டு, மெழுகையும் நல்லெண்ணெயும் சேர்த்துக் காய்ச்சி மேலுக்கும் பூசினுல், ஊதினவுடல் வற்றிப் போய்விடும். (ந.மு.72.)

**சேராங் கொட்டைப்**

பாலால் உண்டாகும் புண்ணுக்கு முறிவு.

வெண்பா.

ஆனமாஞ் சீடி யலர்புண் ணதுவானுல்
நானமுத்தக் காசுடனே நற்கந்தம்—தேனுநல்
எள்ளுடனே யேல மிவைதா னரைத்துமிக
விள்ளுடல் பூச விடும்.

கோரைக்கிழங்கு, சந்தனம், எள், ஏலரிசி, சரி எடைகூட்டி நீர் விட்டரைத்துத் தேனிற் கலந்து உடல் மேல் பூச மேற்படி புண் நீங்கும். (ந.மு.72.)

உட்கொண்டவர்களுக்கு.

புசிப்பாய்நீ சேங்கொட்டை போற்றியுண் டோருக்
கிசைப்பா மெகினத் திலையை—விசைப்பாக
நன்ரு யிடித்தாற்றி னன்னீரி லேகலந்து
குன்ருமற் பாண்டத்திற் கூட்டு.

கூட்டி யிளநீரின் கொண்டமேற் ருேல்போக்கி
வாட்டமற முன்சொன்ன மாநீரில்—போட்டட்டு
நற்பருப்பை முன்தின்று நன்னீர்பின் னுண்டக்கால்
பொற்கொடியே போகும் புகல்.

சேங்கொட்டை யுட்கொண்டவர்கட்கு, புளியிலையை நன்ருயிடித்து அதன் அளவுக்கு ஆற்று நீர் 8 பங்கு சேர்த்து அதில், மேல் தோல் சீவின ஒரு இளநீரைப் போட்டு வேகவைத்து அந்தத் தேங்காய் வழுக்கையைத் தின்று அந்நீரையும் உட்கொள்ளச் சேராங் கொட்டையின் வேகம் தணியும்.

(வி.பி.வி.)

**மஞ்சள் அலரி.**

இதை, நம் நாட்டுத் தோட்டங்களில் மிகுதியாகப் பயிரிடுகிருர்கள். இது ஓர் பூச் செடி. இதன் காய், பூ, இலே, பால் யாவும் விடமாகும். அன்றி இவற்றில் விதைப் பருப்பும், எண்ணெயுங் கூடின், கொடிய நஞ்சாக முடியும்.

நம் நாட்டில் தற்கொலே புரிந்து கொள்வதற்கு இதன் பருப்பை எண்ணெயுடன் கூட்டி உபயோகிப்பதுண்டு. இதில் ஓர் விதத் துர் நாற்றமும் வெறுப்புச் சுவையுமுள்ள காரணம்பற்றி இதைப் பிறரைக் கொலே செய்வதற்கு உபயோகிப்பதில்லே.

நஞ்சுக் குறிகுணம்.

வாந்தி, பேதி, வாயில் நுரைதள்ளல், வயிற்றுக் கடுப்பு, மயக்கம், பற்கிட்டிக் கொள்ளுதலாகிய குறி குணங்களே விளேவித்து, விடமித்த சில மணி நேரத்திற்குள் மரணத்தையுண்டாக்கும்.

முறிவு.

வெண்பா.

உண்ணலரி யெள்ளெண்ணெ யூற்றியரைத் துண்டோர்க்கு
வண்ணகடு வின்குடிநீர் வாட்டுமே—நண்ணும்
முடிமேன் முடிக்கிழங்கை மூட்டிடு வெந்நீரில்
துடியாந்துருசு முண்ணச் சொல்.

(1) அலரிக்கிழங்கை நல்லெண்ணெயுடன் சேர்த்து அரைத்துட் கொண்டவிடத்திற்கு, கால் பலம் கடுக்காயை $\frac{1}{8}$ படி தண்ணீரில் சேர்த்து பாதியாக வற்ற வைத்து அருந்தினும்,

(2) கலப்பைக்கிழங்கு $\frac{1}{4}$ பலம், $\frac{1}{4}$ படி நீர்விட்டு பாதியாகக் குடிநீர் காய்ச்சிக் கொடுத்தாலும்,

(3) துருசு குன்றி எடை எடுத்து வெந்நீரில் கலக்கிக் கொடுத்து வாந்தி செய்வித்தாலும் மேற்கண்ட அலரியின் வீறு தணியும். (வி.பி.வி.)

## ஊமத்தை

நஞ்சுக் குறிகுணம்.

இதில் மயக்கத்தைக் கொடுக்கும் குணம் இருப்பதால் பிறர் அறிவை மயக்க, வேசிகளும் திருடர்களும் இதன் இலை, பூ, விதை இவைகளைக் கையாளுவார்கள். அன்றி, இது கோழையை இளக்குந் தன்மையையு முடையதால் சுவாச காச நோயுள்ளவர்கள் இதின் பூவைச் சுருட்டாகச் சுருட்டிப் புகை பிடிப்பார்கள். இது இந்நற்குணங்களை உடையதாயினும், இதை அளவுக்கு மிஞ்சிக் கையாடினல் பல தீய குணங்களை யுண்டாக்கும். அவை :—பிதற்றல், மயக்கம், தொண்டை வரட்சி, தலை சுற்றல், நடைதடுமாறல், கண்பார்வை மங்கல், முகம் சிலுசிலுத்தல், கண்மணி விசாலித்தல், கண்டபடி பேசல், ஆடல், பாடல், பயித்தியக்காரனைப்போல் தோன்றல், தன் ஆடை முதலியவைகளைக் கிழித்தல், சுவாசம் குறைதல் முதலிய குணங்களை உண்டாக்கி முடிவில் மரணத்தையும் விளைவிக்கும். சிலர்க்கு வயிறும் பொருமிக் காணும். இதன் நஞ்சு உடம்பில் இருக்கும் மட்டும் கண்மணி விசாலித்திருக்கும்.

முரிவு.

வெண்பா.

போமேயூ மத்தை புசித்தல் மரைக்கிழங்கைத்
தேமேவு காடிவிட்டுத் தின்னப்போம்—ஆமவுரி
வேராகும் வாந்தி விழவருந்தி வெள்ளழிஞ்சில்
வேருணச் சாற்றிலரைத் துண்.

ஊமத்தையைப் புசித்து நஞ்சானல் தாமரைக்கிழங்கைப்புளித்த தண்ணீர் விட்டரைத்து நோய் வன்மைக்குத் தக்க அளவிலருந்திஞலும், நீலிவேர்ப்பட்டையை மேற்படியாக வரைத்துண்டாலும், வாந்திக்குக்கொடுத்து வாந்தியானபிறகு அழிஞ்சில் வேர்ப்பட்டையை எலுமிச்சம்பழச்சாற்றிலரைத்து நஞ்சு வன்மைக்குத் தக்க அளவில் உண்டாலும் மேற்படி நஞ்சுவேகந் தணியும். (வி.பி.வி.)

## எட்டிக்கொட்டை

நஞ்சுக் குறிகுணம்.

இதையுண்டு சிலர் தற்கொலை புரிந்துகொள்வதுண்டு. நமது நாட்டில், பலபேர் இதைத் தாது விருத்திக்காகத் தினத்திற்குத் தினம் அளவை அதிகப்படுத்தி யுண்டு வருவார்கள். ஆனல், இதுபோலவே அளவு கடந்த நாட்கள் உட்கொண்டுவந்தால் தாது விர்த்தி செய்வதை ஒழித்து நரம்புத் தளர்ச்சியை யுண்டாக்கும். இப்பழக்கம் பெண்கட்கிருந்தால் மலட்டையுண்டாக்கும்.

இதை உட்கொண்டால் வாயில் ஓர் வித கைப்புச்சுவை, விறுவிறுப்பு, வாந்தி, வாயில் நீர் சுரத்தல், பேதி, மூச்சடைப்பு, கண்மணி அகன்றிருத்தல், இசிவு, தனுர்வாதத்தைப்போல் வளைதல், குரக்கு வலியைப்போல் கைகால் முடங்கி வலித்தல், உடல்தளர்ச்சி, மயக்கம், அறிவு திகைத்தல் முதலியன விளைந்து சாதலுண்டாதலுண்டு.

முரிவு.

வெண்பா.

எட்டிதின் றோர்கட் கெழினவற் பட்டைதனைத்
தட்டியரைத் தேகொடுக்கத் தான்றிரும்—வட்ட
மரைக்கிழங்கா மூனனின் வானிலையின் சாறும்
ஒருக்கடுக்காய் நற்குடிநீ ரோது.

ஓதவுரி வேர்த்தோ லுடனரைத்துக் கொள்ளப்போம்
தீதிலா வெற்றிலையுந் தீர்த்துவிடும்—மாதேகேள்
வெந்தயமு நன்மிளகும் வெந்நீரி லேயரைத்
தந்தவெண்ணெ யிட்டருந்தப் போம்.

என்னும் வெண்பாக்களிற் சொல்லப்பட்டபடி (1) புறணி நீக்கப்பட்ட நாவற்பட்டையை ஈரத்துடனரைத்து வேளை ஒன்றுக்குக் கொட்டைப் பாக்களவு நாள் ஒன்றுக்குக் காலை மாலை 2 வேளையும் 5 நாள் கொடுக்க அல்லது நஞ்சு தீரும் வரைக்கும் அருந்தினாலும்,

(2) தாமரைக்கிழங்கை மேற்படியாக செய்து கொடுத்தாலும்,

(3) ஊனனிலைச்சாறு வேளைக்கு வீசம் படியாகக் கொடுத்தாலும்,

(4) கொட்டை நீக்கிய கடுக்காய்த் தோலை முறைப்படிக் காய்ச்சி வேளைக்கு வீசம் படியாகக் குடித்தாலும்,

(5) அவுரி வேர்ப்பட்டையை நீர் விட்டரைத்து வேளைக்குக் கொட்டைப் பாக்களவாக 3 அல்லது 5 நாள் வரைக்கும் கொடுத்தாலும்,

(6) வெற்றிலையை யரைத்து மேற்படிபோ லுண்டாலும்,

(7) வெந்தயம் 1/8 வராகனெடை, மிளகு 1/8 வராகனெடை சேர்த்து வெந்நீர் விட்டரைத்து வெண்ணெய் கூட்டி 3 அல்லது 5 நாள் வரை கொடுத்தாலும், அந்நஞ்சின் கொடுமை தணியும். (வி.பி.வி.)

வேறு.

வெண்பா.

" போமெட்டி யெண்ணெய்தனிற் போந்தவிடந் தானுனல்
ஆங்கதலிப் பூரசமு மார்காயம்—தேங்க
அரைத்துக் குடிக்க வகலுகமே யென்றார்
தரித்தவுல கோருக்குத் தான் "—

" * * * * *
* * *—நேர்த்தியாய்
குங்குமப்பூ மயில்துத்தம் கொள்ளவினி வாந்தியாம்
தங்குமெட்டிக் கேயிதுவுஞ் சாற்று "— (ந.மு.72.)

வாழைப்பூச் சாற்றால் 1 விராகனெடை பெருங்காயத்தை அரைத்து 3 வேளை அல்லது 5 நாள் கொடுத்தாலும், குங்குமப்பூ 1/8 விராகனெடை, மயில்துத்தம் 1/8 விராகனெடை இவைகளைச் சேர்த்து வெந்நீரால்அரைத்து 3 அல்லது 5 நாள் கொடுத்தாலும் வாந்தியாம்; எட்டியின் நஞ்சு மாறும்.

## அபினி

நஞ்சுக் குறிகுணம்.

இது போஸ்தக்காயின் பால். இதை உலகிற் பலர் தற்கொலைசெய்து கொள்வதற்குக் கையாள்கிருர்கள். குழந்தைகளுக்குச் சிறிய அளவிற் கொடுத்தாலும் நஞ்சுத் தன்மையையே காட்டும். இதை அளவுக்கு மீறி உண்டால், ஒரு விதக்களிப்பை யுண்டாக்கிப் பிறகு உடல் ஸ்மரணையற்றுப் போதல், தலைசுற்றல், சோம்பல், மந்தம், மலக்கட்டு, வருத்தமாய் மூச்சு விடல், மூச்சுத்தடை, முகம் வெளுத்தல், உடல்கறுத்தல், வியர்வை விடல், கண்மணி குறுகல், சிலசமயம் விரிதல், சிலவேளை வாந்தி, இழுப்பு, முகமும் வாயும் கோணல், சித்தப்பிரமை என்பவைகள் உண்டாம். இப்படி இரு ந்து சிலவேளை சாவையும் உண்டாக்கும்.

முறிவு.

வெண்பா.

செப்புவாய் நல்லபினி தின்ருேர்க்கு நெய்யாகும்
ஒப்பரிய வீருள்ளி யோட்டுமே—இப்புவியில்
சம்பீர நற்கனியின் சாருகுஞ் சுக்குமாம்
நம்பவுரைத் தோமிதனை நாம்.

அபினியைத் தின்ற நஞ்சுக்கு நெய்யையாவது, வெங்காயத்தையாவது, எலுமிச்சம்பழச்சாற்றையாவது, சுக்குத் தூளையாவது, சுக்குக் குடி நீரையா வது உண்ண மேற்படி நஞ்சு வேகந் தணியும். (வி. பி. வி.)

வேறு.

இலைக்கள்ளி வேர் கால் பலம், கோரைக்கிழங்கு கால் பலம், வசம்பு கால் பலம், சுக்கு கால் பலம் இவைகளை விதிப்படி குடிநீர் செய்து இரண்டு வாரங் குடித்தால் அபினி நஞ்சும், கஞ்சா நஞ்சுந் தீரும். (தே. ய. வெ. உ.)

## கஞ்சா

நஞ்சுக் குறிகுணம்.

இது ஒரு மயக்கத்தைக் கொடுக்கும் பொருள். இதன் இலை, மொக்கு. கட்டை, பால் முதலியவைகளை மருத்துவர்கள் கையாளுவார்கள். தற்கொலை செய்யும் பொருட்டும், கர்ப்பத்தை அழிக்கும் பொருட்டும், தாது விருத்தி யின்பொருட்டும், பெரும்பாடு, வயிற்றுக்கடுப்பு, பேதி, அதிசாரம் முதலிய வற்றிற்கும் கையாளுவார்கள்.

அப்படிக் கையாளுவதில் அளவுக்கு மிஞ்சிஞல்தான், ஆகாயத்திற் பறப் பதுபோன்ற மயக்கம், ஆடுதல், பாடுதல், சிலவேளை யாருடனும் பேசாமல் பிரமை பிடித்தவன் போலிருத்தல், கண்மணி விசாலித்தல், அடிவயிற்றி லும், மார்பிலும், வலியும் எரிச்சலுமுண்டாதல், மார்படைத்தல், வாயும் நெஞ்சும் உலர்தல், உறங்குதல், கண்ணெரிச்சல், வாந்தி இவைகள் உண்டா வனவன்றி, நஞ்சு அதிகப்படுமானுல் சாவையும் உண்டாக்கும்.

முறிவு.

வெண்பா.

குறித்திடுவாய் கோரக்கர் மூலிக்குச் சுக்கை
எரித்திடுநீ ருண்டால் விலகும்—நறுங்குழலாய்
சம்பீரச் சாறுந் தனிக்கதலிப் பட்டையினீர்
உம்பரமு தொக்குமதை யுண்.

கஞ்சாவின் நஞ்சிற்குச் சுக்குக் குடிநீரையாவது, எலுமிச்சம்பழச் சாற்றையாவது, வாழைப்பட்டையை இடித்துப்பிழிந்த நீரையாவது நஞ்சு வன்மைக்குத் தக்க அளவு உண்டால் மேற்படி நஞ்சு வேகந் தணி யும். (வி. பி. வி.)

குறிப்பு.—அபினி முறிவுக்குக்கூறிய இலைக்கள்ளி வேராதிக் குடிநீரும் கஞ்சா விடத்தைப் போக்கும்.

**நாபி**

நஞ்சுக் குறிகுணம்.

இதை நம் நாட்டு மருத்துவர்கள் சர்வ சாதாரணமாய் மருந்துகளிற் கையாள்வதுண்டு. இது செய்யவேண்டிய முறைப்படி சுத்தி செய்யப்படா விடினும், அளவுக்கு அதிகப்படினும் ஒரு வகை நஞ்சுத் தன்மையை விளை விக்கும். இது, நஞ்சை விளைவித்த காலத்து நாக்கு, வாய், முகம் இவை விறு விறுத்தலுமல்லாமல் திமிர் பிடித்தது போலிருத்தல், நமைச்சல், தடியால் அடித்ததுபோல் உடம்பெல்லாம் வலி, உடல் புகை நிறமாதல், வயிற்றுக்கடுப்பு, அரோசகம், வாந்தி இவைகளை யுண்டுபண்ணிப் பின்பு வாந்தியில்லாமை, நாடி தளர்ந்தும் குறைந்தும் உணர்ச்சிக்குத் தோன்ரு மை, ஆழ்ந்த மூர்ச்சை, பலவகைக் கனவு கண்டு மனக்கிலேசத்தோடு தூங்கு தல், அடிவயிறு கனத்தல், ஆசனங்கடுத்து பேதியாதல், அதில் சிறிது இரத்தம் விழல், விக்கல் என்னும் இவைகள் உண்டாம்.

முறிவு.

வெண்பா.

நாவிதின் றேர்கட்கு நற்கா சினிவேரை
மேவியே யான்பானெய் விட்டரைத்துண்—ஆவினெய்யில்
பன்றிவிட்டை கொண்டரைத்துண் பன்னுகடுக் காய்க்குடிநீர்
என்றுமதை யோட்டு மியம்பு.

இயம்புபுத்ர சோகிவித்தை யேற்றசுரை நெய்யில்
நயம்பெறநீ யுண்டிடவே நாட்டு—வயம்பெருகு
வெண்காரந் தன்னைமுன்னெய் விட்டரைத்து ணன்மிளகைப்
பண்மொழியா யுண்டிடநீ பார்.

பார்முள்ளிக் காயளவு பைம்மீன் றசையரைத்துச்
சேர்சுரபி வெண்ணெயிட்டுத் தின்னப்போம்—வார்குழலாய்
ஆனமயிற் றுத்தத்தை யங்கனைபால் விட்டரைத்துத்
தானருந்திற் றீருமென்றே சாற்று.

நாபியைத்தின்று உண்டாம் நஞ்சுக்கு—

(1) காசினியின் வேரைப் பசுவின்பாலிலாவது, பசுவின் நெய்யிலாவது அரைத்து நஞ்சின் வன்மைக்குத் தக்க அளவு உண்டாலும்,

(2) பன்றி மலத்தைப் பசுவின் நெய்யாலரைத்து உண்டாலும்,

(3) கடுக்காய்த் தோலை விதிப்படி குடிநீர் செய்து உண்டாலும்,

(4) புத்திரசோகி விதையைப் பசுவின் நெய்யாலரைத் துண்டாலும்,

(5) வெங்காரத்தைப் பசுயின் நெய்யாலரைத்து உண்டாலும்,

(6) மிளகைப் பசுவின் நெய்யாலரைத்து உண்டாலும், குடிநீர் செய்து குடித்தாலும்,

(7) பச்சைமீனின் ஊனை நன்குயரைத்து முள்ளிக்காயளவு எடுத்து பசுவின் வெண்ணெய் சேர்த்துண்டாலும்,

(8) மயில்துத்தத்தைப் பெண்கள் முலைப்பால் விட்டரைத்து உண்டாலும் மேற்படி நஞ்சு வேகந் தணியும். (வி. பி. வி.)

வேறு.

சிறுகீரை வேர் பலம் கால், ஓமம் பலம் அரை, விளாம்பட்டை பலம் கால் இவைகளை விதிப்படி குடிநீராக்கி, உப்பு கால் பலம் அதில் போட்டு ஒன்று முதல் மூன்று வாரம் சாப்பிட்டு எண்ணெய், கடுகு நீக்கிப் பத்தியம் இருக்க வேண்டும். (தே. ய. வெ. உ.)

**புகையிலை**

நஞ்சுக் குறிகுணம்.

வெண்பா.

கண்புகையு நெஞ்சுலருங் கைகா லயர்ந்துவரும்
வெண்புகையாய் மேனி வெளுக்குமே—பண்பாய்க்கேள்
ஈரல் கருகிவரு மிந்திரிய நட்டமாம்
பாரும் புகையிலையின் பண்பு. (அ. ப. சி.)

புகையிலையை நம் நாட்டில் பலவகையாகக் கையாள்வதுண்டு. அதைப் பக்குவப்படுத்திக் கடைந்து மூக்குத் தூளாகவும், புகை பிடிப்பதற்கும், வெற்றிலைப் பாக்குடன் போட்டுக்கொள்வதற்கும் கையாள்வது வழக்கம். அன்றியும், அதன் மெல்லிய காம்பை ஆமணக்கு நெய் தடவிக் குழந்தைகளின மலக்கட்டுக்கு ஆசனவழியாய்த் திரியாக வைக்கவும், கட்டிகட்கும், விரைவீக்கக் குத்தலுக்கும் கட்டாகவும் வைத்துக் கட்டுவதுண்டு. இதை யதிகமாகக் கையாண்டால் உடலிலுள்ள இரத்தங்கெட்டு இருதய பலவீனம் உண்டாகிக் கிருமி, சோபை, பாண்டு முதலிய நோய்கள் விளைந்து தாது நஷ்டமுண்டாம்.

மேலும், நாடி யாரம்பத்தில் மந்தப்பட்டுப் பிறகு தீவிரமாய் நடத்தல், சுவாசத்தடுமாற்றம், தலை சுற்றல், மயக்கம், களைப்பு, வாந்தி, வயிற்றுக்கடுப்பு, பேதி, முதலிய நோய்களை விளைவித்தல், கண் புகைதல், நெஞ்சுலரல், கைகால் அசதி, ஈரல் கருகல், ஆகிய இவை நேரிடும். அன்றி, ஒருவேளை மரணத்தையு முண்டாக்கும்.

முறிவு.

வெண்பா.

உண்பாய் புகையிலையை யுட்கொள்ளி னல்லகத்திப்
பண்பான கீரைதின்னப் பாறுமே—நண்பாகக்
குறிஞ்சாவின் கீரையுள்ளி கூறுநற் சீரம்
உரம்பெறவட் டுக்குடிநீ ரோட்டு.

(1) அகத்திக்கீரையை கறியாகப் பக்குவப்படுத்தி உண்டாலும்,

(2) குறிஞ்சானிலை, வெள்ளுள்ளி, நற்சீரகம் ஆகிய மூன்றையும் வகைக்கு ஒரு வராகனிடை இடித்துப்போட்டு ஆழாக்கு நீர்விட்டு $\frac{1}{4}$ ஆழாக்காகக் காய்ச்சி காலை மாலை 2 வேளையாக, 3 அல்லது 5 நாள் குடித்தாலும் மேற்படி புகையிலை நஞ்சு திரும். (வி. பி. வி.)

**இரத்தபோள**

நஞ்சுக் குறிகுணம்.

இரத்தபோள நஞ்சானல் உடலின்மேல் புண்ணுதல், வேதல், சிவத்தல் என்னும் குறிகளும், உள் வேக்காடு, வாந்தி, சுவைமாறல் என்பவைகளும் உண்டாகும்.

**மருந்திட்டு**

நஞ்சுக் குறிகுணம்.

மருந்திட்டின் நஞ்சால் இளைப்பு நோயில் காணும் குறிகுணங்கள் பெரும்பான்மையுண்டாகும். (105-ஆம் பக்கத்தைப் பார்க்க.)

இரத்தபோளத்திற்கும் இடுமருந்திற்கும் முறிவு.

வெண்பா.

ஓரிரத்த போளத்தை யுண்டார்க்கு மானேகேள்
பேரரத்தை நற்குடிநீர்ப் பேசுவாய்—சீராய்
இடுமருந்தைக் கொண்டோர்க் கியன்றகருஞ் செம்பை
இடுவிலைச்சாற் றைமாவி லீ.

ஈவா யிடுமருந்திற் கேற்றபெரும் பூசினிக்காய்
தாவாய்க் கடலையிட்டுத் தான்கூட்டே—ஓவாமல்
ஐயவி குய்நீக்கி யருந்துவாய் நீலியின்வேர்
மொய்குழலா யுண்ண மொழி.

மொழிந்திடுவாய் செங்காஞ்சி மூதிலைச் சாறுன்னிப்
பிழிந்தெடுத்து நெல்லவலிற் பெய்தே—செழுங்குழலாய்
தின்னப்போம் பச்சைச் செனிகையைத் தின்றாற்போம்
நன்னயமாய்ச் சொல்வாய் நயந்து.

மருந்திடு முறிவு.

வெண்பா.

மாட்டுப் பறங்கிக்காய் மாநிலத்தி லுண்டாருக்
கூட்டு மருந்து மொழியுங்காண்—தேட்டமாய்
நாட்டிற்கு நல்ல நவைதீர் மருந்திதனைத்
தாட்டிகமா யுண்ணத் தகும். (க. தே. த.

பேரரத்தையை விதிப்படி குடிநீர்செய்து இரத்தபோள நஞ்சு வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால் மேற்படி நஞ்சு வேகந் தணியும்.

இடு மருந்தால் வருந்துவோர்க்குக் கருஞ்செம்பையிலைச் சாற்றை அரிசி மாவில் கலந்து நஞ்சு வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தாலும்,

பெரும்பூசினிக்காயில் கடலை சேர்த்துக் கூட்டு செய்து, கடுகு தாளிப்பு நீக்கித் தக்க நாளளவு கொடுத்தாலும்,

நீலியின் வேரையரைத்துக் கழற்சியள வுண்டாலும்,
செங்காஞ்சியிலைச் சாற்றை நெல்லவலிற் கலந்து தின்றாலும்,
பச்சைக் கடலைப் பருப்பைத் தின்றாலும் மேற்படி நஞ்சு வேகம் நீங்கும்.

(வி. பி. வி.)

### பொது முரிவு

### பெருமருந்து நஞ்சுக்கு

அறுசீர் விருத்தம்.

பாரிசச் சரக்கி னால்செய் பன்மருந் தவைக ளாற்செய்
வாரிசப் பிணிகட் கெல்லாம் மாரிச மருந்தே தீர்க்கும்
சாரிச மாவ தில்லை சாரிச மான திதே
நேரிச மாகு மென்ன நீட்பிணி யினங்கட் கம்மா.

பலசரக்குகளினாற் செய்யப்பட்ட பெருமருந்தின் குற்றங்களை விலக்குவது மிளகொன்றேயாம். ஆகையால், மிளகை நெய் விட்டு வறுத்துப் பொடி செய்து உண்ணும் முதற் பிடி சாதத்தில் ஷ பொடியைக்கூட்டி பசுவின் நெய்யைச் சோரவிட்டுண்டாகிலும் அல்லது மிளகைக் கியாழஞ் செய்தாகிலும் குடிக்கலாம். (வாகடசந்திரோதயம்.)

### அநுபான தோடத்திற்கு முரிவு

அநுபானத் தோடாண்மையை
இனமாகத் தேறு மிஞ்சியே.

அநுபான தோஷத்தால் வரும் பிணியை விலக்க இஞ்சிச் சாறாகும்.

(ஆயுள்வா சிட்டம்.)

### உலோக தோடத்திற்கு முரிவு

எண்சீராசிரிய விருத்தம்.

வினவப்பா புலத்தியனே மகனே யிந்த
மேதினிப்பே ரானதொரு லோகந் தன்னிற்
கனமான லோகமென்ப திரும்பொன் றேயாம்
கருமைசெம்மை வெண்மையிவை களினால் வந்த
வினையான தவைகளுக்குக் கரும்பொன் னாலவ்
வினமான தனித்ததனை யொழிக்க வேண்டித்
தனமான விதைக்கோடி யுண்மை யென்ப
சற்குருவிற் றுணையாகச் சாற்றி னேனே.

(அ. 21,000.)

அயம் நீங்கலான மற்ற லோகங்களிற் செய்யப்பட்ட பற்ப செந்தூர மாத்திரைகளினால் வரும் நஞ்சை, அயச்செந்தூர பற்பம் அல்லது அயங் கலந்த மாத்திரைகளைக் கொடுக்கச் சந்தேகமின்றி நிவர்த்தியாக்கும்.

### குடிநீர் தோடத்திற்கு முரிவு

கலி விருத்தம்.

அடரு மாறுக ஷாயத்தி னுல்வரு
மிடரை நீக்கி யிருமை யளிப்பது
படரும் வேலிப் பருத்திய தென்னவே
தொடரு மாலைத் தொலைக்கு மருத்தமே.

குடிநீரால் உண்டாகும் தோடத்தை நீக்குவது உத்தாமணியின்வேர் அல்லது சமூலமுஞ் சேர்த்துக் காய்ச்சிய குடிநீரே யாகும்.

### உணவு தோடத்திற்கு முரிவு

குறள் வெண்பா.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

உணவின் பேதத்தால் விளையும் அஜீரணம், மந்தம் முதலிய வினைகளை ஒழிப்பதில் குளிர்ந்த நீரே சஞ்சிவிக் கொப்பாகும். (திருக்குறள்.)

### பான தோடத்திற்கு முரிவு

எண்சிராசிரிய விருத்தம்.

தேடப்பா பானத்தி னுலே வந்த
    தீதையினி யொழிப்பதொரு தேனென் றென்பார்
நாடப்பா வதையறிந்து புவிக்கு ளிந்த
    நாடிவழி யறிநோயை நாடிக் கொண்டு
போடப்பா வத்திரம்போ லவிழ்த்த சாலம்
    போட்டுடனே மிப்பதையும் பொருத்திக் கோடி
யாடப்பா நீயிதனை மதுவென் றெண்ணி
    யாயுள்வேதி யர்க்கேதிலக மாவாய் நீயே.

ஆற்றுநீர், ஊற்றுநீர், கிணற்றுநீர், குளத்துநீர், எரிநீர், மழைச் சலம், பனிச்சலம் முதலிய சல பானத்தினுல் வரப்பட்ட குற்றங்களாகிய சலதோடம், பீனசம், அற்பசீதளம், சீதளம், தலைவலி, தொண்டைவலி, மார்ச்சளி, ஈளை முதலான தோடங்களைத் தேனினுலாகிலும் அல்லது தேனும் சலமும் விளாவிய பானத்தினுலாகிலும் போக்கிவிடலாம்.

(போகர் 3000)

---

## 3. சீவ வகுப்பு.

இஃது, உயிருள்ள அஃறிணை உயர்திணை என்னும் இருவகைப் பிராணி களின் கடியால் உண்டாகும் நஞ்சாம்.

**நஞ்சுயிர்களின்**
**தொகை வகை.**

எண்சீர் விருத்தம்.

" கூறுகிறேன் முருட்டுப்பல் பொரியின் விரியன்
கொண்டகரு முதுகிஞல் வெடித்த குஞ்சு
வீறுகிற சர்ப்பமெட் டிராசா வொன்று
விரியனிலே பதிஞறு வகையே யாகும்
வாறுகிற வழலைநால் மூக்க னிரண்டு
வருஞ்சுருட்டை நாலாகுஞ் சாரை யஞ்சு
கருநாகம் பரநாகம் கன்னெஞ்ச னுமைக்
கண்ணெரிய னைந்நாகங் கடிய கொம்பே.

கொம்பேறி யிரண்டாகும் பச்சைப் பாம்பு
கூறுகிறேன் சவடிரண்டு மண்ணுளியு மொன்றே
அம்புசெறி புடையனிலே பதிஞ றுகும்
அம்மம்ம மன்றெலியிற் பதிஞ றுகும்
வம்புபெறு * * * *
வளமான விருதலையின் மணிய ஞென்று
துன்பமிட்ட எலியிலொரு பதிஞ றுகும்
துட்டனும் நச்செலிசுண் டெலியு மாமே.

ஆமப்பா செய்யானி லாற தாகும்
ஆறுகால் பூச்சிநால் சிலந்தி யெட்டாம்
ஓமப்பா புலிமுகத்துப் பூச்சி யொன்றும்
உத்தமனே பல்லியிலே பதிஞ றுகும்
தாமப்பா எட்டுவகைப் பூரா னுண்டு
தாரணியில் வண்டுநூற் றிருப தாகும்
சேமப்பா வோந்தியொரு பத்து மாகும்
செவ்வட்டை யெட்டுவிதஞ் செப்பினேமே.

செப்பினேம் அரணைவிடம் நால தாகும்
திறமான தேள்விடம் பனிரண் டாகும்
ஒப்பரிய காலிவிடம் நால தாகும்
ஓணத்திற் றவளைபத் தட்டை யாறு
தப்பில்லை முதலையது மூன்று மாகும்
தாரணியிற் புலியஞ்சு பூனை யஞ்சு
செப்பியதோர் பேய்நரியும் பேய்நா யோடு
பேய்க்கீரிப் பிள்ளையுநாய் நரியு மாகும்
மெய்ப்பப்பா முந்நூற்று முப்ப தாகும்
மேதினியி னிறைந்தவிட மின்னங் கேளே.

கேளப்பா நீர்வாழுஞ் சாதி தன்னில்
கெட்டவிட மதனுக்கி லக்கோ வில்லை
ஆரப்பா தொகையறிந்து சொல்லப் புகுவார்."

(பொ - ரை.)—முருட்டுப்பல்லையுடைய விரியனானவன் சூல்கொண்டு முதுகு வெடித்ததனால் உண்டாம் குஞ்சுகளில்—

சர்ப்பம் 8, இதில் இராசா ஒன்று, விரியன் 16, வழலை 4, மூக்கன் 2, சுருட்டை 4, சாரை 5, கொம்பேறி 2, கருநாகம், பரநாகம், கன்னெஞ்சன் ஊமை, கண்ணெரியன் என்னும் நாகம் 5, பச்சைப்பாம்பு 1, சவடு 2, மண்ணுளி 1, புடையன் 16ம் இவையன்றி, இவற்றிற்கு வேறான நஞ்சுயிர்களில் மன்றெலி 16, இருதலை மணியன் 1, துன்பம் விளைக்கும் எலி 16, நச்செலி 1, சுண்டெலி 1, செய்யான் 6, ஆறுகால்பூச்சி 4, சிலந்திப்பூச்சி 8, புலிமுகத்துப்பூச்சி 1, பல்லி 16, பூரான் 8, வண்டு 120, ஓந்தி 10, செவ்வட்டை 8, அரணை 4, தேள் 12, நட்டுவக்காலி 4, தவளை 10, அட்டை 6, முதலை 3, புலி 5, பூனை 5, பேய்நரி, பேய்நாய், பேய்க்கீரிப்பிள்ளை, நாய், நரி, இவைகள் முந்நூற்றுமுப்பது, நீர்வாழ் இனத்தில் கணக்கின்மை ஆக நஞ்சுயிர்கள் பலவாயிருக்கின்றன. (வி. ஆ.)

இஃதன்றி, இந்நஞ்சுயிர்களை,

“ புண்டரிகத்தி லுறைவோன் — படைப்பினில்
பொல்லாத விடசெந்து வெல்லாம்நனி
விண்டுரைக்க நிகேளாய் — நல்லபாம்பு
விரியன் வழலைகொம் பேறிமூக்கன்

சாணாகம் மூக்கன்புடையன் — மண்டலி
சவுடி மயக்கரா மண்ணுளிசாரை
வாணுளி வாட்டுஞ்செய்யான் — இருதலை
மணியன் சிலந்திபுலி முகப்பூச்சி
தேட்புள்ளி வண்டுபூரான் — பச்சோந்தி
செவ்வட்டை பேய்நரிநாய் செருச்செயெலி
வாட்பல்லிப் பூனைபுலி — பிலவங்கம்
வனத்திற் றவளையட்டை வாசிமுதலை
அரணை நண்டுத்தெறுக்கால் — முதலிவை
யல்லாத செந்துவு மனேகமுண்டு ”. என (சி. ஆ.) கூறும்.

ஆனால், முன்னர் கூறியவற்றில் அவ்வவற்றிற்குத் தொகை சொல்லப்பட்டிருக்கிறது, பின்னர் சொல்லப்பட்ட செய்யுளில் அத்தொகை காணப்படவில்லை. அன்றிச் சில நஞ்சுயிர்கள் அதிகமாகவும் காணப்படுகிறது. எவ்வாறுயினும் முன்னர் சொல்லப்பட்ட பாட்டின்படி அந்நஞ்சுயிர் வகைகள் கிடைக்கவில்லை. நிற்க,

விடப்பாம்புத் தொகை (64 வகைப்படும்).

அவை :—

| | | |
|---|---|---|
| (1) | படமெடுத்தாடும்பாம்பு | 8 |
| (2) | விடப்பற்கொண்டு சீறிப்பாய்ந்து தீண்டும் விரியன் | 6 |
| (3) | சாடிக்கடிக்கும் குணமுள்ள விரியன் | 4 |
| (4) | புடையன் பாம்பு | 6 |
| (5) | மண்ணுளிப்பாம்பு | 6 |
| (6) | சாரைப்பாம்பு | 3 |
| (7) | சுருட்டைப்பாம்பு | 4 |
| (8) | வளைப்பாம்பு | 2 |
| (9) | கொம்பேறிமூக்கன் | 2 |
| (10) | சாணாகமூக்கன் | 2 |
| (11) | வழலைப்பாம்பு | 6 |
| (12) | தண்ணீர்ப்பாம்பு | 6 |
| (13) | பச்சைப்பாம்பு | 2 |
| (14) | இருதலைமணியன் | 1 |
| (15) | மலைப்பாம்பு | 5 |
| (16) | பூநாகம் | 1 |
| | ஆக | 64 |

இவைகளன்றி - சில்விடங்கள் பலவாம்.

இவ்வாறாக விடப் பாம்புத் தொகை 64 எனகெருட பஞ்சாட்சர ஆரூடம் கூறினும், கெருடாரூடமும் நாகாரூடமும் அரவின் உற்பத்திக்குத் தலையாய் ஆதிசேடனன்றி அட்டநாக முதலாக பலவுண்டென்றும், இவைகள் கீழ்க்கண்ட பிரிவினையுடைய தென்றுங் கூறும்.



மேலும்,

“ வீரான சர்ப்பமெட்டு ராசா ஒன்று
    விரியனிலே பதினறு வகையே யாகும்
வாருன வழலேநாலுனி மூக்க ரண்டு
    வருஞ்சுருட்டை நாலாகுஞ் சாரை யஞ்சு
கருநாகம் பரநாகம் கல்நெஞ்ச னூமைக்
    கண்ணெரிய னஞ்சா நாகன் கடியகொம்பே

கொம்பே றிரண்டாகும் பச்சைப் பாம்பு
    கூறுகிறேன் சவடிரண்டு மண்ணுளியு மாகும்.
அம்புசெறி புடையனிலே பதினறுகும் ” என்று (விடசங்கார ஆருடம்)
    கூறும்.

### முன்னர் வகுத்துள்ள சர்ப்பங்களின் பிறப்பு முதலியன.

சர்ப்பங்கள் ஆனித்திங்களில் புணர்ந்து, ஆடி ஆவணித் திங்கள்களில் வயிறுளைந்து, கார்த்திகை மாதத்தில் பொன் - எருக்கம்பூ வெண்மை ஆகிய நிறங்களாக 248 முட்டைகளையிட்டு எழுநாள் அடைகாக்குமென்றும், அம்முட்டைகளில் ஆண் முட்டைகள் முகிழ்விரியாத எருக்க மொக்கைப் போலும், பெண் முட்டைகள் வாகை அரும்பைப்போலும் இருவகை யாக விருக்குமென்றும், அதையீன்ற தாயானது, எழு நாட்குள் 228 முட்டைகளைப் புசிக்குமென்றும், 4 முட்டைகள் அழியுமென்றும், மற்ற 16 முட்டைகள் பொரிந்து குட்டிகளாக உலவுமென்றும், அக்குட்டிகட்கு ஊளை போன்ற 24 கால்களிருக்குமென்றும், இவைகள் பிறந்த 28-ம் நாளில் பரிதியை நோக்கிப் படத்தை விரித்தாடி விடத்தைப் பெற்றுக்கொண்டு தனித்தனியே பிரியுமென்றும், 60-ஆம் நாளில் சட்டையுரிக்குமென்றும், 6-வது திங்களில் எயிறு நஞ்சு வால் இவை ஒளிபொருந்தித் தோன்று மென்றும், இவைகள் ஒருவனைக் கடிக்கும்போது கடிக்கப்பட்டவன் இறப் பானே இறக்கமாட்டானே வென சந்தேகப் படுமென்றும், இவைகளுக்குக் கண்களே செவியாக விருக்குமென்றும், வாயின் கீழ்வரிசையில், காளி, காளாத்திரி என இரண்டு பற்களும், மேல்வரிசையில் எமன், எமதூதன் என்ற இரண்டு பற்களும், உண்டென்றும், இந்நஞ்சுகள் மணி, மந்திர, மருந்தாதிகட்கு அஞ்சுமென்றும், சித்தர் ஆருடம் முதலிய நூல்கள் கூறு நிற்கும்.

### கடிவாய் மணத்திலிருந்து இன்ன பாம்பு கடித்ததென அறிதல்.

பாம்பு கடித்துப் பல்லழுந்திய இடத்தை முகர, தாழைமலர் மணம் கமழின் நல்லபாம்பு, பாதிரிப்பூ மணம் வீசின் வழலைப்பாம்பு, புளியம்பூ மணம் வீசின் விரியன்பாம்பு, மல்லிகைப்பூ மணம் வீசின் மண்டலிப் பாம்பு, மிளகு, சுக்கு இவைகளின் மணம் வீசின் சிறிய பாம்பு எனக் கணிக்க. இம்மணங்களில் எம்மணமும் வீசாவிடின் பாம்புக்கடியல்ல வென்று உணர்ந்து மற்ற செந்துக்களின் கடி இலக்கணங்களினின்று ஆராய்ந்து அறியவேண்டும்.

### கடியால் தீக்குணமுண்டாகும் இடம், அவயவம், சமயம், திதி, நட்சத்திரம், திசைமுதலியன இதுவென அறிதல்.

**இடம்.**

(1) அரசமரம், (2) ஆலமரம், (3) ஆற்றுத்திட்டு, (4) ஏரிக்கரை, (5) ஐயன் கோயில், (6) கிணறு, (7) சந்தை கூடுமிடத்து மரம், (8) சுனைக் கரை, (9) தேரடி, (10) நதிக்கரை, (11) நந்தவனம், (12) நாணற்புதர், (13) நீர்வற்றிய தாமரைத் தடாகம், (14) பாழடைந்த கோயில், வீடு, ஊர், (15) புதுமனை, (16) புற்று, (17) பிரப்பம்புதர், (18) புளிய மரம், (19) புன்னைமரம், (20) மயானம், (21) முகத்துவாரம், (22) முச்சந்தி நாற்சந்தி கூடும் வீதி, (23) முருங்கை மரம், (24) மூங்கிற்புதர், (25) யாக சாலை, (26) பிடாரி (துர்க்கை) கோயில், இவ்விடங்களில் எச்சாதிப் பாம் பாகினும் அந்தி சந்திப் பொழுதில் கடிக்கில், அதனுல் நேரிடும் விடக் குணம் தீராவாம்.

**அவயவம்.**

(1) பஞ்சேந்திரியம், (2) தலை, (3) நெற்றி, (4) புருவமையம், (5) தாடை, (6) உதடு, (7) தாழ்வாய்க்கட்டை, (8) தோள், (9) நெஞ்சு, (10) அக்குள், (11) தனம், (12) மார்பு, (13) அடி மார்பு, (14) உள்ளங்கை, (15) வயிறு, (16) கொப்பூழ், (17) ஆண்குறி, (18) குதம், (19) உள்ளங்கால், (20) கீல், (21) நெறி இவ்விடங்களில் கடிக்கில் மரணமுண்டாகும்.

**சமயம்.**

(1) அயர்ந்து நித்திரை செய்கின்ற காலம், (2) இடி அல்லது மின்ன லுண்டாகும் நேரம், (3) பாம்பு அடைகாக்கும் சமயம், (4) சூரியோதய காலம், (5) நடுநிசிப்பொழுது இச்சமயங்களில் கடிக்கில் விடம் எளிதில்தீரா.

**திதி.**

பருவம், அமாவாசை, பிரதமை, பஞ்சமி, அட்டமி, நவமி, இத்திதி களிலும்—

**நட்சத்திரம் - திசை முதலியன.**

பரணி, கார்த்திகை, ஆயிலியம், விசாகம், பூரம், பூரட்டாதி, பூராடம், சதயம் இந்நட்சத்திரங்களோடு கூடிய பருவகாலத்திலும், நிருதி மூலையி லும், அசுர முகூர்த்தத்திலும் பாம்பு கடிக்கில் அசாத்தியம். மகம், திருவோணம், மூலம், சித்திரை, சோதி, இந்நட்சத்திரங்களிலும், பிறந்த நாள், அநுசன்ம, திரிசன்ம நாள் இவை சேர்ந்த அவிட்ட நட்சத்திரத்தி லும், நவமியிலும் வீட்டிறப்புகளிலிருந்து கடித்தாலும் அசாத்தியமே.

**தீரா (பாம்பு)விடக் குறிகுணம்.**

பாம்பு கடி விடத்தால், தலைமயிர் உதிர்தல், மூர்ச்சை, மேற்சுவாசம், மார்புகனத்தல் - குத்தல், வாந்தி, விக்கல், இருமல், தாகம், உடல் நடுக்கல், முடிசோர்தல், கண் சிவத்தல், அல்லது கறுத்தல், தொண்டையடைப்பு, நாசிமெலிந்து தாழ்ந்து சில்லிடல், முதுகும் ஆண்குறியும் கோணுதல், முகஞ் சில்லிட்டுக் கறுத்தலுடன் உரோமமும் சில்லிடுதல், வாயில் நுரை விழல், மலமூத்திரம் நழுவல், நவத்துவாரங்களிலும் இரத்தம் வெளிப்படல், கீல்கள் தளர்தல், பல் நாவற்பழநிறம் பெறுதல், முதுகு ஆமை ஓட்டைப் போல் உயர்தல், கடிபட்டவிடத்தில் செந்நீர் கம்மி வீங்குதல், காலுங்கை யும் கறுத்தல், ஏறின விடம் மணி மந்திர மருந்துகளால் இறங்குகையில்

உதடு, நகம், உள்ளங்கை கறுத்தல் ஆகிய குறி குணங்கள் நேரிட்டால் அசாத்தியமாகும். மேலும், கடிப்பட்டவன் பார்வைக்குச் சூரிய சந்திர நட்சத்திரங்களின் ஒளி தோன்றாவிட்டாலும், கண்ணாடி, எண்ணெய் போன்ற திரவப்பொருள் முதலியவைகளில் முகம் தெரியாவிட்டாலும் அசாத்தியமே.

கடித்தவுடன் படத்தை விரித்தாடினாலும், நிலத்திற் புரண்டாலும், கடித்தவிடத்தில் ஆடி, பிறகு அசைவற்றுக் கிடந்தாலும், விடம் தீரா.

**மறையோர்சாதிப் பாம்பு.**—சத்துவகுணமுள்ளது. படமெடுத்தாடும்போது படம் மேல் நோக்கி நிற்கும். படத்திற் காணப்படும் புள்ளி பொன்னிறம்போன்றதாயிருக்கும். சிவாலயத்தில் தங்கும். தேன், பால், பழம் உண்ணும். நிறம் வெண்மை. மணம் நாபி. படத்தில் காணும் உருவம் சங்குவளை. வான் நோக்கும். சனிக்கிழமை இரவிலும், ஞாயிற்றுக்கிழமை காலையிலும் இரை எடுக்க வெளிவரும். மற்றகாலங்களில் காற்றையும் மலர் வாசனைகளையும் கொள்ளும். அச்சமயம் எதிர்ப்பட்டவர்களை முன் பக்கத்திலும், வலது பக்கத்திலும் தீண்டும். அக்கடிவிடத்தால் வாதம் அதிகரிக்கும்.

**அரசசாதிப் பாம்பு.**—இராசோகுணமுள்ளது. சாந்த குணமின்றி கோபாவேசத்தோடிருக்கும். நீதிவழிப்படும். படமெடுத்தாடும்போது படம் நேராய் நிற்கும். படத்திற் பொருந்திய புள்ளி செந்நிறமாயிருக்கும். மரத்தில் தங்கும். பல்லி முதலிய பூச்சிகளைத் தின்னும். நிறம் பொன். மணம் தாழை மலர். படத்தில் சங்கும் ஆழியுமிருக்கும். நேர் நோக்கும். சனிவாரம் பகலிலும், சோமவாரம் பகலிலும் 20 நாழிகை வரை இரை எடுக்கும். அச்சமயம் எதிர்ப்பட்டவர்களை இடது, வலது பக்கம் தீண்டும். பித்தத்தை அதிகரிக்கும்.

**வணிகசாதிப் பாம்பு.**—சத்துவத்தில் சுத்த தமோகுணமுள்ளது. பிறருக்கு யாதொரு தீங்குமின்றி தன் காரியத்தில் கண்ணுயிருக்கும். படமெடுத்தாடும்போது படம் கொஞ்சம் உள் வளைந்திருக்கும். படத்திற் றோன்றும் புள்ளி வெள்ளியின் நிறத்தை யொக்கும். மலையில் தங்கும். கோழிமுட்டை, எலி இவைகளைத் தின்னும். செந்நிறமும், பாதிரிப்பூ மணமுள்ளது. வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் பகல் 20 நாழிகை மேற்பட்டு வெளிப்போந்து அத்தமிக்கும் வரையில் இரை எடுக்கும். அச்சமயத்தில் எதிர்பட்டவர்களைத் தீண்டும். இதனால் கடியுண்டவனுக்கு கபதோடம் விருத்தியாகும்.

**உழவசாதிப் பாம்பு.**—சத்துவத்தில் கேவலம் தமோகுணத்தைக் கொண்டது. படமெடுத்தாடும் போது படம் மிக வளைந்திருக்கும். படத்திற்காணும் புள்ளி நீல நிறமாயிருக்கும். நிலத்தை நோக்கிப் பார்க்கும். படத்தில் புள்ளடிதோன்றும். புற்றுகளில் தங்கும். தவளை, மீன்களையுண்ணும். கரிய நிறமும், இலுப்பைப்பூ மணமுமுள்ளது. புதன், வியாழக் கிழமைகளில் பகல் 15 நாழிகைக்கு மேல் தீப சமயம் வரையில் இரையெடுக்க வெளிவரும். இச்சமயத்தில் எதிர்ப்பட்டவர்களை இடது பக்கத்திலும், பின் பக்கத்திலும் தீண்டும். கடி விடத்தால் முப்பிணிக் கலப்பு தோடமுண்டாகும்.

இந்நால்வகை சாதிப் பாம்புகளும் இயல்பில் ஒத்திருக்கும். மந்திரத்திற்குக் கட்டுப்படும். மருந்திற்கு விடமிறங்கும்.

**பறைப்பாம்பு.**

நிற்க, இவைகளுக்கு வேற்றுமையாயுள்ள ஒருவகை சாதிப்பாம்புக்குப் பறைப் பாம்பு என்று பெயர். இச்சாதிகொடியது. வேலிகளிலும், சந்து பொந்துகளிலும் வாழும். புழு முதலாகியவற்றை யுண்ணும். ஆணைக்கு அடங்காது.

**எண்வகை நாகங்களின் ஆண் பெண் அறிய.**

பெண் நாகத்திற்குக் கடைக்கண் சிவந்திருக்கும். கண் புடைத்திருக்கும். முட்டையின்மீது அடைகாக்கும். விடும் மூச்சு உழுந்து வாசம் வீசும். படம் ஓர்புறம் ஒதுங்கி நிற்கும். மனிதரைக்கண்டால் மருண்டு ஓட்டம் பிடிக்கும்.

ஆண் நாகத்திற்குக் கடைக்கண் கறுத்திருக்கும். கட்டுக்கடங்கும். கடி விடங்கொடிது. படங்களின் இரண்டருகும் சரியாயிருக்கும் இரேகை ஒத்திருக்கும்.

(நா. ஆ.).

**அரவு தீண்டுவதற்குரிய சமயம்.**

பாழடைந்த கோயில், மனை, புதர்கள், இருண்ட காடுகள், மரப்பொந்துகள், மலைகள், புற்றுகள் ஆகிய இவ்விடங்களில் பாம்புகள் தங்கியிருக்கும். இதைக் கவனிக்காமலும், எச்சரிக்கையுமின்றி துணிவாய் இவ்விடங்களிற் சென்ற காலத்தும், பாம்புகளுக்குப் பசி வந்துற்றபோது அவைகள் இரைக்காக வெளிச்செல்லும் வாரங்களிலும், இடி, மின்னல் இவைகளின் அதிர்ச்சி, ஒலி இவற்றால் கோப மேலிட்டிருக்குஞ் சமயத்திலும் மனிதர் எதிர்ப்பட்டால் அரவந் தீண்டச் சமயம் வாய்க்கும்.

**விடப் பற்கடி அறிய.**

படம் எடுத்தாடும் பாம்புகளுக்குத் தோன்றிய விடப்பற்கள் நான்குண்டு. அவைகளில் மேல்வரிசைப் பற்களிலிரண்டும், கீழ்வரிசைப் பற்களிலிரண்டு மமைந்திருக்கும்.

மேல் வரிசையிலுள்ள விடப்பற்களுக்கு (1) காளி (2) காளாஸ்திரி என்றும், கீழ் வரிசை விடப்பற்களுக்கு, (3) நீலி (4) நீலகண்டி என்றும் பெயர்களாம். இப்பற்கள் நான்கும் தூண்டிமுட் போல வளைந்து துவாரங்களுள்ளனவாய் இருக்கும். பாம்பு ஒருவனைத் தீண்டினால், விடந்ததும்பியுள்ள பல்லினது துவாரத்தின் வழியாய் விடஞ் சென்று இரத்த நாளத்தில் சேர்ந்து, உடல் முற்றும் பரந்து உடலை மயக்கி, உயிரை யடக்கும்.

**விடப்பல் நான்கு - அவற்றுள் ஒவ்வொன்றினாலுமுண்டாகும் தீக்குணம்.**

1. **காளி.**—கடிவாயிற் புள்ளடிபோற் குறியும், செந்நீர்மாறி பனிநீர் போல விடநீருங் காணப்படின், காளி என்கிற பல்கடிக் குணமெனவும்,

2. **காளாஸ்திரி.**—கடிவாயில் முக்கோணம்போற் குறியும், அக்கடிவாயினின்று இரத்தம் பாயின், காளாஸ்திரி என்கிற பல்கடிக் குணமெனவும்,

3. **நீலி (நமன்).**—முள் தைத்ததுபோன்ற கடிவாயும், அதினின்றும் எண்ணெய்போல நீர்பாயின், நீலி என்கிற பல்கடிக் குணமெனவும்,

**4. நீலகண்டி (நமதூதன்).**—கடிவாய் வில்போற்றேன்றி, அதினின்று கருநிற இரத்தம் வடியின், நீலகண்டி என்கிற பற்கடிக் குணமெனவும் அறிக.

மேற்குறித்த நான்கு பற்களின் கடிகள் உண்டானுல், 98 நாழிகைக்குள் விடம் உடம்பின் நரம்புகளைப்பற்றி ஏறும். கண் விழிகள் கறுக்கும். மயக்கத்துடன் சுருண்டு கிடக்கச் செய்யும்.

(நா.ஆ.)

**பற்கடி விடத்தின் தீரும் தீராக்குறி.**

ஒருபற்கடி நஞ்சு தோலைப்பற்றி நிற்கும். இதற்குக் கால்கடி என்று பெயர். இந்நஞ்சு மூலிகைப் பரிகாரத்தினுலேயே இறங்கிவிடும்.

இருபற்கடி நஞ்சு மாமிசத்தைப்பற்றி நிற்க முயலும். இதற்கு அரைக்கடி என்று பெயர். இது அவுடதங்களால் தீரும்.

முப்பற்கடி நஞ்சு எலும்புவரைப்பற்றி ஏறும். இதற்கு முக்கால் கடி என்று பெயர். இது மூலிகைகளினுலும், விடமைகளினுலும் நீங்கும்.

நான்கு பற்பட்ட நஞ்சு மூளையைப்பற்றி ஏறும். இது முழுக்கடி எனப் பெயர் பெறும். இது மணி மந்திர அவுடதங்களால் நீங்குவது கடினம். பிழைப்பதும் அரிது.

(நா.ஆ.)

**பாம்பு நஞ்சுவேகம்—10.**

பாம்பின்கடி நஞ்சின்வேகம் பத்தென்று விட சங்காராருடம் என்னும் நூல் சொல்கின்றது. அவை : (1) பல்வேகம், (2) சலவேகம், (3) வன்னி வேகம், (4) வாயுவேகம், (5) சரவேகம், (6) சரபவேகம், (7) சமர்வேகம், (8) சண்டாளவேகம், (9) காசவேகம், (10) அறுதிவேகம் என்பன.

**1. பல்வேகம், 2. சலவேகம்.**

எண்சீர் விருத்தம்.

ஊட்டியதோர் விடத்தினிட வேகம் பத்தாம்
உற்றவிவை யொளியாம லோதக் கேளாய்
காட்டுமுதற் பல்வேகம் விறுவி றுக்கும்
கருகுமுகங் கண்சிவக்கும் வேறாய் நிற்கும்
ஊட்டுவது மாத்திரைதா னெம்ப தாகும்
உற்றதொரு சலவேக மிரண்டின் செய்கை
வேட்டுவருங் கைகாலும் விறுவி றுத்து
வேர்த்துவிடுங் கடுகடுத்து நீரி றங்கும்.

**3. வன்னிவேகம்.**

நீராகு முடல்முழுதும் பதறி நெஞ்சும்
ஈரல்நடு நடுங்கிமுகம் வெளுத்துக் காணும்
வேறாகி நிறங்குலைந்து விம்மு மாயின்
விளம்பியதோர் குளிகைநா ஊட்ட வேண்டும்
வாரான வன்னிவேக மூன்றின் செய்கை
வருந்தியே யருந்தினதைச் சத்தி பண்ணும்
சோராகி நிற்குமிகத் தலைந டுங்கும்
செணத்திலே படுக்குங்கண் சொருகும் வேர்க்கும்.

### 4. வாயுவேகம், 5. சரவேகம்.

வேர்க்குமிகக் குளிகைநூற் றைம்ப தாகும்
வேகமிது நாலாகும் வாயு வேகம்
குறுகுறுத்து வயிற்றிருந்த வுண்ட சோற்றைக்
குடல்புரட்டு முடல்சோரும் வடியு மூக்கும்
சரசரென்று வயிறேடு நீரு மோடும்
சாற்றியதோர் சரவேக மஞ்ச தாகும்
அறமயக்கந் திருமடா தயில முண்டால்
அருங்குளிருங் காயுமுகம் கருகிப் போமே.

### 6. சரபவேகம், 7. சமர்வேகம்.

கருகுமுகம் விழிகறுத்து மேலுஞ் சோரும்
கலிக்கமிடக் கடியவிடங் கசங்கிப் போகும்.
சரபவேக மாறுகு மறிவ ழிக்கும்
சடுதியிலே வளைந்துநா வொட்டிப் போகும்
விறுவிறுக்கும் பல்லசையும் வடியு மூக்கு
வெறும்பல்லே மெல்லுமது நசிய மூட்டு
பெருவேகஞ் சமர்வேக மேழாம் வேகம்
பேசாமல் மதிமயங்கி மறந்து போமே.

### 8. சண்டாளவேகம்.

மறதியுடன் திகிலடையு மூர்ச்சை யாகும்
மையெழுதி நசியமுடன் குடோரி யாகும்
திறமான சண்டாள வேக மெட்டில்
திகிலடையும் விக்கலுடன் மூச்சு தங்கும்
உரமான நெஞ்சடைக்கு மிரண்டு கண்ணும்
உத்தமனே மேல்நோக்கு மேன்மூச் செறியும்
திருவட்டத் தாமரைப்பூக் கமலத் துள்ளே
தீங்காக நஞ்சேறி நிற்குந் தானே.

### 9. காசவேகம்.

நிற்குநஞ் சுயிரையன்றே சிக்கிக் கொல்லும்
நீகலிக்கம் புகைநசியங் குடோரி மூட்டு
மிக்கவே யொன்பதது காச வேகம்
மிதமின்றித் தேகத்தைக் கிடத்தி நீட்டி
ஒக்கவே யுடல்சோரு முயிருஞ் சோரும்
உடலுயிரு மொன்றுகச் சேர்ந்து நஞ்சு
முக்கியமாய் மூச்சென்ற நினைவு மோடும்
மூடியுமி ரடங்குமடா விடத்தி னாலே.

### 10. அறுதிவேகம்.

விடமான நஞ்சையுயிர் வெல்லா தக்கால்
வெல்லுமடா அஞ்சனங்கு ழம்ப விழ்தம்
திடமான ஒற்றுபுகை பற்றும் போடு
தீருமடா அறுதிவேகம் பத்தே யாகும்

உடனேதா னுயிரோடி யொடுங்கிப் போகும்
ஒளிவான விழிமயங்கி நீல மாகும்
உடலுதிர முதலன்றே நஞ்சாய்ப் போகும்
ஒகோவே கம்பத்திற் பட்டான் பாரே.

(பொ - ரை.) பாம்புக்கடி நஞ்சின் வேகம் பத்தாம் : அவற்றுள்—

(1) **பல்வேகத்தன்மை**—கடிவாய் விறுவிறுத்தலோடு உடம்பு முழுமையும் விறுவிறுத்தல், முகம் கருகுதல், கண் சிவத்தல், முகம் மாறிக் காணல் என்னும் குறிகுணங்களையும் ;

(2) **சலவேகத்தன்மை.**—கைகளும், கால்களும் விறுவிறுத்தல், உடம்பெல்லாம் வேர்த்தல், கடுத்துச் சிறுநீரிறங்கல், உடல் முழுதும் பதறல், உள்ளமும் ஈரலும் நடுங்கல், முகம் வெளுத்தல், நிறம் மாறிக் காணல் என்னும் குறிகுணங்களையும் ;

(3) **வன்னிவேகத்தன்மை.**—உண்டவுணவை வாந்தி பண்ணல், தலை நடுங்கல், திடீரென்று படுத்தல், கண் சொருகுதல், உடல் வியர்த்தல் என்னும் குறிகுணங்களையும் ;

(4) **வாயுவேகத்தன்மை.**—நெஞ்சில் குறுகுறுவென்று ஒலித்தல், உண்ட உணவு வயிற்றிலிருந்தே வாந்தியாகாமற் குடல் புரட்டல், உடல் சோர்தல், மூக்கில் நீர்வடிதல், பேதியாதல், அடிக்கடி சிறுநீர் இறங்கல் என்னும் குறிகுணங்களையும் ;

(5) **சரவேகத்தன்மை.**—தலைமயக்கம், குளிர்காய்ச்சல், முகங் கறுத்தல், விழிகறுத்தல், உடல் சோர்தல் என்னும் குறிகுணங்களையும் ;

(6) **சரபவேகத்தன்மை.**—அறிவழிதல், நாவளைந்து வாயுடன் ஒட்டிக் கொள்ளுதல், உடல் விறுவிறுத்தல், பல்லசைதல், மூக்கு நீர் வடிதல், வெறும் பல்லைக்கடித்தல் என்னுங் குறிகுணங்களையும் ;

(7) **சமர்வேகத்தன்மை.**—வாய் பேசவொண்ணுமை, அறிவு மயங்கல், மறதி, திகில், மூர்ச்சை என்னும் குறிகுணங்களையும் ;

(8) **சண்டாளவேகத்தன்மை.**—மனந்திகிலடைதல், விக்கல், மூச்சடைத்தல், நெஞ்சடைத்தல், இரண்டு கண்களும் மேல் நோக்கல், மேல் மூச்செறிதல், இருதயத்தில் நஞ்சேறி நிற்றல், உயிரைக்கொல்லல் என்னும் குறிகுணங்களையும் ;

(9) **காசவேகத்தன்மை.**—நஞ்சுவேகக் கொடுமையால் இவ்வாறுதான் படுப்பதென்கிற வான்முறையில்லாமலே படுத்தல், உடல் சோர்ந்து மூச்சடங்கல், உயிரின் செயல்—உடலில் நடை பெருமல் அடங்கிவிடுதல், அக் காலத்தில், நஞ்சை உயிர் வெல்லும் வன்மையில்லாக் குறிகுணங்களையும் ;

(10) **அறுதிவேகத்தன்மை.**—கண்பார்வை மயங்கி நீலநிறமாதல், உடலில் ஓடிக்கொண்டிருக்கிற இரத்ததாது முதல் சத்த தாதுக்களும் நஞ்சாகவே மாறிவிடல், உயிர் ஓடிப்போக உடல செயலற்று விழல் என்னும் குறிகுணங்களையும் பெறும். (வி..ஆ.)

இவைகளன்றி வாயுவேகம், வருணவேகம், தேயுவேகம் என மூன்று வேகமுண்டென்றும், அவற்றில், (1) வாயுவேகம் எட்டு, (2) வருண வேகம் பத்து, (3) தேயுவேகம் பத்து என்றும் கூறி, அவற்றின் குறிகுணங் களையும் கூறுவாருமுளர். அவை :

" பிடித்திடும் வேகக்குறி—தனைச்சொல்வன்
பெலத்தெழுவேகமூ வகைப்படுமே
வாயுவின் வேகமெட்டுக் — குளிர்தரு
வருணன்வேகந்தச வகையாகும்
தேயுவின் வேகம்பத்து — மாத்திரை
தெரியின்மூவொன்பது வருணனுக்காம்
காற்றினுக் கைம்பதாகும் — தேயுவுக்கே
காட்டியமாத்திரை தொண்ணூற்றெட்டாம்
சாற்றிய வாயுவின்முதல் — வேகம்வந்து
சார்வுறில்மூர்ச்சித்து வேர்வரும்பும்
இரண்டுக்கு வெதுப்புமுண்டாம் — மூன்றிற்கண்
ணேறிச்செருகிநான்கி லெடுக்குஞ்சத்தி
திரண்டைந்திற் கோழையடைக்கும் — ஆறெனில்
சிறக்குமறிவழியும் விறைத்திடுமேழ்
எட்டாகி லுயிர்போக்கும் — வருணனில்
இயலுமாதிவேகம் மயிர்க்குச்சாய்
நெட்டுடல் முற்றுஞ்சிவப்பாம் — இரண்டுக்கு
நேயவுடல்கரிந்து வாயுமுலர்ந்து
வெதும்பிடு மூன்றாகில் — உள்மயக்கும்
விளங்கியநான்கெனி லுளங்கலங்கித்
ததும்பிடுங் கபமிகுக்கும் — ஐந்தெனில்
தலையைநடுக்கும்நெஞ்சத் தறிவழிக்கும்
ஆறாகிற் கண்விழித்து — மேல்பார்க்கும்
அடுத்திடும்எழெனில் அங்கம்விறைக்கும்
கூறுன் இருநான்கில் — அடக்கமதாம்
குதித்திடுஞ்சுக்கில மொன்பதுக்கென்பார்
பத்தாகில் மரணமதாம் — அங்கியின்
பகர்தருமுதல்வேகம் பார்வைசிவந்து
சத்தான முகங்கருகும் — இரண்டினில்
தடித்திட்டுச்சிறுநீரும் கடுத்திறங்கி
முகம்வெளுத் துடல்முழுது — முரோமம்புல்
முளைத்ததெனத்தழைத்துக் கிளைத்துநிற்கும்
செகமதில் மூன்றாகில் — வாய்குழறிச்
சிந்தைகலங்கியுடல் நொந்துவீழும்
நாலினிற் குடலிரைந்து — சோகமதாய்
நாசியினீர்வடிந்து தேசுமாறும்
மேலெழு மைந்தில்விழி — உடல்முற்றும்
வெடுவெடுத்தாட்ட முற்றிடுமாறில்
பல்கடிப் புண்டாகும் — விறைத்துடல்
பதைக்குமேழிரண்டினில் குதிக்கும்புனல்
சொல்லுரை கெடுமேழில் — எட்டினில்
சுவாசமெழும்விழிமேல் துன்னிநோக்கும்

ஒன்பதி லொடுங்குமுயிர் — பத்தினில்
உடல்விட்டுப்பறந்திடும் உயிர்வானில்
என்புள்ள தேகமதில் — அடக்கமாய்
இருக்குமுயிர்நிலே யியம்புகிறேன்.”

(பொ-ரை.)—நஞ்சேறுவேகம் மூன்றுவகைப்படும் : அவை (1) வாயுவேகம், (2) வருணவேகம், (3) தேயுவேகம் என்பன. இவற்றில் வாயுவேகம் எட்டும், குளிர்ந்த தன்மையுடைய வருணவேகம் பத்தும், தேயுவேகம் பத்துமாக வேகங்கள் இருபத்தெட்டாகும். இவற்றில் வாயு வேகத்திற்கு ஏறுங்கால அளவு ஐம்பது மாத்திரையும், வருணவேகத்திற்கு ஏறுங்கால அளவு இருபத்தேழு மாத்திரையும், தேயு வேகத்திற்கு ஏறுங்கால அளவு தொண்ணூற்றெட்டு மாத்திரையுமாகும். இவற்றில் முதலாவதாகிய வாயுவேகம் எட்டில் : முதல் வேகத்தில் மூர்ச்சையும், வேர்வையும், இரண்டாம் வேகத்தில் வெதும்பலும், மூன்றும் வேகத்தில் கண்மேலேறுதலும், நான்காம் வேகத்தில் வாந்தியாதலும், ஐந்தாம் வேகத்தில் கோழையடைத்தலும், ஆறும்வேகத்தில் அறிவழிதலும், ஏழாம் வேகத்தில் விறைத்தலும், எட்டாம்வேகத்தில் உயிர் போதலுமாம்.

இரண்டாவதாகிய வருணவேகம் பத்தில் : முதல்வேகத்தில், மயிர்க்குச்சம், உடல் சிவத்தலும், இரண்டாம் வேகத்தில் உடல் கரிந்து, வாயுலர்ந்து சுரமடித்தலும், மூன்றும் வேகத்தில் அறிவு மயங்குதலும், நான்காம் வேகத்தில் அறிவு கலங்கிக் கோழைமிகுதலும், ஐந்தாம் வேகத்தில் தலை நடுக்கலும் உள்ளத்தறிவழிதலும், ஆறும் வேகத்தில் கண் மேற்பார்வையாதலும், ஏழாம் வேகத்தில் அங்கங்கள் விறைத்தலும், எட்டாம் வேகத்தில் உயிரடங்குதலும், ஒன்பதாம் வேகத்தில் சுக்கிலம் ஒழிதலும், பத்தாம் வேகத்தில் சாதலும் ஆகும்.

மூன்றுவதாகிய தேயுவேகம் பத்தில்: முதல் வேகத்தில் கண்சிவந்து முகங்கருகிடலும், இரண்டாம் வேகத்தில் உடல் தடித்துச் சிறுநீர் கடுத்திறங்கி, முகம் வெளுத்து, உடல் முற்றும் மயிர்க்குச்சு உண்டாதலும், மூன்றும் வேகத்தில் வாய்குழறி, அறிவுகலங்கி உடல் நொந்து வீழ்தலும், நாலாம் வேகத்திற் குடல் இரைந்து சோகமாய் மூக்கில் நீர்வடிந்து அழகு மாறுதலும், ஐந்தாம் வேகத்தில் கண் ஆடுதலோடு உடல் முற்றும் விடவிடத்தாடுதலும், ஆறும் வேகத்தில் பல்லைக்கடித்தலும், உடல் விறைத்துப் பதைத்தலும், மூக்கில் நீர்வடிதலும், ஏழாம் வேகத்தில் சொற்றடுமாறலும், எட்டாம் வேகத்தில் சுவாசமும், விழி மேல் நோக்கலும், ஒன்பதாம் வேகத்தில் உயிர் ஒடுங்குதலும், பத்தாம் வேகத்தில் உயிர் உடலைவிட்டுப் பிரிந்து விடுதலுமாம். (சி. ஆ.)

**பத்து வேகத்திற்கு மருந்து.**

**1. பல்வேகம், 2. சலவேகம் மருந்து.**

மூட்டுவது கொடிக்கள்ளிக் கொழுந்து சீந்தில்
முடக்கற்றான் கரிசாலை திருநீற்றுப் பச்சை
கூட்டுவது வசம்புள்ளி பெருமரப் பட்டை
கூடவே யெருமுட்டைப்பீ நாறி யோடு

தாட்டியே சிறுநீரில் நசிய மூட்டச்
சடுதியிலே முதல்வேகஞ் சாடிப் போச்சு
மாட்டுமிஞ்சி வேகமஃ திரண்டே கண்டால்
மக்களே மயங்காது மருந்தைக் கேளீர்.

### 3. வன்னிவேகம் மருந்து.

மருந்தென்ன வசம்புள்ளி யாத ளைத்தளிர்
மதிப்பாகக் கழுதைலத்தி சிறுநீர் விட்டுத்
திருந்தவே நசியமுடன் துவாலே பூசச்
செணத்திலே தீருமடா விரண்டாம் வேகம்
அரிதான வேகமது மூன்றுந் தீர
அதிமிளகு திப்பிலியிந் துப்பு சுக்கு
வருங்கடுகு வசம்புள்ளி சார ஊணவேர்
வெற்றிலேயுஞ் சிறுநீரும் நசிய மாமே.

### 4. வாயுவேகம், 5. சரவேகம் மருந்து.

ஆகுநா லாம்வேக மாவினிலே மிளகும்
அரைபலமாங் காடியது படிகா லாகும்
ஓமப்பா நசியமுமா மவிழ்த மாகும்
ஊட்டலா முருக்குமுத லெவ்வ கைக்கும்
தாமப்பா வேகமொரு நாலும் போச்சு
தகுமான வசம்புள்ளி மிளகு நொச்சி
சேமப்பா சிறுநீரில் நசிய மூட்டச்
சிதறியே போகுமடா அஞ்சாம் வேகம்.

### 6. சரபவேகம், 7. சமர்வேகம் மருந்து

வேகமஃ தாருணு விலுப்பைக் கட்டி
விடுநசியஞ் சிறுநீரி லேகிப் போச்சு
பாகமாய் வசம்புள்ளி துளசி தும்பை
பழமிளகு கந்தியுப்பு மூலேயின் பாலும்
ஆகமாம் நசியமிட எழாம் வேகம்
அகலுமே யடக்கமுத லெழுப்ப லாகும்
எகமாய்க் கொடுமையடா வெட்டாம் வேகம்
இதமான மருந்தையினிச் சொல்கின்றேனே.

### 8. சண்டாளவேகம், 9. காசவேகம் மருந்து.

சொல்லுகிறேன் மூலேப்பாலும் கெந்தி தும்பை
துய்யவசம் புள்ளிமிள கிந்துப் பாகும்
வெல்லுமடா நசியமிட வெட்டாம் வேகம்
வேகமினி யொன்பதுக் கவிழ்தங் கேளாய்
நல்லெருக்கம் பால்சீலே தன்னி லூட்டி
நன்ருயி ரவிதனிலே யுலர்த்திக் கொண்டு
நல்வேளேச் சாறுபெரு மரத்தின் பட்டை
நலமாகச் சேர்த்தொன்ருய்க் கலக்கிக் கொள்ளே.

### 10 அறுதிவேகம் மருந்து.

கலக்கியதில் முன்சீலை தனைத்து வைத்து
காயவைத்துப் பத்திரமா யிருக்கும் போது
உலர்த்தியதைச் சிறுநீரில் நய்யத் தட்டி
உள்ளுக்கும் விழிசெவிக்கு நசிய மாகும்
பலத்ததொரு வேகமடா பத்தாம் வேகம்
பாரான நசியமடா பகரக் கேளாய்
நலத்தநல் மிளகுடனே யுள்ளி காயம்
நற்றேற்றுங் காயெட்டிக் காயு மாமே.

எட்டியுடன் மருக்காரை காட்டு மல்லி
எட்டுநாள் வெள்ளாட்டு நீரி லூறத்
திட்டமா யரைத்திடுவாய் முன்னீர் தன்னில்
திரமான சீலையிலே நனைத்துக் காயின்
கெட்டியா யெருப்புகையி லுலர்த்திக் கொண்டு
கிழித்ததிலே மனிதனுக்கு விரலி னீளம்
நட்டியே மிருகமுத லெதுவா னாலும்
நாலுவிர லகலத்திற் றுணியை வாங்கே.

வாங்கியே சீலைதன்னை நையத் தட்டி
வளமாக அவுரிச்சா றதிற்க லக்கி
எங்கியே திரியாம னசிய மூட்ட
எவ்வகைக்கும் விடவேக மெல்லாம் போச்சு.

* * * *

இவ்வேகங்கள் பத்தில் அவ்வவ்வேகங்களிற் கையாளப்படும் மருந்துகளாவன :—

**முதல்-பல் வேகத்திற்கு.**—கொடிக்கள்ளிக்கொழுந்து, சீந்திற்கொழுந்து, முடக்கற்றான்கொழுந்து, கரிசலாங்கண்ணி, திருநீற்றுப்பச்சை, வசம்பு, வெள்ளைப்பூண்டு, பெருமரப்பட்டை, எருமுட்டைப்பீநாறி இவைகளையெல்லாம் சரி எடை எடுத்து நன்றாய்த் தூளாக்கி ஒரு மண்பாண்டத்திலிட்டு அதில் சிறுநீர்விட்டு ஊறவைத்து நாசியில் பிழிந்தால் முதல்வேகந் தீரும்.

**இரண்டாம்-சல வேகத்திற்கு.**—வசம்பு, வெள்ளைப்பூண்டு, காட்டாமணக்கங்கொழுந்து இவைகளைச் சரிஎடை எடுத்துச் சிதைத்து கழுதைலத்திநீரும், சிறுநீரும்விட்டு ஊறவைத்து மூக்கிற் பிழிந்து, மேலுக்கும்பூச இரண்டாம் வேகந் தணியும்.

**மூன்றும்-வன்னி வேகத்திற்கு.**—மிளகு, திப்பிலி, இந்துப்பு, சுக்கு, கடுகு, வசம்பு, வெள்ளைப்பூண்டு, சாரணைவேர், வெற்றிலை இவைகளைச் சரி எடை எடுத்துச் சிதைத்துச் சிறுநீரில் ஊறவைத்து மூக்கில் பிழிய மூன்றும் வேகந்தணியும்.

**நான்காம்-வாபு வேகத்திற்கு.**—மாவிலை, மிளகு, வகைக்கு அரைபலம், இவைகளை யிடித்துக் காற்படிக் காடியில் ஊறவைத்து மூக்கில் பிழிந்தும், உள்ளுக்குங்கொடுத்தால், முருக்கு முதலிய எவ்வகைப்பாம்பின் நான்காம் வேகந்தணியும்.

**ஐந்தாம்-சர வேகத்திற்கு.**—வசம்பு, வெள்ளைப்பூண்டு, மிளகு, நொச்சிக்கொழுந்து இவைகள் சரிஎடை எடுத்துச் சிறுநீரில் ஊறவைத்து மூக்கிற் பிழிய அஞ்சாம் வேகந்தணியும்.

**ஆரும்-சரப வேகத்திற்கு.**—இலுப்பைக்கட்டியைப் பொடிசெய்து சிறுநீரில் ஊறவைத்து மூக்கிற் பிழிந்தால் ஆரும் வேகந்தணியும்.

**ஏழாம்-சமர் வேகத்திற்கு.**—வசம்பு, வெள்ளைப்பூண்டு, துளசி, தும்பை, மிளகு, கந்திஉப்பு இவைகளைச் சரிஎடை எடுத்து இடித்து ஒரு மண் சட்டியிலிட்டு அதில் முலைப்பால்விட்டு ஊறவைத்து மூக்கில் பிழிய ஏழாம் வேகந்தணியும். அடங்கியிருக்கும் உயிரையும் எழுப்பலாகும்.

**எட்டாம்-சண்டாள வேகத்திற்கு.**—கந்தகம், தும்பையிலை, வசம்பு, வெள்ளைப்பூண்டு, மிளகு, இந்துப்பு இவைகளைச் சரிஎடை எடுத்து நறுக்கி ஒரு மண் சட்டியிலிட்டு முலைப்பால்விட்டு ஊறவைத்து மூக்கிற் பிழிய எட்டாம் வேகந் தணியும்.

**ஒன்பதாம்-காச வேகத்திற்கு.**—எருக்கம் பாலில் துணித்துண்டைப் போட்டு ஊறவைத்து அத்துணியை வெயிலில் உலர்த்திக்கொண்டு அத்துணியில் ஒரு சதுர அங்குலந்துணி கிழித்து, வேலைச்சாறும், பெருமரப் பட்டைச் சாறும் சரியளவாய்க்கலந்து அச்சாற்றில் அத்துணியை நனைத்துக் காய வைத்துக்கொண்டு வேண்டும்போது சிறு நீரில் நனைத்துச் சிறிது உள்ளுக்குப்புகட்டிய பின் கண், காது மூக்கிற் பிழிந்தால் ஒன்பதாம் வேகந் தணியும்.

**பத்தாம்-அறுதி வேகத்திற்கு.**—மிளகு, வெள்ளைப்பூண்டு, பெருங்காயம், தேற்றுங்காய், எட்டிக்காய், மருக்காரைக்காய், காட்டுமல்லிகைப்பட்டை, இவைகளெல்லாவற்றையும் சரி எடையாக எடுத்துச் சிதைத்து ஒரு மண் சட்டியிலிட்டு அதில் வெள்ளாட்டுநீர் விட்டு எட்டுநாள் ஊறவைத்து, ஒன்பதாவது நாள் அந்நீரினுலேயே அரைத்து அதில் ஒரு சீலையை நனைத்து அச்சீலையை எருமுட்டைப்புகையில் உலர்த்தி வைத்திருந்து, எவ்வுயிரால் கடிக்கப்பட்ட நஞ்சேறிய மனிதனுயிருப்பினும் ஒருவிரல் நீளமும் நாலுவிரல் அகலமுமாக அத்துணியைக் கிழித்து அதை நையப் பஞ்சுபோற்றட்டி அவுரிச்சாற்றில் ஊறவைத்தெடுத்து மூக்கிற் பிழிந்தால் பத்தாம் வேகந்தணியும். (வி. ஆ.)

தும்பையானது தலைக்கேறிய நோய்த்தோடங்களுக்கும், நஞ்சு தோடங்களுக்கும் மூக்கிற்பிழி மருந்துகளில் உயர்வுடையதால் அது, பாம்பின்கடி வேகத்திற்குக் கூறப்பட்ட நசியங்கள் பலவற்றிற்குஞ் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

தும்பை நசியப்பொருள்களில் உயர்ந்ததென்பதை ;

நசியந்தலை வலிமற்றது நசியந்தக னுமே
நையத்தெறு மையப்பிணி நவ்விக்கிது புலியே
நமனுக்கொரு நமன்வெற்றியை நறுக்கிப்பிழி மூக்கில்
நளிருஞ்சுரங் குளிருந்தலை நடுக்கம்பிணி விடுக்கும்.

எனத் தேரையர் கரிசலிலும் புகன்றிருப்பதாலறிக.

**பாம்புக்கடி விடந்திர கலிக்கம் ; நசியம்.**

பூச்சடா காயமரி தாரங் காரம்
புகழ்கந்தி யிந்துரசம் கடுகு கூட்டிச்
சூட்சமடா பேய்ப்பீர்க்கஞ் சாற்று லாட்டிச்
சுகமாகக் குன்றியெடை கலிக்கம் போடு

காட்சியாம் வசம்புள்ளி காயம் காரம்
கடியநேர் வாளமரி தாரங் கந்தி
விச்சான வவுரிஉத்தா மணியும் மேனி
விரவியே சிறுநீரில் நசியஞ் செய்யே.

### கலிக்கம்.

(பொ-ரை.)—பெருங்காயம், அரிதாரம், வெங்காரம், கந்தகம், இந்துப்பு, வாலரசம், கடுகு இவைகளைச் சரியளவாக எடுத்திடித்துப் பொடிசெய்து குழிக்கல்லிலிட்டுப் பேய்பீர்க்கஞ் சாற்றால் அரைத்து அதில் ஒரு குன்றி யளவெடுத்து நஞ்சுற்றார் கண்களில் கலிக்கம் போடவேண்டும்.

### நசியம்.

(பொ-ரை.)—வசம்பு, வெள்ளைப்பூண்டு, பெருங்காயம், வெங்காரம், நேர் வாளம், அரிதாரம், கந்தகம் இவைகளைச் சரிஎடை எடுத்து அவுரிச்சாற்றினா லும், உத்தாமணிச்சாற்றினாலும் குப்பைமேனிச் சாற்றினாலும் அரைத்து மாத்திரைசெய்து ஒரு மாத்திரையை ஒரு மெல்லிய துணியில் முடிந்து சிறுநீரில் ஊறவைத்து அதை மூக்கில் பிழியவேண்டும்.

இப்படிச் செய்தால் மேற்படி நஞ்சுயிர்கள் கடித்ததனாலுண்டாம் நஞ்சுகள் தீரும்.

### ஆக்கிராணம்.

சொல்லக்கேள் மூஞ்சூறும் பச்சைப் பாம்பும்
சுகவாழைத் தண்டிலுப்பைப் பழமு மின்னம்
நல்லகாட்டா மணக்கிலையும் சமனாய்ச் சேர்த்து
நற்பொடியாய் நாசியிலே குழை யிலூதில்
வல்லவிட மோடியுயி ருண்டாம் பாரே
* * *

(பொ-ரை.)—மூஞ்சூறு, பச்சைப்பாம்பு, வாழைத்தண்டு, இலுப்பைப் பழம், காட்டாமணக்கிலை இவைகளைச் சரியெடையாய் எடுத்து உலர்த்திப் பொடியாக்கி நாசியிற் குழைவைத்து அதில் அத்தூளையிட்டு ஊதினால் நஞ்சுயிர்க் கடியினாலுண்டாகும் வன்மையான விடங்கள் ஓடிப்போம். அடங்கிப்போனவுயிர் மீண்டும் வெளிப்படும். (வி. ஆ.)

### ஒற்றடம்.

"நசியமுமாந் துவலையுமாம் கலிக்க மாகும்
நன்றாக வெந்நீரில் கொடுக்க லாகும்
விசையான வெருக்கெட்டி புன்க ழிஞ்சில்
விளாவிலுப்பை பெருமரவேர் பேய்க்கு மட்டி
இசைவாக வேர்சமனாய்ச் சிறுநீர் விட்டங்
கிடித்தவற்றை வறுத்தன்றே வொற்றிப் போடு."

(பொ-ரை.)—எருக்கு, எட்டி, புன்கு, அழிஞ்சில், விளா, இலுப்பை, பெருமரம், பேய்க்குமட்டி இவற்றின்வேர்கள் எல்லாவற்றையும் சரி எடை யாய் எடுத்துச் சிறுநீர்விட்டு இடித்து வறுத்து ஒற்றடம் போடவேண்டும்

இவ்வாறு ஒற்றடம் போடுவதுமல்லாமல் நசியமாகவும் துவாலையாகவும், கலிக்கமாவும் கையாடலாம். அல்லாமல் அளவுகண்டு வெந்நீரிற் கூட்டியும் கொடுக்கலாம்.

**ஒற்றடம்.**

ஆதளையாதி ஒற்றடம்.

சொல்லுகிறேன் ஒற்றடங்கள் விடத்துக் கெல்லாம்
சூட்சமடா அவுரிசெங்கத் தாரி யாகும்
நல்வாகை ஆதளையுங் குமரி மூலம்
நல்காடி விட்டிடித்து வறுத்துக் கொண்டு
எல்லைதலை பாதவரை ஒற்றிப் போடாய்
இன்னமொரு ஒற்றடத்தைச் சொல்லக் கேளாய்

வேளையாதி ஒற்றடம்.

நல்வேளை மேனிசுக்கு முருங்கை வேரும்
நாட்டுமத்தை யெருக்குத்தா மணியு மாமே.
ஆமப்பா சிறுநீர்விட் டிடித்து மங்கே
அத்தனையும் பொன்னிறமாய் வறுத்துக் கொண்டே
ஓமப்பா ஒற்றவிடம் ஒடு மென்றே
ஒதினர் சூதமுனி பற்று முற்றில்
தாமப்பா முறுக்கிடங்கள தன்னைக் கேளாய்
தானுள்ளி வசம்புவட்டத் துத்தி யொடு
ஊமத்தை நறுதாளி முருக்கு மாச்சு
உள்ளிவசம் புடனனே வணங்கி யாகும்.

(பொ-ரை.)—விடங்களுக்கெல்லாம் ஒற்றடத்தைச் சொல்லுகிறேன். அவ்வொற்றடங்கள் அவ்விடங்களை ஒழிப்பதற்கு மிக்க சூட்சமான வழி களாம். அவை : அவுரிவேர், செங்கத்தாரிவேர், வாகைவேர், ஆதளை (காட்டாமணக்கு) வேர், கற்றாழைவேர் இவைகளைச் சரியளவாய் எடுத்துக் காடி விட்டிடித்து அதைச் சட்டியிலிட்டு வறுத்துக்கொண்டு ஒரு துணியில் முடிந்து தலை முதல் கால்வரை ஒற்றடம் போட்டால் மேற்படி பாம்பு நஞ்சு கள் தீரும்.

அன்றியும், நல்வேளைவேர், குப்பைமேனிவேர், சுக்கு, முருங்கை வேர், ஊமத்தைவேர், எருக்கம்வேர், உத்தாமணிவேர் இவைகளைச் சரி எடை எடுத்துச் சிறுநீர் விட்டிடித்துச் சட்டியிலிட்டு இளவறுப்பாய் வறுத்து ஒரு சீலையில் முடிந்து கேசாதிபாதம்வரை ஒற்றடம்போட எவ்வித நஞ்சுகளும் நீங்கும்.

மேலும், உள்ளி, வசம்பு, வட்டத்துத்தி, ஊமத்தை, நறுதாளி, பலாசு விதை இவைகளைச் சமபாகமெடுத்தேனும், உள்ளி, வசம்பு, ஆனைவணங்கி இவைகளைச் சமமாகத் தூக்கியேனும் முன்கண்டபடி சிறுநீர்விட்டு வறுத்து ஒற்றடமிடலாம். (வி. ஆ.)

**புகை.**

ஆகுமென்று கயிலாச முனிநா தர்தாம்
ஆயிரத்தைந் நூற்றிலொரு புகையுஞ் சொன்னர்
ஏகரச கந்தியுடன் சூடன் காயம்
எருக்கம்பால் விட்டரைத்துச் சீலை யூட்டி
வாகுடனே திரிப்புகையை நாசி யேற்ற
வானுக்குட் போனஉயிர் வருந்தப் பாது

(பொ-ரை.)—இரசம், கந்தகம், சூடன் (கர்ப்பூரம்), காயம் இவைகளைச் சரியளவெடுத்து இடித்துக் கல்வத்திலிட்டு எருக்கம்பால் விட்டரைத்து ஒரு சீலையில்தடவி உலர்த்தித் திரியாகத்திரித்துக்கொளுத்தி அதிலிருந்து வரும்புகையை மூக்கிற் செல்லும்படிச் செய்தால் மேற்படி நஞ்சுயிர்களின் கடியால் வந்தவிடம் போய்விடும். உயிர் மீண்டும் தப்பாமல் வந்து உடம்பிற் சேரும். (அதாவது மரணமில்லை என்றபடியாம்.) (வி. ஆ.)

### புகை.

மிளகுவசம் புள்ளிசுக்கு சூடன் சாரம்
மிளகாயும் பழம்புளியு முப்புங் கூட்டி
நாளொன்று கொடிக்கள்ளிப் பாலி லாட்டி
நற்சீலை கொடிக்கள்ளிப் பாலில் தோய்த்து
நீளமாய் வைத்துருட்டிப் புகையு மேற்ற
நிமிடத்தில் போனவுயிர் மீளு மென்று
காளத்தி நாதரிரு நூறிற் சொன்னார்
காரணமாம் பட்டசவம் எழுப்பச் சொல்வேன்.

(பொ-ரை.)—மிளகு, வசம்பு, வெள்ளைப்பூண்டு, சுக்கு, சூடன், நவாச் சாரம், மிளகாய், பழம்புளி, உப்பு இவைகளை யெல்லாம் சரி எடை எடுத்து இடித்துக்குழிக்கல்லிலிட்டுக் கொடிக்கள்ளிப்பால்விட்டு ஒரு நாளெல்லாம் அரைத்து ஒரு துணியைக் கொடிக்கள்ளிப்பாலில் தோய்த்து அச்சீலையில் மேற்படி அரைத்த மருந்தை நீளமாய் வைத்து உருட்டி, ஒரு முனையைக் கொளுத்தியணைத்து வரும்புகையைப் பிடிக்க விரைவில் அடங்கிப்போன உயிர் மறுபடியும் வெளிப்படும். இது சிவன் இருநூறு என்னும் நூலில் சொல்லப்பட்டதாகும். (வி. ஆ.)

### விடந்தீண்டி மருந்துகொள்ளும்போது கவனிக்கவேண்டிய பத்தியவிதி.

உப்பு, புளி, கடுகு, எண்ணெய், முதலிய கரப்பான் பதார்த்தங்களை நீக்க வேண்டும். பகல், இரவு காலங்களில் நித்திரை செய்யலாகாது. பசுவின் பாலில் பச்சையரிசியும், பாசிப்பயிறும் இட்டுக் காய்ச்சி சீனிசேர்த்துச் சாப்பிட லாம். உப்பை நீக்கமுடியாதவர்கட்கு சங்கன் இலையும் உப்பும் சேர்த்து வறுத்து எடுத்த உப்பிற் சிறிதளவு சேர்க்கலாம். விடகுணங்கள் முற்றும் நீங்கியபின் எண்ணெயிட்டுத் தலைமுழுகி வழக்கமாயுள்ள உணவாதி களைக் கொள்ளலாம்.

### சோதனை இலக்கணம்.

இது, கடித்த பாம்பு முதலிய நஞ்சுயிர்கள் கண்களுக்குக் காணப்படா மல் மறைந்துவிடுமானால், அது இன்ன நஞ்சுயிரென்று அறிதற்குச் சில பொருள்களை அக்கடியுண்டவனுக்கு உண்ணக்கொடுத்து அவன் உண்டு சொல்லும் சுவைகளால் கடித்தது இப்பாம்பென அறிதற்குரிய சில மருந்து களையும், அவற்றுள் காணப்படும் குறிகளையும் சொல்லும்.

எண்சீர் விருத்தம்.

உதவுகிறே ளுடுதின்னப் பாளை வேரை
உத்தமனே வாயிலிட் டுண்ணும் போது
இதமாக வெல்லம்போ லிருந்தால் நாகம்
இனித்தபின் னிலேத்ததென்றால் மூக்க னாகும்

அதிகமாய்ப் புளித்ததென்றால் வழலைச் சாதி
அதிலேதான் வழுவழுக்கிற் கரிய வழலை
மதிமயங்கக் காரமடா மயக்க ராவும்
மனம்போல விருக்குமடா புடையன் தானே.

தானான மண்டலியா முட்கிரை யீந்தால்
தான்புளித் துறைத்ததெனிற் பெருவிரிய னாகும்
ஆனவாய் தலைநடுக்கும் விரியன் சாதி
அதிகமாய்க் கடுகடுக்குங் கொம்பேறி மூக்கன்
ஊனவைச் சுருட்டுமடா சுருட்டை யானால்
உண்ணுக்கே சரசரக்கும் சாரை யானால்
காணக்கண் ணெஞ்சடைக்குங் கன்னெஞ் சன்தான்
கண்விழிக்க வொட்டாதங் குண்மை யாமே.

உண்ணெஞ்சம் படபடக்குஞ் சவடி யானால்
ஒருசுரணை யுந்தெரியா திருதலை மணியன்
சண்ணையாய்ப் பல்கடுக்குஞ் செய்யா னாகில்
சலசலென மூக்கெரியு மெலியின் சாதி
அண்ணவை நோவுமடா நச்செ லிக்கே
அரணைதனக் கதட்டியே சத்தி பண்ணும்
கண்ணுங்கா தடைக்குஞ்சில் விடத்துக் கெல்லாம்
கசந்ததென்று லொருவிடமு மில்லை தானே.

(பொ-ரை.)—பாம்பினால் கடிக்கப்பட்டவனுக்கு ஆடுதின்னாப்பாளை வேரை உண்ணும்படி கொடுக்க அது தித்திக்கிறதென்று சொன்னால், அவனைக்கடித்தது நல்லபாம்பென்றும், முன்தித்தித்து உடனே இலைக்கிறதென்று சொன்னால் மூக்கனென்றும், அதிகமாய்ப் புளிக்கிறதென்று சொன்னால் வழலைச்சாதி என்றும், அந்தப்புளிப்புடன் வழுவழுக்கிறதென்று சொன்னால், கருவழலை என்றும், மயக்கத்துடன் காரமாயிருக்கிறதென்று சொன்னால் மயக்கராவென்றும், எந்தச் சுவையை நினைத்தாலும் அந்தச் சுவையே தோன்றுகிறதென்று சொன்னால் புடையன் என்றும், முட்கிரையின் சுவை காண்கிறதென்று சொன்னால், மண்டலி என்றும், புளித்துப்பின் காரமாயிருக்கிறதென்று சொன்னால் பெருவிரியனென்றும், தலை நடுக்கிறதென்று சொன்னால் விரியன்சாதி என்றும், நா கடுகடுக்கிறதென்று சொன்னால் கொம்பேறி மூக்கனென்றும், நா சுருட்டுகிறதென்று சொன்னால் சுருட்டை என்றும், உண்ணா சரசரக்கிறதென்று சொன்னால் சாரை என்றும், கண் மறைத்து நெஞ்சும் அடைக்கிறதென்று சொன்னால் கன்னெஞ்சனென்றும், தூங்கமுடியவில்லை என்றும் நெஞ்சம் படபடக்கிறதென்றும் சொன்னால் சவடி என்றும், சுரணையில்லாதிருந்தால் இருதலைமணியன் என்றும், பல் கடுக்கிறதென்று சொன்னால் செய்யான் என்றும், சலசலவென்று மூக்கு எரிந்தால் எலிச்சாதி என்றும், மேல் நா நோகிறதென்று சொன்னால் நச்செலி என்றும், வாந்தியானால் அரணை என்றும், கண், காது இவைகளை அடைக்கிறதென்று சொன்னால் சில்விடமென்றும், கசக்கிறதென்று சொன்னால் ஒரு நஞ்சும் இல்லை என்றும் உணர்ந்து கொள்ள வேண்டும். (வி. ஆ.)

இஃதன்றி,

“ சோதனை பங்கம்பாளை — வேரினைத்
துய்க்கக் கசக்கிலில்லைத் தொடர்விடமே
போதவே யினித்ததென்றால் — நல்லபாம்பு
புளிக்கில் வழலை துவர்த்திடில்விரியன்
கார்த்திடில் மயக்கரவாம் — உவர்த்திடில்
கனத்த புடையன்மிள கெனில்மண்டலி
நேர்த்திய தாகவேதான் — நாக்கினில்
நின்று கடுக்கினெடு மூக்கனுமே ”

என்று சோதனைமருந்து கூறினாரும் உளர்.

(சி. ஆ.)

இஃதன்றி, புன்கம் விரையையாதல், புன்கம் பட்டையையாதல், இலுப்பைப் பிண்ணாக்கையாதல் பாம்பு கடிப்பெற்றவனுக்குக் கொடுக்க அவன் அது துவர்ப்பாயிருக்கிறதென்றால் அவனைப் புடையன் கடித்த தென்றும், தித்திக்கிறதென்றால் நல்லபாம்பு கடித்ததென்றும், காரமாயிருக்கிறதென்றால் கருவழலை கடித்ததென்றும், புளிக்கிறதென் றால் விரியன் கடித்ததென்றும், கைக்கிறதென்றால் நஞ்சில்லையென்றும் அறிந்துகொள்ளவேண்டும், என்று வழக்கத்தைக் கூறினாருமுளர்.

**பாம்பு நெருங்காமற்படி தடுக்கும் மனை மூலிகை.**

ஒவ்வொரு வீட்டிலும் இன்னின்ன மூலிகைகளிருந்தால் நஞ்சுள்ள பாம்பு முதலிய உயிர்கள் வராவென்றும், வந்து கடிக்கினும் உடனே அம்மூலிகைகளால் அந்நஞ்சை ஒழித்துக்கொள்ளலாமென்றும் அவைகள் இருத்தல் அவசியமெனவும், அவை எவை எனவுங் கூறப்படும்.

கண்டுகொள்வாய் சொல்லுகிறே னுலகோர்க் கெல்லாம்
காரமா மூலியடா பங்கம் பாளை
கொண்டுவந் துன்மனையில் வைத்திருந்தால்
கொடியவிட மணுகாது குடியோ டிப்போம்
நன்றான நாகதாளிக் கிழங்கு தானும்
நன்மனையி லிருக்கவிடம் நாடா தப்பா
அன்றான ஆகாசக் கருடன் மூலி
அம்மனையி லிருக்கவிட மற்றுப் போமே.

(பொ-ரை.)—உலகத்தில் வாழும் மன்பதைக்கெல்லாம் ஒன்று சொல்லு கிறேன். அதைக் கேட்பாயாக. பங்கம் பாளை என்னும் ஆடு தின்னாப்பாளை யானது மிகவும் காரமான மூலிகையாகும். ஆகையால் அந்த மூலிகையைக் கொண்டுவந்து உன்வீட்டில் வைத்திருந்தால் கொடிய நச்சுள்ள உயிர் களும் அதனால் உண்டாகும் நஞ்சுகளும் அணுகாமல் குடிவிட்டோடிப் போவனவாம். அவ்வாறே நாகதாளிக் கிழங்கும், ஆகாசகருடனுமிருந்தால் நஞ்சுள்ள உயிர்கள் அவ்விடத்தைச்சேரா. ஆகையால் அவைகளை நீ வாழு மிடத்தில் வைத்து வளர்ப்பாயாக. (வி. ஆ.)

**விரியன் வகை 16.**

பொரிப்பல் விரியன் பொரிகுஞ்சில்
புகன்ற விரியன் பதினாறும்
பொரிப்பல் விரியன் பெருவிரியன்
பொல்லா விரத்த விரியனுமாம்

கறுத்த தேக மரைவெள்ளை
　　கடிதாங் கொடிதாங் கருவிரியன்
நிறமே முழுதுஞ் செவ்விரியன்
　　நீண்ட செந்தலை விரியனுமே.

செந்தலை விரியன் வெள்வால்விரியன்
　　செறியுங் கழுத்துக் கோல்விரியன்
பந்தாய்ச் சுருளுந் தரைவிரியன்
　　பளிங்கு நிறக்கண் ணாடிவிரியன்
உந்திப் பரவுங் கட்டுவிரியன்
　　உரைத்த கழுதை விரியனுடன்
பந்தி நிழலாம் விரியனுடன்
　　பாரக் குறிஞ்சி விரியனுமே.

குறுகுஞ் சிறிதாய் விரல்போலக்
　　கொடுநெடுங் கழுத்துக் கோல்விரியன்
சிறிய விளக்குத் திரிபோலச்
　　சிறிய புல்லே விரியனுமாம்
குறுகும் விரியினம் பதினாறும்
　　கோதாய் விரியன் வகையீதாம்
திறக்குங் குணமு மவிழ்தமுமே
　　தெரியச் சொல்வேன் திருவறிய.

(பொ-ரை.)—விரியன்குலம் பதினாறுவன: (1) பொரிப்பல்விரியன், (2) பெருவிரியன், (3) இரத்தவிரியன், (4) கருவிரியன், (5) செவ்விரியன், (6) செந்தலைவிரியன், (7) வெள்வால்விரியன், (8) செறியுங்கழுத்துக்கோல் விரியன், (9) தரைவிரியன், (10) கண்ணாடிவிரியன், (11) கட்டுவிரியன், (12) கழுதைவிரியன், (13) நிழல்விரியன், (14) குறிஞ்சிவிரியன், (15) நெடுங் கழுத்துக்கோல்விரியன், (16) புல்விரியன் என்பவனவாம். (வி. ஆ.)

இத்தொகையன்றிக் (1) கத்தரிவிரியன், (2) பெருவிரியன், (3) இரத்த விரியன், (4) குறுவிரியன், (5) புல்விரியன், (6) சலவிரியன் என ஆறு விரியனென்பாரும்,

மற்றும், (1) நீர்விரியன், (2) நிலவிரியன், (3) இரத்தவிரியன், (4) பெருவிரியன், (5) சாரிவாழ்விரியன், (6) பொரிவிரியன் எனச் சிலவற்றை நீக்கிச் சிலவற்றைச் சேர்த்து விரியன்தொகை ஆறென்பாருமுளர்.

இவற்றை,

“ விரிய னிலாறு பேதம் — கத்தரி
　　விரியன் பெருவிரியனி ரத்தவிரியன்
பரிவுசெய் குறுவி ரியன் — புல்விரியன்
　　பன்னுஞ் சலவிரிய னெனு மிவற்றுள் ”

எனச் சித்தராரூடத்திலும்,

“ தெரிந்து நீர்விரியன் பாம்பின் செய்கை யீதென்று செப்பே.”
“ தெளியுமே சொன்ன தெல்லாம் செகத்தில்வாழ் விரியனென் [னே.”
“ நுழையு மிரத்த விரியனென நுண்மை யறிந்து நுவல்வீரே.”

"ஒருமையிக் கூறுகண்டா லுறுபெரு விரியனென்னே."
"சாரிவாழ் விரியனென்னே."
"திட்டமாய்ப் பொரிவிரியன் தீண்டிய குணமதென்னே."
எனச் சர்ப்பாரூடத்திலும் புகன்றிருப்பதா லறிக.

இங்ஙனங்கூறிய சர்ப்பாரூடக்காரரே,

"இரத்த விரியன் பெருவிரியன்
இசைநீர் விரியன் செவ்விரியன்
வரத்த விரியன் பொரிவிரியன்
வாங்குஞ் சாதி யிவையாறும்
நிரத்த வகைதான் பதினாறும்
நெருங்கக் கடித்து விடங்கொண்டால்
துரத்த மருந்து விடமீளும்
சொல்வே னறிந்து செய்வீரே."

என்னுஞ் செய்யுளால் முன்சொன்ன விரியனின் தொகை ஆறுடன் சிற்சில ஒவ்வாதபடி வேறு ஆறு பேர்களைக் கூறினதோடு பதினாறு விரியன் என்னும் தொகையும் தமக்கு உடன்பாடெனக் கூறுகின்றதாகத் தெரிகிறது.

**1. பொரி விரியன் கடித்த குறிகுணம்.**

அறியச் சொல்வேன் பொரிவிரியன்
அடரத் தாக்கும் விடமாகில்
நிறையக் கடித்த வாயிறைச்சி
நிமிர்ந்தே விங்கி யுடல்பதைத்துச்
சுரமுங் காணுங் கண்ணுறங்கும்
சுட்டுக் கடிவாய் கடுக்குமிக
எரியுங் கண்ணு நாசிநெருப்
பிதமா மஞ்சள் சலம்பொசியும்.

**2. பொரி விரியன் கடிக்கு வேம்பினெய்ப்பூச்சு**

மஞ்சள்நிற நீர்பொசியும் கடித்த வாயில்
மருந்தறியச் சொல்லுகிறேன் பங்கம் பாளை
அஞ்சாமற் சதுரமென்ற கள்ளிப் பாலில்
அப்பனே யெழுநா ளூறப் போட்டுத்
துஞ்சாம லிடித்ததூள் பலமே யொன்று
துவரான வேப்பெண்ணெய் படிகா லப்பா
மிஞ்சாமல் மெழுகுபத மாகக் காய்ச்சி
மிதமாக வவன்சிரசில் பூசிப் போடே.

**சாரணை கலிக்கம், சாரணை ரசம்.**

பூசப்பா சாரணைவே ராவின் பாலில்
புனிதமாய் நாளேழு மூற வைத்தே
ஈசமா யுலர்த்தியதை வைத்துக் கொண்டே
வெலுமிச்சம் பழச்சாற்றிற் கலிக்கம் போடாய்
ஆசையாய்ச் சாரணைவே ரதைக்கு டைந்தங்
கதிற்சூதங் கழஞ்சு விட்டுச் சாணிமூடி
நீசமாய் நாற்பதுநாள் சென்றெ டுத்து
நிம்பெண்ணெய் படிகாலிற் கழஞ்ச துண்ணே.

(பொ-ரை.)—பொரிவிரியன் கடித்த நஞ்சானல், கடிவாயளவுக்கிருக்கின்ற உடலின் இறைச்சி மிகவும் வீங்கல், உடல் பதைத்தல், சுரங்காய்தல், கண் அடிக்கடி உறங்கல், கடிவாய் கடுத்தல், கண், மூக்கு இவை நெருப்புப்பட்ட எரிச்சல்போல் எரிதல், மூக்கில் மஞ்சள்நீர் கசிதல், அன்றிக் கடிவாயில் மஞ்சள்நீர் கசிதல் என்னும் இக்குறி குணங்கள் உண்டாம்.

**வேம்பினெய்ப்பூச்சின் விளக்கம்.**—ஆடுதின்னுப்பாளையின் சமூலத்தை ஒரு மண் சட்டியிலிட்டு அதில் சதுரக்கள்ளிப்பால் போதுமானதுவிட்டு, எழு நாள் ஊறவைத்துப் பிறகு நன்ருய் உலர்த்தி இடித்ததூள் பலம் ஒன்றை ஒரு மண்சட்டியிலிட்டு அதில் வேம்புநெய் காற்படிவிட்டு அடுப்பேற்றி மெழுகு பதமாய்க் காய்ச்சி வடித்தாறவிட்டெடுத்துப் பொரிவிரியனுற் கடிக்கப்பெற்ற வன் தலையில் பூசவேண்டும்.

**சாரணைக்கலிக்க விளக்கம்.**—சாரணைவேரைப் பசுவின்பாலில் எழுநாள் ஊறவைத்து அவ்வேரை எடுத்து நிழலில் உலர்த்திவைத்துக்கொண்டு எலுமிச்சம்பழச்சாற்றில் உரைத்துக் கலிக்கம் போடவேண்டும்.

**சாரணைரச விளக்கம்.**—கனத்த சாரணைவேரைக் குடைந்து அதில் ஒன்றே கால் வராகனெடை பாதரசத்தைவிட்டுச் சாணியால் மூடி நாற்பதுநாள் சென் றெடுத்துப் பொடித்துக் காற்படி வேப்பெண்ணெயிற் கலந்து வேளை ஒன் றுக்குக் கழஞ்சு நெய் சாப்பிடவேண்டும்.

இப்படிச் செய்தால் மேற்படி பொரிவிரியன்கடி நஞ்சு தீர்ந்துவிடும். (வி. ஆ.)

மேலும், கீழ்க்குறிப்பிட்ட கொள்கையையுங் காண்க :—

### 1. பொரிவிரியன் கடிக் குறிகுணம்.

பட்டவாய் மேலே வாங்கிப் பரந்துடன் குமுரி யேறி
நட்டமாய் விழிக றுத்து நாவுடன் குழறிப் பேசிக்
கட்டமா யுறக்கங் கொண்டு காய்ந்துட லயரு மாகில்
திட்டமாய்ப் பொரிவி ரியன் தீண்டிய குணம தென்னே.

(பொ-ரை.)—வாய் மேற்பக்கமாக இழுத்துப் பரபரவென்று அவ்விடம் நஞ்சு விரைவாய் ஏறிக் கண்கறுத்தல், நா குழறிப்பேசல், மிகுதியும் உறங் கல், உடல்காய்தல், அயர்தல் என்னும் குறிகுணங்கள் உண்டானல் பொரி விரியன் கடித்ததென்று சொல்லுவாய். (ச. ஆ.)

### 2. பெருவிரியன் கடிக்குறி குணமும் மருந்தும்.

பூச்சப்பா பெருவிரியன் வயிற துளையும்
பொருவச்சுத் தட்டினது போற் பறக்கும்
பூச்சப்பா கோவையிலை மிளகுஞ் சேர்த்துப்
புத்துச்சோ றெண்ணெயது புகட்ட வேண்டும்
நீச்சப்பா சுந்தரியின் தயிலந் தொட்டு
நீதடவி வெற்றிலையிற் கொடுத்துப் போடு
எச்சிவிடும் விரியனென்ற சாதி யப்பா
எந்தவிட மானலுங் குணத்தைக் கேளாய்.

(பொ-ரை.)—பெருவிரியன் கடிக்குறிகுணங்களாவன : வயிறு வலித்தலும், அச்சைத் தட்டினல் எப்படி வெகுதூரஞ்சென்று ஒலி கேட்குமோ அவ்வாறு உடலில் வெகுதூரம்வரைக்கும் (உடல் முழுதும்) அந்நஞ்சு பரவலுமாம், இந் நஞ்சுக்குக் கோவையிலே, மிளகு, புத்துச்சோறு, இவற்றை விதிப்படிக்கலந்து எண்ணெய் காய்ச்சி அதை நோயளவுக்குக் தக்கபடி மருந்தளவு, நாளளவு கண்டுணர்ந்து கொடுக்கவேண்டும். அதுவல்லாமலும் சுந்தரியின் தயில த்தைவேண்டிய அளவு வெற்றிலேயிற்றடவிக் கொடுக்கவேண்டும். இவ்வாறு கொடுத்தால் இப்பெருவிரியன் நஞ்சு தீர்வதோடு நில்லாமல் எவ்விரியன் கடிநஞ்சுகளும் திரும். மேலும், (வி. ஆ.)

**பெருவிரியன் கடிக் குறிகுணம்.**

பொருமியே தேக மெல்லாம் போதவே தலைக முத்து
இருமியே கக்க லாகி யிளகிடுந் துயர மாகும்
அருமையாந் தொண்டை வாயி லடிக்கடி விருவி ருத்து
ஒருமையிக் கூறு கண்டால் உறுபெரு விரிய னென்றே.

(பொ-ரை.)—உடம்பெல்லாம் ஊதல், தலை கழுத்து இவை ஊதல், இருமுதல், கக்குதல், உடம்பு விரைவாய் இளைத்தல், மிகவும் துன்பமாதல், தொண்டையும் வாயும் அடிக்கடி விருவிருத்தல் என்னும் இக்குறி குணங் கள் உண்டாகுமானல் பெருவிரியன் கடித்ததென்று சொல்லுவாய். (ச. ஆ.)

**3. இரத்தவிரியன் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

தின்னப்பா இரத்தவிரியன் கடித்த தென்றால்
தேகத்துக் குருதியெல்லாம் மயிர்க்கா லோடும்
கண்ணப்பா தெரியாது காது மில்லை
கனமாக ரத்தம்வரும் வாய்மூக் காலே
தின்னப்பா புத்தின்சோ றெள்ளி னெண்ணெய்
சேரவே சமன்காய்ச்சி யுட்க ருந்தி
இன்னமதைக் கடிவாயிற் பூசிக் கட்டி
இதமாகக் கோவைநீர் துவாலை பூசே.

(பொ-ரை.)—இரத்தவிரியன் கடிப்பதனுல் உண்டாகுங் குறிகுணங்களா வன : உடம்பிலுள்ள இரத்தமெல்லாம் மயிர்க்கால்கள் தோறும் வெளிப் படல், கண்தெரியாமை, காதுகேளாமை, வாய்வழியாகவும் மூக்கு வழி யாகவும் இரத்தம் வெளிப்படுதல் என்னும் இவைகளாம். (வி. ஆ.)

மேலும்,

**இரத்தவிரியன் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

உளையுங் கடிவா யுதிரமதா யொழுகி யோடு நாவுலரும்
அழையும் வயிறு கழியாதே யகமே தாக மனல்மீறிக்
குழையுந் தலையு முயிர்குறையும் கொண்டால் மருந்து குமட்டிடலும்
நுழையு மிரத்த விரியனென நுண்மை யறிந்து நுவல்வீரே.

(பொ-ரை.)—இரத்தவிரியன் கடியின் குறிகுணங்களாவன : கடிவாயில் இரத்தம் கசிதல், நாவுலர்தல், வயிறு கழியாமை, நீர்வேட்கை, உடல்மிகக் காய்தல், தலைநடுக்கல், உயிர்வன்மை குறைதல், மருந்துண்டால் குமட்டல் என்னும் இவைகளாம். (ச. ஆ.)

**புத்தான் சோறெண்ணெய்.**

புத்தான்சோறும் எள்ளெண்ணெயும் சரியளவாய்ச் சேர்த்துப் பக்குவ பாகமாகக் காய்ச்சி வழக்கத்திற்கண்ட அளவில் உள்ளுக்குக்கொடுத்து அதையே கடிவாயிற் பூசிக்கட்டவேண்டும். இதுவல்லாமலும் கோவைச் சாற்றையும் பூசவேண்டும். அப்படிப் பூசினல் மேற்படி இரத்தவிரியன்கடி நஞ்சு தீரும். (வி. ஆ.)

**7. வெள்வால்விரியன் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

உண்ணப்பா வெள்வாலின் விரிய ஞனல்
உடன்பற்க ளைக்கிட்டி யுடல்மு யக்கும்
புண்ணுகுந் தேகங்கை கால்கு றையும்
புதுச்சொறியாம் வெங்குட்ட மூது மேனி
நன்ருகச் சங்கம்வேர் வெந்நீர் தன்னில்
நாற்பதுநா ளிருநேரம் பலமே யுண்ணே
பின்னையுங்கால் மண்டலமே பங்கம் பாளை
பிசகாம லிருநேரங் கழஞ்சு தின்னே.

(பொ-ரை.)—வெள்வால்விரியன் கடித்த குறிகுணங்களாவன: அது கடித்தவுடனே பல்கிட்டிப்போதல், மயக்கத்தோடிருத்தல், உடல் முழுதும் புண்ணுதல், கை குறைதல், கால் குறைதல், உடலில் புதிது புதிதாய்ச் சொறியுண்டாதல், குட்டநோய்போல் உடல் தடிப்பாய் ஊதல் என்னும் இவைகளாம்.

மருந்து.—சங்கம்வேர்ப் பட்டையை வெந்நீர் விட்டரைத்து வேளைக்கு ஒரு பல மளவாக இருவேளையும் நாற்பதுநாள் உண்ணவேண்டும். அதன் பின்னர், ஆடுதின்னுப்பாளையையரைத்து வேளைக்கு ஒன்றேகால் வராகனெடை அளவாக இரண்டுவேளையும் கால்மண்டலம் உண்ணவேண்டும். அப்படிக் கொள்ளுவதால் வெள்வால்விரியன் கடித்த நஞ்சு தீரும். (வி. ஆ.)

**1. நீர்விரியன் கடிக் குறிகுணம்.**

எரிந்திடுந் தீப்போல் மேனி யிருந்திடுங் கடிவாய் தன்னில்
சொரிந்திடு முதிரம் வேர்வை சுழல்தலை செவியுங் கேளா
தருந்திடு மருந்துந் தங்கா தவன்மனங் குமட்ட லாகும்
தெரிந்துநீர் விரியன் பாம்பின் செய்கையீ தென்று செப்பே.

(பொ-ரை.)—எரிகின்ற நெருப்பைப்போல உடல்முழுதும் அனலாயிருத்தல், கடிவாயில் இரத்தங் கசிதல், உடல் முழுதும் வேர்வை விடல், தலை சுழலல், காது கேளாமை, உண்ணும்மருந்து வயிற்றிற்றங்காதபடி குமட்டல் என்னும் இக்குறி குணங்கள் நீர்விரியன்பாம்பு கடித்தனுலுண்டாவன வென்று அறிவாய். (ச. ஆ.)

**2. நிலவிரியன் கடிக் குறிகுணம்.**

விழிகறுத் துடம்பு நொந்து வெதும்பியே கடிவாய் விம்மிக்
குழியுமே லூறல் கொண்டு கோபமாய் விரிந்து புண்ணும்
கழியுமே நீர்ம லங்கள் கண்டிடு மிரத்த மாகில்
தெளியுமே சொன்ன தெல்லாம் செகத்தில்வாழ் விரிய னென்னே.

(பொ-ரை.)—கண் கறுத்தல், உடம்புநோதல், வெதும்பல், கடிவாய் வீங்கிக் குழிவிழல், உடலின்மேற்றேல் நமைச்சல், அவ்வூறல் மிகுந்து விரிந்து புண்ணுதல், நீர் மிகுதியாய் இறங்கல், மலம் கழிதல், மலத்தில் இரத்தம் விழுதல், என்னும் இக்குறிகுணங்கள் தரைவிரியன் கடித்ததனு லுண்டாவனவென்று அறிவாய். (ச. ஆ.)

**மற்ற விரியன் கடிகளின் பொதுக்குறிகுணம்.**

குணமென்றுல் விரியன்குலம் கடித்த தென்றுல்
குருதிவரும் கடிவாயி லிறைச்சி சிந்தும்
கணினுடனே காதடைத்து மதிம யங்கிக்
கனத்துடல் தலைசுற்றிக் களையே காணும்
கணுஞ்சொருகும் விக்கல்வரும் செருக்கு நெஞ்சைக்
கடிவாயிற் கனவலியாய்க் கடுக்கும் வீங்கும்
எனச்சொல்வே னெரியுமஞ்ச ணிறமா மேனி
எந்தெந்த விரியனுக்கு மருந்து கேளே.

(பொ-ரை.)—விரியன் பாம்புகளில் சிறப்பாகச் சொல்லப்பட்டவை போக மற்ற விரியன் பாம்புக் கடியின்பொதுக் குறிகுணங்களாவன: அவை கடித்த இடத்தில் இரத்தம் ஒழுகல், அங்குள்ளஊன் கடியுடன் துண்டாய் விழுதல், கண் தெரியாமை, காது கேளாமை, அறிவு மயங்கல், உடல் பளுவாதல், தலைச்சுற்றல், களைப்பு, கண்சொருகல், விக்கல், நெஞ்சு கரகரத்தல், கடிவாய் மிகவலித்தல், அங்கு கடுத்தல், வீங்கல், எரிதல், உடம்பெல்லாம் மஞ்சள் நிறமாதல் என்பவைகளாம்.

**பதினறு விரியன் கடிகளுக்கும் பொது மருந்து.**

விரியன்குலப் பதினுறின் விடத்துக் கெல்லாம்
விளம்புகிறே னவிழ்தத்தின் விவரங் கேளாய்
பெருவாகைப் பட்டைச்சா றுழக்க தாகும்
பின்னேயதி லாவினெய் பாதி சேர்த்தே
ஒருபலந்தான் மிளகுத்தூள் கூடப் போட்டே
உள்ளுக்கி தவிழ்தமாய்க் கொடுத்துப் போடு
உரியசிற்று முட்டியிலே நசிய மிட்டே
உடல்முழுதும் பூசவிட மோடிப் போச்சே.

(பொ-ரை.)—விரியன் வகைப் பதினறுக்கும் கொடுத்தற்குரிய பொது மருந்துகளின் விவரத்தைக் கேட்பாயாக. பெருவாகைப்பட்டைச்சாறு உழக்கு, பசுவின்நெய் ஆழாக்கு இவைகளிரண்டையுஞ் சேர்த்து அதில், ஒரு பலம் மிளகுத்தூள் கூடப்போட்டு நோயாளவுக்கும், உடல் வன்மைக்கும் தக்க நாளளவு, மருந்தளவு கண்டு கொடுத்தால் மேற்படி நஞ்சுகள் தீரும்.

இதுவல்லாமல் சிற்றுமுட்டியிலையை நறுக்கி மூக்கில் நசியமிட்டு உடல் முழுவதும் பூச நச்சுயிர்களால் உண்டான நஞ்சுகள் நீங்கும். (வி.ஆ.)

**விரியன் 16, சூல் செய்யான், பல நஞ்சுகளுக்கும் மருந்து.**

போச்சப்பா வின்னமொரு சூளுவைக் கேளாய்
பொரிவிரியன் பதினறுஞ் சூலாஞ் செய்யா
நச்சுவிட மெந்தெந்த விடமா னலும்
நலமான தவசியிட முருங்கைச் சாற்றை

உச்சிதமாய்க் கடிவாயிற் பிழிந்து பூசி
　　உள்ளுக்கே யுமக்கருந்தித் துவாலே போடாய்
உச்சிசெவி நாசிகண்ணில் நசிய மூட்டாய்
　　ஒற்றுமது பற்றுமது வொத்த் தாமே.

(பொ-ரை.)—விரியன் வகைப் பதினாறில் எந்த விரியன் கடித்த நஞ்சானாலும், சூல்கொண்ட செய்யான் கடி நஞ்சானாலும், வேறு எவ்வகை நச்சுயிர்கள் கடித்த நஞ்சானாலும், அந்நஞ்சிற்குத் தவசுமுருங்கைச்சாற்றைக் கடிவாயிற்பூசி, அச்சாற்றில் கால்படி உள்ளுக்குக் கொடுத்து உடம்பின் மேலும் துவாலே போடவேண்டும். அன்றியும் இதையே ஒற்றடத்திற்கும், பற்றுக்கும் கையாளவேண்டும்.

நசியமே ஆட்சியாயிருந்தாலும் அச்சரக்கைக்கொண்டு மூக்கிற் பிழிவதுடன் அதையே உச்சியில் சிறுகக் கீறி அதில் விடலும், செவியிற் பிழிதலும், கண்ணிற் பிழிதலும் நலம் எனக் கொள்க. (வி.ஆ.)

**எல்லா விரியன் கடிகளுக்கு மருந்து.**

ஆமப்பா வின்னமொரு முறையைக் கேளாய்
　　அழகான சாரணைவேர் பங்கம் பாளை
ஓமப்பா புன்கம்வேர் பழுபாகல் துளசி
　　உத்தமனே சுக்குடனே குறிஞ்சி முல்லே
சாமப்பா சிறுநீரிற் றுவாலே பூச
　　சகலவிட விரியன்குலம் சாடிப் போச்சு
நாமப்பா வின்னமொன்று சொல்லக் கேளாய்
　　நலமில்லாப் பதினாறு விரியன் தீண்டில்.

தீண்டிடவு நிம்பெண்ணெ யுள்ள ருந்தத்
　　திகைத்தன்றே விடங்கீழே திரும்பிப் போகும்
உண்டவெண்ணெய் வயிற்றிலிருந் துடலேத் தாக்கும்
　　உடல்முழுதுங் கசப்பேறி யுறுதி யாகும்
வெண்டேறிச் செல்லாது விடங்க ளெல்லாம்
　　விரியன்முதல் பலவிடமும் வீணாய்ப் போச்சு
நன்றாக வின்னமொரு முறையைக் கேளாய்
　　நற்பிரண்டைப் பாகலுடன் கோவை மூன்றும்.

மூனுமிலை சமன்கூட்டி யரைத்துக் காய்ச்சி
　　மெழுகுபதங் கடிவாயிற் பூசிக் கட்டு
பாழில்லே விரியன்விட மிறங்கிப் போச்சு
　　பழவரிசிச் சோறுதாளிப் பூவுங் காடி
பாதியாக் கோவையிலே பசுவி னெய்யில்
　　பாய்ச்சியரை கடிவாயிற் பாங்காய்க் கட்டு
ஈணிக்கேள் கெந்திரசம் பொடியாய்ச் செய்தே
　　இழைச்சீலே தனில்தடவிப் பசுவி னெய்யில்
ஆணவமாய்த் திரிப்புகையை மூளே யேற்றில்
　　அஞ்சாத விரியன்விட மகன்று போச்சே.

அகன்றுபோம் தக்காளி நாயுருவி நீலி
அரைத்தன்றே விக்கத்திற் பூசத்தீரும்
மகிழெருமைச் சாணியுட னெருக்கம் பாலே
மத்தித்துப் பூசிடவே வடியும் விக்கம்
உகந்தசிறு புள்ளடியுங் கோவை சிறுநீர்
ஓகோகோ நசியமிட வோடிப் போச்சு
அகன்றுபோஞ் சிறுசின்னி யெருக்கு சிறுநீர்
அங்கத்தில் பூசுடனே முருக்கு மாமே.

**சாரணைவேர்த்துவாலே.**—சாரணைவேர், ஆடுதின்னாப்பாளை, புங்கம்வேர், பழுபாகல், துளசி, சுக்கு, சிறுகுறிஞ்சான், முல்லை இவற்றைச் சரி எடை எடுத்து இடித்து, சிறுநீராலரைத்துக் கடியுண்டவனது கடிவாயிலும் உடம்பி லும் பூசினால் எல்லா வகையான விரியன் நஞ்சுகளும் தீரும்.

**நிம்ப எண்ணெய்.**—பதினாறு விரியன் பாம்பு வகைகளில் எது தீண்டி னாலும் வேப்பெண்ணெயை உடனே குடித்துவிடவேண்டும். அப்படிக் குடிப்பத னால், உடனே அவ்விடம் கீழேயிறங்கிப்போகும். அதுவுமன்றி குடித்த வேப்பெண்ணெயானது வயற்றிலிருந்து உடம்பு முழுமையிலும் ஊறிக் கசப்பேறி விடுவதால் அக்கசப்பினால் விடம் ஏறுதற்கு வழியில்லாமல் விடத் தின் பலங்கெட் டொழிந்துபோகும்.

**பிரண்டைக்கட்டு.**—பிரண்டை, பாகல், கோவை என்னும் இம்மூன் றும் சரியளவெடுத்து அரைத்து பில்லை தட்டி வெதுப்பிக் கடிவாயிற் கட்டினால் விரியன் கடிவிடம் இறங்கிப்போகும்.

**தாளிப்பூக்கட்டு.**—பழவரிசிச்சோறு, தாளிப்பூ, கோவையிலை இவை களைச் சரிஎடை எடுத்துக் குழிக்கல்லிலிட்டுக் காடியாலும், பசுநெய்யாலு மரைத்துக் கடிவாயிற் கட்ட விரியன் கடிவிடம் நீங்கும்.

**இரசப்புகை.**—கந்தகம், இரசம் இவ்விரண்டையும் சரி எடை எடுத்துப் பொடி செய்து பசுவின் நெய்யாலரைத்து, ஒரு துணித்துண்டில் தடவித் திரி யாக்கிக் கொளுத்தி அதிலிருந்துவரும் புகையை மூக்கின் வழியாக மூளையில் ஏற்றினால் விரியன் விடங்கள் யாவும் தீரும்.

**தக்காளிப்பூச்சு.**—தக்காளியிலை, நாயுருவியிலை, அவுரியிலை இவைகளைச் சரியெடை கூட்டியரைத்து விரியன் விடந்தீண்டின அப்பொழுதே கடிவாயிற் பூச மேற்படி விடம் நீங்கும்.

**சாணிப்பூச்சு.**—எருமைச்சாணியோடு எருக்கம்பாலைக் கூட்டி யரைத்துக் கடிவாயிற் பூசினால் மேற்படி கடி வாயிலுண்டான வீக்கம் வாங்கும்.

**சிறுபுள்ளடி நசியம்.**—சிறுபுள்ளடியிலை, கோவையிலை இவற்றை நறுக் கிச் சிறுநீரில் ஊறவைத்து மூக்கிற் பிழிந்தால் மேற்படி வி: ம் நீங்கும்.

**சிறுசின்னிப்பூச்சு.**—சிறுசின்னியிலை, எருக்கிலை இவ்விரண்டையும் சரி எடை எடுத்துச் சிதைத்துச் சிறுநீரில் ஊறவைத்துக் கடிவாயிற் பூசினால் மேற்படி விடம் தீரும். (வி. ஆ.)

**விரியன் விடங்களுக்குச் சுந்தரித் தயிலம்.**

“ வெல்லுமடா வேப்பெண்ணெய் படிதா னென்று
விதற்குள்ளே மூன்றுகூறு நாலு போடு
செல்லியொரு மண்டலந்தான் புதைத்தெடுத்துச்
சிழிதங்க வடிகட்டி யெடுத்துக் கொண்டு

வல்லவெண் பாடாணம் பலமோ வொன்று
வருந்துருசு காரசாரம் வீரம் பூரம்
சொல்லுமிவை வகைவகைக்கோர் கழஞ்சு போடு
சுருக்கான வாளமொரு பலமே போடு.

போட்டன்றே பொடியாக்கி யுறவாய்ச் செய்து
புனிதமாந் தயிலத்தி லிறக்கிக் கொண்டு
கெட்டவிடம் விரியன் பதினறு மற்றுக்
கெடுமயங்கி வெற்றிலேயில் தடவித் தின்னப்
பெட்டகத்தில் வைத்தபொரு ளெடுத்தாற் போலப்
பேயனைய விடப்புதைய லெடுக்க லாமே."

(பொ-ரை.)—வேப்பெண்ணெய் படி ஒன்றை ஒரு மண் சட்டியிலிட்டு அதில் மூஞ்சூறு நாலு போட்டு மேல்மூடிச் சீலை செய்து பூமியில் ஒரு மண்டலம் வரைக்கும் புதைத்தெடுத்து வடித்து, அதில் சுத்திசெய்த வெள்ளைப்பாடாணம் பலம் ஒன்று, சுத்திசெய்த துருசு, வெங்காரம், நாட்டு நவாச்சாரம், வீரம், பூரம் இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சு, வாளம் பலம் ஒன்று, இவைகளைப் பொடிசெய்து, மேற்படி தைலம் விட்டு நன்றுயரைத்துக்கலக்கி வைத்துக்கொண்டு வெற்றிலேயிற் றடவிக்கொடுத்தால், பெட்டியில்வைத்த பொருள்களைத் தெரிந்தெடுத்தாற்போல உடலிலேறிய விடப்புதையலை எடுத்துவிடலாம். (வி. ஆ.)

### நீலகண்ட குளிகை.

எடுக்கலாம் நீலகண்ட குளிகை கேளாய்
இதமாகச் சுத்திசெய்த வாளந் தானும்
அடுக்கான துருசதிலே சமனய்ச் சேர்த்தே
அதற்குள்ளே காரசாரம் வீரம் பூரம்
முடுக்காகக் கந்திரசம் வகையே காலாம்
மூன்றுநாள் வெற்றிலேச்சா றதனு லாட்டிக்
கொடுக்கவெந்நீ ருண்டையொரு வராகன் தூக்கி
கோடான கோடிவிடம் குலேந்து போச்சே.

(பொ - ரை.)—நீலகண்ட குளிகையைச் செய்யும் வகையாவது : சுத்தி செய்த வாளம், துருசு வகைக்கு ஒரு பலம், வெங்காரம், நவாச்சாரம், வீரம், பூரம், கந்தகம், இரசம் இவைகள் வகைக்குக் கால்பலம் ஆகிய இவைகளையெல்லாம் குழிக்கல்லிலிட்டு வெற்றிலேச் சாற்றுல் மெழுகு பதமாகும்படி மூன்று நாளரைத்து, ஒவ்வொரு மாத்திரையும் ஒவ்வொரு வராகனெடை இருக்கும்படிச் செய்து, வெந்நீரில், நோயளவுக்குத்தக்க நாளளவும் மருந்தளவும் தெரிந்து கொடுத்தால் எல்லாவிடங்களும் நீங்கிப் போகும். (வி. ஆ.)

### வழலேக்கடியின் பொதுக் குறிகுணமும் மருந்தும்.

அரிதான வழலேவிட மெதுவா னுலும்
அங்கத்து நெஞ்சடைக்கும் தகையே காணும்
சொரியுமடா கடிவாயி லுதிரந் தானும்
சுழற்றிவாய் வழவழக்குந் துவளு நாவும்

இருவிழியும் பிதுங்கியன்றே வழலை கக்கும்
இதமான நீலகண்ட குளிகையூட்டிச்
சிறுநீரில் வசம்புள்ளி நல்ல தாளி
சேர்த்தியச் சகலவிடஞ் சிதறிப் போமே.

(பொ - ரை.)—அரிதான வழலையின் நஞ்சு எதுவானாலும் மார்படைத்தல், கடித்தவாயில் இரத்தங்கக்கல், தலைசுழற்றல், வாய்வழவழத்தல், நா துவளல், இருவிழிகளும் பிதுங்கல், கோழை கக்கல் என்னும் இக்குறி குணங்கடுண்டாவனவாம். இக்குறிகுணங்களைக் கண்டவுடனே நீலகண்ட குளிகையைக் கொடுக்கவேண்டும். இதுவல்லாமலும், வசம்பு, வெள்ளைப் பூண்டு, நல்லதாளி இவைகளைச் சரியளவுகூட்டிச் சிறுநீரில் அரைத்துப் புன்னைக்காயளவாக நோயளவுக்குத்தக்க நாளளவு உள்ளுக்குக் கொடுத்தால் சகலவிடங்களும் ஒழிந்துவிடும். (வி. ஆ.)

**(வேறு.)**

காயு முடம்பு வலிகாணும் கடிவாய் கடுக்கும் குருதிவரும்
வாயு மெரிந்து வழுவழுத்து வயிறு பொருமித் துயரமுறும்
சாயு மயங்கிக் கண்மூடித் தானே மருந்து குமட்டிடிலோ
தோயுங் குணங்கள் கருவழலை சொல்லக் கடித்த குறிதானே.

(பொ-ரை.)—உடம்புகாய்தல், உடம்புநோதல், கடிவாய் கடுத்தல், கடிவாயில் இரத்தம்வடிதல், வாய் எரிச்சலுடன் வழுவழுத்தல், வயிறு பொருமித் துன்பமடைதல், தலைசாய்தல், மயக்கம், கண்மூடல், உண்ணும் மருந்தைக் குமட்டல் என்னும் இக்குறி குணங்கள் காணப்பட்டால் கருவழலை கடித்த தென்று அறிவாய். (ச. ஆ.)

**மேற்படிக்கு மருந்து.**

வெறுத்தே வழலை கடித்ததென்றால்
விடத்தை யொழிக்க மருந்தைக்கேள்
மறுத்திப் பிலிகாக் கணத்தோடு
மடக்கும் வராகிக் கிழங்குடனே
அறுத்தே சமனுய்க் காடிதனில்
அரைத்தே புன்னைக் காயளவு
சிறுத்தே வெந்நீ ருடனருந்தத்
தீருங் காந்தல் விடம்போமே.

(பொ - ரை.)—வழலை வெறுப்படைந்து கடிக்குமானால் அதனாலுண்டாம் நஞ்சைப்போக்கும் மருந்தாவது : திப்பிலி, வெள்ளைக்காக்கணவேர்ப்பட்டை, நிலப்பனங்கிழங்கு இவைகளைச்சரி எடையாய் எடுத்துக் காடிநீர் விட்டரைத்துப் புன்னைக்காயளவாக வெந்நீரிற் கலந்து நோயளவுக்குத்தக்க நாளளவு கண்டு கொடுத்தால் காந்தலுடன்கூடின வழலைக்கடி நஞ்சு தீரும். (ச. ஆ.)

**கருவழலைக்கடிக் குறிகுணமும் மருந்தும்.**

கொலைசெய்யுங் கருவழலை கடித்த தானால்
கொடுஞ்சாமுந் தலைகையுங் கால்சிவந்து
பல்கூசிக் கண்சிவந்து பல்லு நோகும்
பருநாவில் வழலைசுற்றி நெஞ்சடைக்கும்

நீலகண்டக் குளிகையந்தக் கணமே நீட்டு
நீலமுடன் கோழிமுட்டைக் கடுரோகணியும்
சாலமேலே துவாலையிட் டாவின் பாலில்
சாந்தமுட னிம்மருந்தை யுள்ளருந்தே.

(பொ - ரை.)—கொல்லக்கூடியதான கருவழலையானது கடித்தால், கொடுமையாய்ச் சுரமடித்தல், தலை, கை, கால்கள் சிவத்தல், பல் கூசல், பல் நோதல், கண்சிவத்தல், நாவில் கோழைசுற்றிக்கொண்டு நெஞ்சையடைத்தல் என்னுங் குறிகுணங்க ளுண்டாவனவாம்.

இக்குறிகளைக் கண்டவுடனே நீலகண்ட குளிகையை உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கு அவிரிவேர்ப்பட்டை, கடுகுரோகணி இவற்றைச் சரியெடை எடுத்துக் கோழிமுட்டை வெண்கருவாலரைத்துத் துவாலையிட்டும், இம்மருந்தைச் சிறிதளவு ஆவின்பாலில் கலக்கி உள்ளுக்குக் கொடுத்தும்வர கருவழலைக்கடி நஞ்சுதீரும். (வி. ஆ.)

**மயக்கரவின் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

போக்கான மயக்கரவந் தீண்டிற்ருனல்
பொறியச்சுத் தட்டினுற் போற்சுழன்று
நாக்கசந்து மதிமயங்கி மெய்ந்நடுங்கி
நட்டவிழி மேல்சொருகிக் கீழேவீழ்த்தும்
தாக்கப்பா நீலகண்ட குளிகைநீரில்
தந்திரமாய்க் கறிப்பாலை வேரைத்தின்னே
ஊக்கமா யாதண்டை மிளகுத்தூளும்
ஒன்ருகப் புகைத்திடவே யோடிப்போச்சே.

(பெ - ரை.)—மயக்கரவந் தீண்டினுல் தலைசுழலல், நாக்கசத்தல், மதிமயங்கல், மெய்ந்நடுங்கல், நட்டபடியேகண்களிருந்து சொருகிக் கீழேபடுத்தல் என்னும் இக்குறிகுணங்கள் உண்டாகும். இதற்கு நீலகண்ட குளிகையை வெந்நீரிற் கொடுக்கவேண்டும். இதுவல்லாமல் கறிப்பாலை வேரைத்தின்னவேண்டும். மற்றும் ஆதண்டைவேர்ப்பட்டை, மிளகுத்தூள் இவைகள் இரண்டையும் சரிஎடை எடுத்துத் தூளாக்கி நெருப்பில் போட்டு அதனுலுண்டாகும் புகையைக் கடிவாயிற்பிடித்தால் மேற்படி மயக்கரவின் கடிநஞ்சு தீர்ந்துவிடும். (வி. ஆ.)

**மயக்கரவு கடிக்கு மருந்து.**

தலைப்படு மயக்கரவம் — கடித்திடில்
தங்குகறிப் பாலையின்வேர் துங்கவிடம்போம்
பயப்படு மிளகுப்பொடி — காய்ந்தவோட்டில்
படுத்தி முகத்திற்புகை கொடுப்பதுமாம். (சி. ஆ.)

(பொ - ரை.)—மயக்கரவங்கடித்தால் கறிப்பாலைவேரை வெந்நீரிலரைத்துக் கொடுத்தால் மேற்படி விடம் நீங்கும். இதுவுமன்றி, நன்ருய்க்காய்ந்த ஓட்டில் மிளகுப்பொடியைப்போட்டு அதிலிருந்து வரும்புகையை முகத்திற்படும்படி பிடித்தாலும் மேற்படி விடம் நீங்கும்.

**பரநாகம், கரிநாகம், கன்னெஞ்சன், சவடி, கொம்பேறுமூக்கன், மண்ணுளி, இருதலைமணியன், கண்ணெரியன், சாரை இவைகளின் கடிக்குறி குணமும் மருந்தும்.**

பரநாகங் கரிநாகங் கன்னெஞ்ச னூமை
பார்த்திருக்க மதிமயங்கு நெஞ்ச டைக்கும்
ஒருநாளு மாக்கினைக்கு ளடங்கா தப்பா
ஊமத்தை யிலைகசக்கிச் சாறு வாங்கித்
திருவான சிரமுச்சி செவிகண் ணூசி
சேரவே நசியமிட்டுத் துவாலை பூசி
சிறுசின்னி பங்கம்பாளை கொல்லன் கோவை
சிறுநீரில் காற்படியு மருந்த லாமே.

அருந்தினுற் சவடியும் கொம்பேறு மூக்கன்
அம்மம்ம மண்ணுளி யிருதலை மணியன்
திருந்தவே நசியமிட்டு மருந்தை யுண்டால்
செணத்திலே கண்ணெரியன் விடமுந் தீரும்
அருந்தியே நசியமிட்டுக் கோவைச் சாற்றை
அங்கத்திற் பூசக்கண் ணெரியன் போகும்
அருந்தடா பிண்ணாக்குச் சமூலந் தன்னால்
அக்கணமே சாரைவிட மகன்று போச்சே.

(பொ - ரை.)—பரநாகம், கரிநாகம், கன்னெஞ்சன், ஊமைச் சவடி, கொம்பேறுமூக்கன், மண்ணுளி, இருதலைமணியன் ஆகிய இவைகடித்தால், அறிவுமயங்கல், நெஞ்சடைத்தல் என்னும் குறிகுணங்களுண்டாம். இப் பாம்புகளெல்லாம் ஒருநாளும் கட்டுக்கடங்காதனவாம். ஆகையால், இவை களின் விடங்களுக்கு ஊமத்தையிலையைக் கசக்கிச் சாறு எடுத்துத் தலை யுச்சிற் பூசியும், செவி, கண், மூக்கு இவைகளில் விட்டும், கடிவாயிலும் உடம்பிலும் துவாலையிட்டும், சிறுசின்னி, ஆடுதின்னாப்பாளை, ஆகாச கருடன் கிழங்கு இவைகளைச் சரி எடை எடுத்துச் சிறுநீர் விட்டிடித்துப் பிழிந்த சாறு கால்படி குடித்தும் வரவேண்டும். கோவைச்சாற்றை உடம்பில் பூசுவதுடன் நசியஞ் செய்தாலும் கண்ணெரியன் விடந்தீரும். பிண்ணாக்குச் சமூ லத்தை உள்ளுக்குங் கொடுத்து வெளியிலும் பூசினால், சாரை விடம் நீங்கும். (வி. ஆ.)

**சாரைப்பாம்பின் உருவமும் செயலும்.**

இது நீண்ட உடலையுடையது. வளைந்து வளைந்து செல்லாது. நேராக ஊடுருவிச் செல்லும் நடையுடையது. மனிதரை வாயால் கவ்வி நீண்ட வாலால் அடிப்பதுடன், கால்முதல் மார்புவரையில் சுற்றி, இடுப்பையும் ஒடிக்கும்.

**சாரைப்பாம்பின் பிரிவு-4.**

இது (1) வெண்சாரை, (2) கருஞ்சாரை, (3) செஞ்சாரை, (4) மஞ்சட் சாரை என நான்கு பிரிவினைப் பெறும். இவைகளைப் பார்த்த எருமை மாடுகளுக்கு மாலைக்கண் உண்டாகுமென்பர்.

**சாரை, இருதலைமணியன், சுருட்டை, கூளை, மண்ணுண்ணி, புல்லுருவி.**

இவைகள் கடித்தாலும், நக்கினாலும், மெய்த்தடிக்கும், குட்டமுண்டா கும்.

இவ்விடம் நீங்க—(1) தான்றி, (2) புன்னை, (3) கழற்சி, (4) இறங்கழிஞ் சில், (5) கடுக்காய், (6) மகிழ், (7) புங்கு, (8) கார்போகவரிசி.

இவ்வெட்டுவகை வித்துகளையும் சமவெடையெடுத்து கோசலத்தில் ஒரு மாதம் ஊறியபின் னெடுத்து உலர்த்திக் குழித்தயிலமெடுத்துக் கழஞ்சு வீதம் வெற்றிலையில் தடவி அருந்திவர மேற்படி விடந் தீரும். (சி. ஆ., க.ஆ.)

**கொம்பேறுமூக்கன் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

ஓட்டமுள்ள கொம்பேறு மூக்கன் தானும்
ஓகோகோ மூக்கனென்ற சாதிக் கெல்லாம்
நாட்டிலே கடித்தவுட னுடல்கு ளிர்ந்து
நடுங்கியே மதிமயங்கித் தலையை நாணும்
நீட்டியே பிரண்டைவேர் பலமோ வொன்று
நீலகண்ட குளிகைநால் வெந்நீ ராட்டி
ஊட்டியே மேலுமதைத் துவாலை போட
ஓடுமது சாணகம் புடையன் கூட.

(பொ - ரை.)—மூக்கனென்னும் குலத்திற் கொம்பேறு மூக்கன் கொடியதாம். ஆகலின், அது கடித்தவுடன் கடியுண்டவனுடைய உடலானது சில்லிட்டு, நடுங்கும். அறிவுகலங்கும். தலை நட்டுக் கொள்ளும்.

மருந்து.—பிரண்டை வேர் பலம் 1, நீலகண்ட குளிகை 4, இவ்விரண்டையும் வெந்நீர் விட்டரைத்து உள்ளுக்குக் கொடுத்து, மேலுக்குத் துவாலை போட்டால் மேற்படி கொம்பேறு மூக்கன் நஞ்சு தீரும். இதுவுமல்லாமல் சாணகம் புடையனுடைய நஞ்சும் தீரும். (வி. ஆ.)

**மூக்கன் கடிக் குறிகுணம்.**

சந்துடன் கைகா லெல்லாம் தான்வலி வாதம் போல
நொந்துடன் கடிவாய் தன்னில் நோக்கவே நீரும் பாயும்
வந்துடன் மயக்க முற்றால் வருத்தங்கள் பலவு முண்டாம்
முந்துடன் நாவு லர்ந்தால் மூக்கனென் றுரைக்க லாமே.

(பொ - ரை.)—பூட்டு, கைகால் இவற்றில் வலித்தல், கடிவாய் நோதல், அதில் நீர் வடிதல், உடல் மயக்கம், பலவகையான வருத்தங்கள், நாவுலர்தல் என்னுங் குறிகுணங்கள், மூக்கன் என்னும் பாம்பு கடித்தால் உண்டாவனவாம். (ச. ஆ.)

**பச்சைப்பாம்பு (கண்குத்திப்பாம்பு)க் கடிக் குறிகுணம்.**

இது, மரங்களில் வசிக்கும். இதன் அருகில் நெருங்கியவர்களின் கண்களைக் குத்தும். பசிய நிறமும் நீண்டவுருவமும் பெற்றிருக்கும். இது கடிப்பது அருமை. ஒருக்கால் கடித்தால் வீக்கமுண்டாகும்.

இவ்விடத்திற்கு, (1) தழுதாழை, பண்ணை, பரட்டை இவைகளின் இலையைச் சிறுநீர் விட்டரைத்துக் கடிவாயில் பூசி வரலாம்.

(2) ஆத்தியிலையைப் பொடித்து வெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வீக்கத்திற்கும் தடவி, நாசியிலும் இரண்டொரு துளி விடலாம். (சி. ஆ.)

**சிறு பாம்புக் கடிக் குறிகுணம்.**

இது, மண்ணுளிப்பாம்பு என்றும் வழங்கும். இரத்தம், செம்பு, வெள்ளி ஆகிய இவைகளின் நிறத்தையும், பயற்றங்காய் அளவும் உருவத்தையும் பெற்றிருக்கும். காதில் நுழைந்தால் அபாயந்தரும். இது கடித்தால் உடல் முற்றும் சிறிது சிறிதாய்த் தடித்து சிவந்து நமைச்சலையுண்டாக்கும். சில நாள் மறைந்திருப்பினும் பருவந்தோறும் தோன்றிவரும்.

மருந்து.

கேழ்வரகுக் கூழுடன் எண்ணெய் விட்டுக் குழப்பி எழுநாள் உண்ணத் தீரும்.

(வேறு.)

வராகிக் கிழங்கு சிறுகிரை பொன்னுங் காணி யதிமதுரம்
பராவி யரைத்துக் கடிவாயில் பரவப் பூசில் விடமறுமே
பிராயம் பாலு மெருக்கினது பிழியும் பாலுங் கொடிக்கள்ளிப்பால்
அராவை முதலாஞ் சிறுபாம்பின் விடமு மமுதா மப்பொழுதே

(பொ - ரை.,—நிலப்பனங்கிழங்கு, காட்டுச் சிறுகிரை வேர், பொன்னுங் காணி வேர், அதிமதுரம், இவைகளைச் சரி எடை எடுத்து அரைத்துக் கடி வாயிற் பூசினாலும்; பிராயம்பால், எருக்கம்பால், கொடிக்கள்ளிப்பால் இவற்றைக்கலந்து கடிவாயிற் பூசினாலும் சிறு பாம்பு விடந்திரும்.

(வேறு.)

சிறுகுறிஞ்சான் வேரை வெந்நீர்விட்டரைத்து அந்தி சந்தி பாக்களவு மூன்று நாள் கொடுத்து உப்பில்லாப் பத்தியம் வைத்து, மேலும் மூன்று நாள் மருந்தை நிறுத்தி, எழாநாள் தலைக்கு சலத்தைவிட சிறுபாம்புத தடிப்பு மாறும். (புலி- 500.)

**சாணகம், புடையன் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

சாணகம் புடையனுமே தீண்டிற் றானால்
சந்துதலை தேகமெல்லாங் குடைச்ச லாகும்
ஆணவமாய் நீலகண்ட குளிகை தன்னை
ஆடுதின்னாப் பாளையுட னரைத்த ருந்து
பாணியே விங்குகின்ற புடைய னாகில்
பருத்தியிலை யரைத்ததனைப் பற்று போடு
ஏனுமதிற் பழம்புளியைப் பற்று போடு
எழுநாள் நீர்முள்ளி யிலைய ருந்தே

(பொ - ரை.)—சாணகனாவது, புடையனாவது தீண்டினால் பூட்டுகள், தலை, உடல் இவைகள் முழுமையும் குடைதல் உண்டாம். இதற்கு, நீலகண்ட குளிகை இரண்டு எடுத்து அதற்குச் சரியளவாய் ஆடுதின்னாப்பாளையிலையைச் சேர்த்தரைத்து உள்ளுக்குக் கொடுத்தால் மேற்படி நஞ்சுகள் நீங்கும். இதுவன்றி, விங்குபுடையன் கடித்தால், பருத்தியிலையை வெந்நீர் விட்ட ரைத்துக் கடிவாயிற் பற்று போட்டாலும், பழம்புளியைப் பற்றுபோட்டா லும், மேற்படி வீக்கம் நீங்கும். நீர்முள்ளி இலையை அரைத்து எழு நாள் கொடுக்கலாம். இப்படிச் செய்தால் மேற்படி விடம் நீங்கும். (வி. ஆ.)

**அருங்கட்டுப்புடையன் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

அருங்கட்டுப் புடையனது கடித்த தானால்
அங்கமெல்லாங் குரும்பைபோற் கட்டும் பாரே
எருக்கம்வேர்த் தூளிலையும் வசம்பு மூட்டி
இதமாக நாசியிலே புகையைச் சூட்டி

மருவவரு நேர்வாளஞ் சிறுநீ ராட்டி
மக்களே கடிவாயிற் பூசிப் போடு
கருவிரத்தப் புடையனிரத்த விரியன் தானும்
கேடுகெட்ட விரத்தமண் டலியா னும்.

(பொ - ரை.)—அருமையான கட்டுப்புடையன் கடித்தால், உடம்பெல்லாம் தென்னங்குரும்பைபோற் கண்டு கண்டாய்வீங்கும். இதற்கு, எருக்கம் வேர்ப்பட்டைத்தூள், இலைத்தூள், வசம்புத்தூள் இவற்றைச் சரி எடை கூட்டி நெருப்பிலிட்டு வரும் புகையை மூக்கில் ஏற்றிக் கடிவாயில் வாளத்தைச் சிறுநீராலரைத்துப் பற்றுபோடவேண்டும். இவைகளால் மேற்படி நஞ்சு தீரும்.

**இரத்தப்புடையன், இரத்தவிரியன், இரத்தமண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

* * *

அண்டும்விட மூன்றுமிவை யொன்றே யாகும்
அதட்டியே சத்திபண்ணும் வாய்மூக் காலும்
கெண்டிகொண்டு சாய்த்தாற்போ லுதிரங் கக்கும்
கேசாதி பாதமுத லிரத்தம் வேர்க்கும்
தண்டான மோர்விட்டு வெள்வேல் பட்டை
தானிடித்துப் படியொன்று நல்லெண்ணெய் காலே.

காற்படியிற் புத்தாஞ்சோறு கரைய வாட்டிக்
கைபொறுக்கக் காய்ச்சியுட லெங்கும் பூசு
மேலுமதை யுள்ளருந்த விடமே போச்சு
மேலான புடையனென்ற குலத்துக் கெல்லாம்
நாலுபல நேர்வாளங் கூடப் போட்டு
நான்குநா ளிருநேரங் கழஞ்ச துண்ணப்
பாலகனே சுருட்டைவிட மூமைப் பாம்பு
பல்லிமுத லோந்திவிடம் பறக்குந் தானே.

(பொ - ரை.)—இரத்தப் புடையன், இரத்த விரியன், இரத்தமண்டலி என்னும் மூன்றின் நஞ்சும் ஒரே வகையதாகும். அந்நஞ்சுக்குறிகளாவன: கொக்கரித்து வாந்தி பண்ணல், வாயாலும், மூக்காலும் கெண்டியிலிருந்து செந்நீர் சாய்த்தாற்போல் இரத்தம் ஒழுகல், தலை முதற் கால் வரைக்கும் இரத்த வேர்வை விடல், என்னும் இவைகளாம். இதற்கு, வெள்வேலம்பட்டையைப் பசுவின்மோர்விட்டிடித்துப் பிழிந்த நீர் படி 1 நல்லெண்ணெய் படி $\frac{1}{4}$ இவ்விரண்டையுங்கலந்து இதில் புத்தான் சோற்றை அரைத்துக் கலக்கிக் கைபொறுக்கக் கூடிய சூடிருக்கும்படி காய்ச்சி மேலெங்கும்பூசி, உள்ளுக்குங் கொடுத்தால் மேற்படி நஞ்சுகளெல்லாந் தீரும். புடையன் வகைகளுக்கெல்லாம் மேலே சொன்னதில் நேர்வாளம் நான்கு பலம் கூடச்சேர்த்து அரைத்து நான்கு நாள் இரண்டு வேளையும் கழஞ்சளவு கொள்க. இதனல் மேலே சொல்லப்பட்ட விடங்களெல்லாம் நீங்கும். இவையன்றி சுருட்டைவிடம், ஊமைவிடம், பாம்பு விடம், பல்லிவிடம், ஓந்திவிடம் இவையும் நீங்கும். (வி. ஆ.)

**புடையன் கடிகளுக்கு மருந்து.**

“ பிரண்டையின் வேரரைத்துப் — புன்னைக்காய்ப்
பிரமாணம் வெந்நீரிற் பருகிடினும்
திரும்பிடும் மூக்கன்விடம் — புடையனில்
செப்பிடு நால்வகைச் செந்துக்கடாம்
துள்ளியே பற்கள்படக் — கடித்தவாய்
தூணென வீங்கியே வியர்வரும்பில்
ஒள்ளிய காட்டுக்கருணைக் — கிழங்கும்
உயர்ந்திடு புகையூறல் கொட்டைக்கரந்தை
இருப்பையின் பழக்கோதும் — அமுரிவிட்
டிளக வரைத்துப்பூ சிடிலேகும்
வரியுறுங் கட்டுப்புடையன் — கடித்திடில்
வசம்புட னெருக்கம்பால் புத்தின்சோறும்
புகைத்திட நாசியிலே — விடமது
திகைத்திடு மென்றுரோர் கணத்தினிலே
பகைத்திடு நெடுங்கழுத்துப் — புடையன்பல்
பதிந்திடக் கடித்திடிற் படமடக்கிக்
கிழங்கினைப் பாலிலருந்த — விடம்விட்டுக்
கிட்டாம லோடிவிடுந் திட்டமுடனே
வழங்கிய புகையூறல் — நீலியிலை
வடிகண்ண மிருப்பைக்கட்டி கொடிக்கள்ளிப்பால்
விட்டரைத்துப் பூசிடினே — வீக்கம்
விலகிடு மினியொன்றை விளம்பிடக்கேள்
ஒட்டறும் விழியின்பூ — அரைத்துண்ண
ஒருநாலு புடையன்விட மொழிந்திடுமே. ”

என்று மேற்படி புடையன் நஞ்சுகளும், மருந்துகளும் கௌசிகர் சித்தாரூடத்திற் புகன்றிருத்தலையும் காண்க.

குறிப்பு.—நாக முதலிய சர்ப்ப பேத விடங்கட்கெல்லாம் அப்பிரகபற்பத்தை வெண்குன்றி மிலைச் சாற்றில் கொடுக்கலாம்.

**மண்டலி பதினுறின் பொதுக் கடிக் குறிகுணம்.**

கேளப்பா மண்டலியிற் பதினு றுண்டு
கெடியாக வுப்புறைக்கும் வாய்நீ ரப்பா
நாளப்பா தலைசுழற்றி மெய்ந்ந டுங்கும்
நலமாகத் தோள்முனையு முளைந்து காணும்
ஆளப்பா வுடல்குடைந்து பேதி காணும்
அங்கமெலாங் குளிர்ந்துசலங் குருதி காணும்
கேளாது செவிமூக்கி னுள்ளே நாற்றம்
கெட்டுவிழி சோம்பிவரும் நன்றுய்க் கேளே.

(பொ - ரை.)—மண்டலியிற் பதினுறு வகையுண்டு. அவைகளின் கடியின் பொதுக்குறிகுணங்களாவன : வாய்நீர் உவர்க்கும். தலை சுழற்றும். உடல் நடுங்கும். தோள்முனை மிக உளையும். உடல் முழுமையும் குடைச்சலுண்டாகும். பேதியாகும். உடம்பு முழுமைக்கும் சில்லென்றுகும். மயிர்க்கால்களில் நீராகவாவது, இரத்தமாகவாவது வெளிப்படும். காது கேளாது. மூக்கு நாற்றமறியாதபடி கெட்டுப்போம். விழி சோரும். இவைகளை நன்றுய் அறிவாயாக.

### மண்டலி—16.

இம்மண்டலி பதினாறு வகைப்படுமென்பர். அவற்றிற் சிலவற்றை அடி யிற் காண்க.

### உதிர மண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும்.

குணமென்ன உதிரமண் டலியே தீண்டில்
கூகூகூ வொருநொடியிற் கொல்லு மப்பா
கனமாக வாய்மூக்கி லுதிரஞ் சாய்க்கும்
கண்தெரியா செவிகேளா துடலம் வேர்க்கும்
அநியாயம் வேர்வையெல்லா முதிர மோடும்
ஆகாசம் புவிதெரியா தயர்த்தே தள்ளும்
இனியென்ன மீளுமென் றுருஞ் சொல்லார்
இதற்கரிய குடோரியதா மருந்தைக் கேளே.

மருந்தென்ன புத்துச்சோறு பலமே யொன்று
மக்களே நல்லெண்ணெய் படிகா லாகும்
திருந்தவே யாட்டியதைப் பதமாய்க் காய்ச்சிச்
சிந்தாம லவிழ்தமாய்ச் செய்த துள்ளே
யருந்தியே கடிவாயிற் றுவாலை போட்டே
யங்கமெலாம் கோவைச்சாறு துவாலை போடு
அருந்தவே யின்னமொரு மருந்தைக் கேளாய்
ஆனைதான் வணங்கியிலை யவிழ்த மாமே.

### வீங்கு மண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும்.

அவிழ்தமாய்த் தண்ணீரி லரைத்த ருந்தி
யதைத்தானே துவாலையிடத் தீரும் பாராய்
அவிழ்தமாங் கொல்லனிட கோவை மூலம்
அரைத்துண்டு மதைத்தானே துவாலை பூசி
அவிழ்தமாந் தூதுவளை வீழி மூலம்
அம்மம்ம வீங்குமண் டலிக டித்தால்
நிவிழ்தமாம் உடல்முழுதும் கணத்தில் வீங்கும்
நித்திரைகண் விழியாது நீரே வேர்க்கும்.

வேர்த்தவுடன் குங்குமப்பூ மூக்கிரட்டை வேரும்
வெற்றியுள்ள முத்தெருக்கஞ் செவியின் மூலம்
நேர்த்தியுள்ள பெருமரத்தின் பட்டை யாகும்
நினைவாக விலுப்பையிலை சமனய்க் கூட்டி
வார்த்தரைத்துக் காடியுடன் படிகு டித்து
வளமாக வுடல்முழுதுந் துவாலை போடக்
காற்றிலிட்ட பஞ்செனவே காணு தோடும்.

(பொ - ரை.)—உதிரமண்டலி கடித்தால், அதன் விடம் ஒரு நொடியிற் கொல்லும். வாயினும் மூக்கினும் இரத்தம் சிந்தும். கண் தெரியாது. காது கேளாது. உடல் வேர்க்கும். ஆனால், அவ்வேர்வைகளெல்லாம் இரத்த மாகவேயிருக்கும். இது வெளியென்றும், பூமி என்றும் தோன்றாதபடி மயக்கித்தள்ளும். இவ்விடம் திரும்புமென்று ஒருவருஞ் சொல்லமாட்டார் கள். இவ்விடத்திற்குக் குடோரியாகிய ஒரு மருந்தைச் சொல்லுகிறேன்.

புத்துச்சோறு பலம் 1, நல்லெண்ணெய் படி ¼, இவ்விரண்டையும் சேர்த்து நன்குயரைத்து ஒரு மண் சட்டியிலிட்டுக் கெடாமல் பக்குவமாய்க் காய்ச்சி எடுத்துக் கடிவாயிற்றுவாலே போட்டுச் சிறிது நேரம் பொறுத்துக் கோவைச்சாற்றை உடம்பு முழுமைக்கும் பூசி, பின்னர் ஆனை வணங்கி என்னும் யானைநெருஞ்சி யிலேயைத் தண்ணீராலரைத்து நோய் வன்மைக் குத்தக்க நாளளவு மருந்தளவுகளை ஆராய்ந்தறிந்து கொடுத்து அதையே மேலுக்கும் பூசவேண்டும், அல்லாமல் ஆகாசகருடன்கிழங்கை அரைத்து உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசலாம். இவைகளல்லாமலும் தூதுவேளை வேரையாவது, விழுதி வேரையாவது அரைத்துக் கொடுக் கலாம். இப்படிக் கொடுத்தால் மேற்படி உதிர மண்டலி கடி விடம் திரும்.

(பொ - ரை.)—விங்குமண்டலி கடித்தால், உடனே உடல் முழுமையும் விக்கம் உண்டாதல், கண் திறவாதபடி தூங்கல், உடல் முழுமையும் வேர்த்தல், என்பவைகள் உண்டாம்.

இதற்குக் குங்குமப்பூ, மூக்கிரட்டைவேர், நிலக்கடம்பின்வேர், பெரு மரப்பட்டை, இலுப்பையிலே இவைகளைச் சரி எடைகூட்டிக் காடி விட்டரைத்துக் காடியிற் கலந்து சிறிய அளவாகப் படியளவு வரைக்குங் குடித்து, அதையே உடம்பு முழுமைக்குந் துவாலே போட்டால், மேற்படி வீங்கு மண்டலி விடம் காற்றிற் பட்ட பஞ்சுபோலாம்.

### சொறிமண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும்.

* * *

கடியசொறி மண்டலிதான் கடித்த தானல்
கடித்தவுடன் தன்குணந்தான் கண்சொ ருகும்
கருகிட்டு நாக்குவாய் வரண்டு போகும்
தடித்துவிட் டடல்வரண்டு சொறியே காணும்
தனியாவின் பாலினன் னரி வேரைக்
குடித்திட்டுப் பொன்முசுட்டை பாலி லாட்டிக்
கூசாம லுடல்முழுதுந் துவாலேபோடு.

(பொ - ரை.)—சொறிமண்டலி கடித்தால், உடனே கண் சொருகல், கண் கருகல், நாக்கும் வாயும் வரளல், உடல் தடித்தல் (வீங்கல்), உடல் சுரசுரவென்று வரளல், சொறி காணல் என்பவைகள் உண்டாவனவாம்.

இதற்கு—நன்னாரிவேரைத் தனியான பசுவின் பாலாலரைத்துக் குடித்து, உடனே பொன் முசுட்டை வேரைப் பாலில் அரைத்து மனங் கூசாமல் உடல் முழுதுந் துவாலே போடவேண்டும். இவைகளால் மேற்படி சொறி மண்டலிவிடந் திரும்.

### பேதிமண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும், எரிமண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும்.

கடித்திட்டால் பேதியென்ற மண்ட லிக்குக்
காய்ச்சல் குளிர் பேதியடா கடுமை யாமே

. . . . . . . . . . .

கடிதான பேதியென்ற மண்ட லிக்குக்
காயமும் வசம்புள்ளி யோடு கந்தி
கொடிதான நீலிபெரு மரத்தின் பட்டை
குடித்திடவா யாவின்பால் குடியோ டிப்போம்

முடியாத வெறிமண்டலி தான்க டித்தால்
மூச்சுவரும் நெருப்பாக முகமெரியும்
அடிக்கடிதான் தலைசுழற்றிக் கீழே தள்ளும்
அங்கமெலா நெருப்பெரியுஞ் சலமாய்ப் பாயும்.

(பொ - ரை.)—பேதிமண்டலி கடித்தால் காய்ச்சல், குளிர், பேதி, இவைகள் கடுமையா யுண்டாவனவாம்.

இதற்கு—பெருங்காயம், வசம்பு, வெள்ளைப்பூண்டு, கந்தகம், அவுரி வேர், பெருமரப்பட்டை இவைகளைச் சரி எடையாய் எடுத்துப் பசுவின்பால் விட்டரைத்துக் குடித்தால் மேற்படி விடம் நீங்கும்.

எரிமண்டலி கடித்தால் பெருமூச்செறிதல், முகம் நெருப்பாக எரிதல், அடிக்கடி தலை சுற்றிக்கீழே தள்ளிவிடுதல், உடம்பெல்லாம் நெருப்புப் பட்டாற்போல் எரிதல், ஓயாமல் வேர்வை விடுதல் என்னுங் குறி குணங்கள் உண்டாம்.

**எரிமண்டலிக் கடிக்கு மருந்தும், வெறிமண்டலி கடிக் குறிகுணமும்.**

ஓயாத வெரிமண் டலியே போக
ஒருபலந்தான் விடதாரி வேரா வின்பால்
ஆகமாய்ப் படியொன் றரைத்தே யுண்பாய்
அதைத்தானே யங்கமெலாந் துவாலை பூசே
வேகமடா வெறிமண் டலிக டித்தால்
வேறென்றுந் தெரியாது பிரமை தோன்றும்
கோவமா யெழுந்தன்றே வெளியி லோடும்
கொண்டவெறி யாலெடுத்துக் கடிக்குந் தானே.

(பொ - ரை.)—எரிமண்டலி கடித்ததனால் உண்டான விடம் தீர்வதற்கு, விடதாரிவேர் பலம் ஒன்றைப் பசுவின்பால் விட்டரைத்து ஒருபடி பசுவின் பாலிற் கலக்கியதைச் சிறிது சிறிதாய்க் கொள்ளுவதுமன்றி அதையே உடம்பு முழுமைக்கும் துவாலை செய்யவேண்டும்.

வெறிமண்டலிக் கடிக்குறிகுணமாவது: நிலத்திலுள்ள எந்தப் பொருளுங் கண்களுக்குத் தோன்றாதபடி பிரமை உண்டாதல், அன்றிக் கோபங் கிளம்பி எழுந்து வெளியில் ஓடிப்போதல், தான் கொண்ட வெறியால் வாய்திறந்து கடித்தல் என்பவைகளாம்.

**வெறிமண்டலிக் கடிக்கு மருந்து.**

கடித்திட்ட வெறிமண்ட லிதான் திரக்
கரும்புள்ளி வண்ணாத்தி தனைப் பிடித்து
வடித்திட்ட மெழுகுபோற் பலம ரைத்து
வாகாக நல்லெண்ணெய் படிகா லப்பா
துடித்திட்ட மெழுகுபத மாகக் காய்ச்சித்
துவாலையிட் டுடலெல்லா முறுக்கி வாங்கிக்
குடித்திட்டா லாழாக்கில் வெறியே தீரும்.

* * * *

(பொ - ரை.)—வெறிமண்டலிக் கடி தீர்வதற்கு கறுப்புப்புள்ளியை யுடைய வண்ணாத்திப்பூச்சியைப் பிடித்து, ஒரு பலமெடுத்துக் கல்வத்திலிட்டு மெழுகுபோலரைத்துக் கால்படி நல்லெண்ணெயிற் கரைத்து அடுப்பேற்றி

மெழுகு பதமாகக்காய்ச்சி இறக்கி, உடல் முழுமைக்கும் துவாலையிட்டு உடலை நன்றாய் முறுக்கிப்பிடித்து, அந்த எண்ணெயில் நாள் ஒன்றுக்கு ஒரு பலம் விதம் ஐந்து நாள் வரை குடித்தால் மேற்படி வெறிமண்டலி நஞ்சு தீரும்.

**சீதமண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

சீதள மண்டலியே கடித்த தானல்
செணத்திலே யுடல்குளிர்ந்து வெறிக்கும் பாராய்
மூதவாய் குழகுழத் துதடுஞ் சாயும்
முத்தெருக்கஞ் செவிகாடி தனில வரைத்து
நீதமாய்க் கொதியிட்டுத் துவாலை பூசு
நெய்மிளகுத் தூள்பலமு நேரே யுண்பாய்
ஏதஞ்சல மண்டலிதா னெங்கோ போயிற்
றின்னம்வெகு மண்டலியின் குணத்தைக் கேளே.

(பொ - ரை.)—சீதமண்டலி என்னும் சலமண்டலியானது கடித்தால் உடனே உடல் சில்லிட்டு வெறியுண்டாகும். வாய் குழகுழப்பாம். உதடு நோாய் நில்லாமல் தளர்ந்து தொங்கிவிடும். இதற்கு—முத்தெருக்கஞ் செவி என்னும் நிலக்கடம்புச் செடிச் சமூலத்தைக் காடிவிட்டரைத்து அடுப் பேற்றிக் கொதிக்கவைத்து, உடல் முழுதும் பூசவேண்டும். அன்றியும் ஒரு பலம் நெய்யில் ஒரு பலம் மிளகுத்தூள் சேர்த்து நஞ்சளவு கண்டு அதன் அளவுக்குத்தக்க நாளளவு உண்டால் சீதமண்டலியின் நஞ்சு தீரும். (வி. ஆ.)

**திமிர்மண்டலிக் கடிக் குறிகுணமும் மருந்தும்.**

திமிர்மண்டலி கடித்தால் உடலில் திமிருண்டாகும். இதற்குப் பொன் முசுட்டை வேரையரைத்துக் கொடுக்கலாம். (சி. ஆ.)

**எல்லா மண்டலிக்கும் பொது மருந்து.**

கேளப்பா மண்டலியின் விடத்துக் கெல்லாம்
கெட்டியாய் மருந்தையினி சொல்லக் கேளாய்
எளப்பா இலந்தையின்மேற் றம்ப லந்தான்
இதமான முத்தெருக்கஞ் செவியு மவுரி
கோளப்பா பேய்ப்பாலை பேய்க்கு மட்டி
கொடிவெலி கொடிக்கள்ளி செருப்ப டையும்
நீளப்பா வேர்க்கழஞ்சு தேங்காய்ப் பாலில்
நீயருந்த விடமனைத்துந் திருந் தானே.

(பொ - ரை.)—பதினாறு வகையான மண்டலிகள் கடித்ததனல் உண்டாகும் நஞ்சுகளுக்கெல்லாம் பொதுவாகச் சிலமருந்துகள் சொல்லுகிறேன் ; அவைகளைக் கேட்பாயாக. இலந்தையிலையில் படிந்துள்ள தம்பலப்பூச்சு, நிலக்கடம்புவேர், அவுரிவேர், பேய்ப்பாலைவேர், பேய்த்தும்மட்டிவேர், சித்திர மூலவேர், கொடிக்கள்ளிவேர், செருப்படிவேர் என்னும் இவற்றுள் எதையாவதொன்றை வேளைக்கு ஒன்றேகால் வராகனிடை எடுத்துத் தேங் காய்ப் பாலிலரைத்து உண்டால் மேற்படி விடங்களெல்லாம் தீரும்.

(வி. ஆ.)

எலி—18.

காலுவிடப் புண்டரங்கா பிலஞ்சு வேதங்
    கஷாயதந்தம் உந்துருகோ கிலங்க போதம்
ஆலுமிலா லசமரிதஞ் சமளத் தோடு
    மருணமிர சாலமசி தங்கி ருஷ்ணம்
வாலுயரும் பலினிசிகு ரஞ்ச பாலம்
    வளர்குனக மெனும்பதினெட் டெலிக் கூட்டங்கள்.

(பொ - ரை.)—எலிகள்.—(1) புண்டரம், (2) கபிலம், (3) சுவேதம், (4) கஷாயதந்தம், (5) உந்துரு, (6) கோகிலம், (7) கபோதம், (8) இலாலசம், (9) அரிதம், (10) சமளம், (11) அருணம், (12) இரசாலம், (13) அசிதம், (14) கிருஷ்ணம், (15) பலினி, (16) சிகுரம், (17) சபலம், (18) குனகம் என மேற்கூறியபடி பதினெட்டு வகைப்படும் எனச் சிலரும்; (சி. ஆ.)

'' எலிக்குலம் பதினெண்வகை — அவைகளை
    இயம்புகிறே னெவர்க்கும் நயம்பெறவே
வலிக்குங்கத் திரிமணியன் — செம்மூக்கன்
    வள்ளி குறட்டைகருங் காற்றலையன்
விடவெலி செந்தலைமுத்தி — செவ்வெலி
    வீங்கெலி உலர்ப்பெலி தூங்கெலியும்
புடையெலி இரைப்பெலியும் — செங்கண்ணன்
    புள்ளி கரடன்குறுங் காலெலியும்
நச்செலியீ ரொன்பதும் — கடித்திட்டு
    நாணுளு மேவிடந் தானேறினுல்.''

(பொ - ரை.)—(1) கத்திரி, (2) மணியன், (3) செம்மூக்கன், (4) வள்ளி, (5) குறட்டை, (6) கருங்காற்றலையன், (7) விடவெலி, (8) செந்தலைமுத்தி, (9) செவ்வெலி, (10) வீங்கெலி, (11) உலர்ப்பெலி, (12) தூங்கெலி, (13) புடையெலி, (14) இரைப்பெலி, (15) செங்கண்ணன், (16) புள்ளி, (17) கரடன், (18) குறுங்காலெலி எனச் சிலருங் கூறுகிறார்கள்.

இவ்விரண்டில் முன்னது பிறர்கோளும், பின்னது தமிழர் கொள்கை யுமாம்.

எவ்வாறுயினும் தொகையில் இருவரும் ஒன்றுபட்டனர். பொதுவாக எலிவிடம் ஒன்றேயாம். (சி. ஆ.)

இவையன்றி சுண்டெலி, சோடெலி, சினையெலி, காட்டெலி, மோட் டெலி, வெள்ளெலி, காரெலி, போரெலி என்னும் பேதமுள்ள எலிகளு முண்டு.

ஆகையால், அது கடித்தால், நடுக்கலுடன் அதிக வெம்மையாய்ச் சுரங் காய்தல், ஆயாசம், மேற்படி சுரம் விட்டுவிட்டு மீண்டும் வருதல், சில சமயங்களிற் சிலந்திப்பூச்சிக்கடியாலுண்டாவதுபோ லுடம்பெங்கும் தடித்த கொப்புளங்களுண்டாதல், தலை கனத்தல், முட்டிகளில் நோதல், சில சமயம் வீக்கமும் காணல், முதலியன உண்டாகும். இதற்கு ஆரம்பத்தி லேயே தக்க மருத்துவம் புரியாவிடின் நாட் செல்லச் செல்ல இருமல், இரைப்பு, க்ஷயம் போன்ற ரோகங்களை விளைவித்து தொண்டையில் எலி யொலியைப் போன்று குறுகுறுவென்னும் ஓர் சத்தத்தையும் விளைவிக்கும்.

நாளுக்கு நாள் வியாதி நீடித்து உடல் இளைத்து தேகங்கறுத்து கடைசி காலத்தில் அரற்றல் புரட்டலுண்டாகி மரண மேற்படும். கடிபட்டவிடம் புண்ணாகிச் சீ பிடிக்கும்.

இதை—

" இராவிவைதாஞ் சிந்துமதம் புட்டால் வீக்கம்
இவர்கிரந்தி அரோசகமா தியவுண் டாமேல்
தராவிடந்தா னெலிதாமோ பொல்லா தாகும்
தடிப்பிருமற் புண்வீக்கங் கொப்பு ளாதி
கராளமெலா முண்டாக்கும்.

என்று சிவாருடம் கூறுவதைக் கவனிக்க.

குறிப்பு.—எலியின் மயிர்களில் சிலசமயங்களி லொருவிதமான கிருமிகளுண்டாகி அவற்றால் மனிதர்களுக்கு (பிளேக் என்றும்) மகாமாரி நோய் விளைவதுண்டு. இவைகள் முதலில் அவ்வெலியைக்கொன்று பின் அதினின்றும் மனிதர்களைப் பிடிக்கும். இந்நோயினால் தேகத்திலுள்ள நெறிகள் எல்லாம் வீங்கி யதிக சுரம் உண்டாகிச் சிலவேளைகளில் நுரையீரலைப்பற்றிப் பல நோய்களை விளைத்து அதிவிரைவில் நீங்கை விளைவிக்கும். இது காரணம்பற்றி இறந்த எலிகளை அதிசாக்கிரதையாயும் சீக்கிரமாயும் அப்புறப்படுத்தல் அவசியம்.

### எலிக்கடிக்கு மருந்து.

வன்மை மரைத் தோலை வாட வுலர்த்திப் பொடியாக்கி
என்ணெய் நறுநெய் யுடன்கூட்டி யிறங்கப் பத்து நாள்விழுங்கப்
புன்மை எலியின் கடிபட்ட பொருமல் மிக்க வழலைபோய்
நன்மை செய்து டம்பெல்லாம் நஞ்சு மமிர்த மாயிடுமே.

கப்பிய வெலிக டித்துத் தலைகனத் துடல மெங்குங்
கொப்புள மாகத் தோன்றிற் குறும்புரு வெச்சத் தோடே
எப்பெரும் பட்டைத் தோலினை யுலர்த்திப் பிசைந்து செய்ய
மெய்ப்பொடி யாக்கி நெய்யில் விழுங்கிட விடமுந் தீரும்.

மூதிரைவா கனவன் சொன்ன மூடிகம் பதினெட் டாலும்
ஏதமுற் றவர்க டங்கட் கினியதோர் மருந்து சொன்னேன்
மாதலாற் கொன்றை சூடுஞ் சங்கர னரவன் முன்னா
ராதன மணியை யாப்பா லரைத்துநெய் யருந்த னன்றே.

திப்பிலி மிளகி னோடு செறிபுங்கு மகிழ்வேர் கூட்டித்
தப்பிலா வமுத வல்லி யிலையிவை சரியாய்க் கொண்டே
ஒப்பிலாக் கன்னிச் சாற்றி லரைத்துண்டை விழுங்கத் தீரும்
மெய்ப்படி எலிக டித்த வீக்கமுந் தானே போகும்.

ஆளி ருக்கக் குழிக்கல் லதனோடே
தாளம ரைத்துத் தானொரு பாண்டத்தில்
மூள மூடிக் கடத்தில் விறகிட்டு
நாளும் புகைக்க எலிக்கடி நாசமே.

(பொ - ரை.)—மரை என்னும் விலங்கின் தோலை உலர்த்திப் பொடியாக்கி நல்லெண்ணெய், பசுவின் நெய் இவைகளுடன் சேர்க்கவேண்டிய் அளவுப்படி கலந்து பத்து நாள் நஞ்சின் அளவுக்குத் தக்கபடியுண்டால் எலிக்கடியால் உண்டான வீக்கம், வருத்தம், அழல் இவைகள் நீங்கி உடம்புக்கு ஒரு நன்மையுண்டாகி அவ்வெலிக்கடியாலுண்டான நஞ்சு மாறி உடல் அமிர்த குணத்தையடையும்.

எலி கடித்ததனுல் தலைப்பளுவு, உடல் எங்கும் கொப்புளித்தல் என்னும் இவைகள் உண்டானுல் சிறு புருவினைச்சத்துடன் பெருமரப்பட்டை, அதன் இலைகள் இவைகளைக்கூட்டி உலர்த்தி இடித்துப்பொடியாக்கி நஞ்சுக்குத்தக்க அளவு நெய்யில் கொள்ள மேற்படி விடம் நீங்கும்.

எலி பதினெட்டின் கடிநஞ்சிற்கு உருத்திராக்கத்தைப் பசுவின் பாலிலரைத்து நெய்யிற் கூட்டிக் கொடுக்கத் தீரும்.

திப்பிலி, மிளகு, புங்கம்வேர், மகிழம்வேர், சீந்திலிலை இவைகளைச் சரி எடையாய் எடுத்துக் கற்ருழைச் சாற்ருலரைத்து நஞ்சு வன்மைக்குத்தக்க அளவினுண்ண மேற்படி எலிகடித்ததா லுண்டான வீக்கந்தீரும்.

தாளகத்தைத் தூளாயரைத்து ஒரு மண் சட்டியிலிட்டு நடுவில் தொளை போட்டச் சட்டி ஒன்று மேலே மூடி நெருப்பிலிட்டு வரும்புகையைப் பிடித்தால் எலிவிடம் நீங்கும்.

**எலிவிடத்திற்கு மருந்து.**

"ஊமத்தம் விறகுகொணர்ந் — திடித்ததை
ஒருபாண்டத் தினில்வைத் தொருகிடங்கில்
நேமித் ததனையிருத்திக் — கழுத்தின்கீழ்
நீடுகுழி வாய்மறைய மூடியிட்டுப்
பக்கத்தில் நாள்வழிபோல் — பறித்தந்தப்
பாண்டத்தின் கீழனல் மூண்டிடச்செய்து
தொக்கினிற் புகைத்திடவே — எலிவிடம்
கக்கிவியர் வுடனே கழிந்திடுமே."

(சி. ஆ.)

மேலும், அடியிற்கண்ட பரிகாரங்களாலும் எலிவிடம் நீங்கும்:—

தலை கனத்தல், தடித்து வீங்கல் முதலியவைகளை விளைவிக்கும் எலி விடத்திற்கு, இரும்பைக் காய்ச்சித் தோய்த்தப் பழச்சாற்றை மூன்று நாட் கொடுக்கத் தீரும்.

பாவட்டைத்தழையையும் அதன் பட்டையையும் சரியளவாக எடுத்துத் தூளாக்கிக் கொட்டைப்பாக்களவு நெய்யிற்கொள்ள எலிக்கடியினுலுண்டாம் தலைக் கனப்பு, உடம்பெங்கும் விளையுங் கொப்புளங்கள், தடிப்பு இவைகள் நீங்கும்.

பலாசு இலை அல்லது பட்டையை யரைத்து எலுமிச்சங் காயளவு வெண்ணெயிலுண்ண விடத்தாலுண்டாகும் ஈளையிருமற் றீரும்.

அழிஞ்சிற் பட்டையை யரைத்து எலிமிச்சங் காயளவு வெந்நீரிற் கொடுக்கத்தீரும்.

அவுரி அல்லது அமுக்கரா வேரையரைத்துப் பாலில் கலந்து மூன்று நாள் குடிக்கத் தீரும்.

நிலவாகை, கொன்றை, வாதமடக்கி, பாலையிலை யிவைகளின் சாறும் வெள்ளெருக்கம்பாலும் வகைக்கு ஆழாக்கு, கரிப்பான் சாறு, எண்ணெய் இவை வகைக்கு அரைப்படி, சிவதை வேர்ச்சூரணம் ஒரு கழஞ்சு கூட்டிக் காய்ச்சி எஅருந்த ட்டுவகை எலிவிடங்களுந் தீரும்,

சித்திரமூல வேர்ப் பட்டையை வெள்ளாட்டுப் பாலில் அரைத்துக் கொடுக்கத் தீரும்.

அமுக்கரா வேரை எலுமிச்சம்பழ அளவில் அரைத்துப் பாலிற் கலக்கி யுண்ண எலி விடந்தீரும்.

நாட்பட்ட விடத்திற்கு—புன்கம்பட்டை, மிளகு, வெள்ளுள்ளி, வசம்பு, முதலியவற்றைப் பழச்சாற்றிலரைத்துக் கொடுக்கத் தீரும்.

சுக்கு, சிறுமிளகு, களிப்பாக்கு, வேலம்பட்டை ஆகிய நான்கையும் வகைக்குக் காற்பலங்கூட்டிக் கற்றாழைச்சாற்றாலரைத்துண்டு, புளிய மரப் புறணியையுஞ் சுட்டுண்ணத்தீரும். பசுவின்பால் பத்தியம்.

தடிப்புதிர.—ஆதளைவித்தையரைத்துப் பாலிற் கலக்கியேனும், புங்கம் பட்டையை எருமை மோரில் தோய்த்தேனும், மாம்பட்டையை யுலர்த்தி நெய்யிற் கலந்தேனு முண்ணத் தீரும்.

முருங்கைப்பட்டை, முருங்கையிலை, முருங்கைப்பூ இவைகளை வகைக் கரைப்பலங் கூட்டி மூன்று வைப்பு வைத்த பெரிய கோழியை யறுத்த தனி இரத்தத்தினால் அரைத்துச் சிறு உருண்டைகள் செய்துகொள்ளவும். பிறகு நல்லெண்ணெயைத் தலைக்குத் தேய்த்துக்கொண்டே யிருக்குந்தறுவாயில் நோயாளியின் வாயில் ஒரு உருண்டையிட்டுத் தண்ணீர் விடவும். பிறகு மற்றுமொரு உருண்டை தலைக்கு நீர் வார்க்கும்போதிடவும். ஸ்நானம் ஆனவுடன் காலுக்குப் புதுச் செருப்பிட்டுவைக்கவும். எட்டு நாள் வரை உப்பு, புளி, காரம் இவற்றைத் தள்ளி ஒன்பதாம் நாள் ஸ்நானம் முடித்து புளி, உப்பு சேர்க்கச்செய்யவும்.

### எலிச் சுக்கிலம் படுவதாலுண்டாகும் குறிகுணங்கள்.

எலிகள் சேருங்காலத்தில், அச்சுக்கிலம் மனிதர்மீது சிதறுமாகில் அவ்விடத்தில் வீக்கம், மச்சம், கிரந்தி காணலோடு அரோசகம், வாந்தி, தாகம், பிரமை, குளிர்ச்சுரம், நடுக்கல், மயிர்க்கூச்சு, மூர்ச்சை, கீல்களில் வலி முதலியனவும் கபவிருத்தியு முண்டாகும்.

### அசாத்திய எலிவிட இலக்கணம்.

மேற்கூறிய எலிகளில் எந்த எலிக் கடியினாலாவது, சுரம், தலைவலி, வாய்நீர்ப் பெருகல், இரத்தவாந்தி, உடல் வீக்கம், வியர்வை, காதுமந்தம், வேற்றுருவம் ஆகியவையுண்டாகுமாகில், நீங்குவது கடினமே.

### மூஞ்சூறு, பெருச்சாளி, முட்சுருளி, அணில் கடிக்குணமும் மருந்தும்.

இவைகள் கடித்திட்டால், மரணமுண்டாகாதெனினும் மரண வேதனைக் கொப்ப, கொப்புளங்கள், வீக்கம், தடிப்பு, இருமல், புண்விரிதல், வாய் பேசக்கூடாமை, பேதி, உடலிளைத்தல் ஆகிய குணங்களுண்டாகும்.

இவ்விடங்களைப் போக்க அவுரிவேர்க் குடிநீர் ஆகும்.

குறிப்பு.—எலிவகைகள்கடிவிடத்திற்கு அப்பிரக பற்பத்தை இலைக்கள்ளிச்சாற்றிலும், மூஞ்சூறுவகைகள், பெருச்சாளிவகைகள் கடிவிடத்திற்கு மலைவேப்பிலைச்சாற்றிலும் கொடுக்கலாம்.

### செய்யான் பிரிவு.

இது, (1) வெள்ளரைச் செய்யான், பட்டைச் செய்யான், பெரும் படைச் செய்யான், குருதிச் செய்யான், மருட்சி செய்யான், வன்மீகச் செய்யான் என்னும் பிரிவினையடையும்.

"வீச்சப்பா செய்யானே கடித்த தானல்
விறுவிறுத்து விரிந்துசுடும் வீக்கங் காணும்,
காய்ச்சல்வரும் நிறங்கறுத்துக் கண்சி வக்கும்
கைகானு முழற்றியே கடுக்கும் மேனி
பூச்சப்பா வெற்றிலையும் பாக்குந் தின்னே
போதவே சர்வாங்கம் துவாலை பூசே.

பூசியே பனைவெல்ல மெருக்கன் பூவும்
போதவே யரைத்ததொரு பலமே யுண்ணே
ஓசைபெருங் கோவையிலை தாளிப் பூவும்
உத்தமனே நெல்லரிசி சோறுஞ் சேர்த்து
மசியவே காடிவிட் டரைத்து நெய்யில்
மத்தித்து நாள்மூன்று கடியில் கட்டி
நசிவாக கோழியதி னீரற் பித்தும்
நாள்மூன்றுங் கட்டியதை அவிழ்த்த பின்பு.

பின்பிலைக் கள்ளியதைத் துவைத்து வாட்டி
துடியாக வெண்சாமங் கட்டத் தீரும்
இன்பமா யின்னமொரு மருந்து கேளாய்
ஈச்சன்வே ருங்குருத்துந் தூதின் வேரும்
அன்பாக வரைத்தன்றே துவாலை பூச
அற்றுப்போ மின்னமொரு மருந்தைக் கேளாய்
அன்புடனே யரசுமயி லாடி நீலி
அரைத்துண்டு குறிஞ்சியிலை தூவாலை பூசே.

பூசப்பா கடிவாயில் வீக்கந்தீர
பொன்னுன வெட்டிவிதை நல்ல வெண்ணெய்
கூசாமல் நீயரைத்துக் கொதிக்க வைத்துக்
குணமாக வெதுவெதுப்பாய்க் கடியில் பூசே."

(வி. ஆ.)

பொருள் வெளிப்படை.

### செய்யான் கடிக்கு மருந்து.

*　　　*　　　*

"கனற்றும் பெருஞ்செய்யான் கடித்ததென்றால்
நலம்பெரு கோவையிலை — வெற்றிலை
நல்ல பருத்திகொஞ்சி வல்லுத்தாமணி
களங்கமில் முடக்கொத்தான் — இவையாறும்
கசக்கிச் சாறுபிழிந்து காய்ச்சித்தடவக்
குளிர்ந்திடுங் கடுப்பெரிப்புத் — தம்பலம்
கொட்டுவாயி லுமிழ்ந்தாலும் விட்டுவிடுமே

தூதுவேளை நாவலிண்டை — வேரரைத்துச்
சுற்றிக் கடிவாய்தனிற் பற்றத்தடவத்
தீதுற்ற செய்யான்விடம் — உடன்விட்டுச்
சென்றிடு மென்றுரைத்தார் கெண்டைவிழியே!''
(சி. ஆ.)

(பொ - ரை.)—எரிச்சலைத்தரும் பெரிய செய்யான் கடித்தால், வதங் காமலும் யாதொரு கெடுதியும் அடையாமலுமிருக்கிற கோவையிலை, வெற்றிலை, பருத்தியிலை, கொஞ்சியிலை, உத்தாமணியிலை, முடக்கற்றான் இலை இவைகள் ஆறையும் இடித்துச் சாறு பிழிந்து கொதிக்கவைத்து உடம் பெல்லாம்பூசிக் கடிவாயில் தடவினாலும், வெற்றிலைப்பாக்கை மென்று கடிவாயில் உமிழ்ந்தாலும், தூதுவளைவேர், நாவல்வேர், ஈயக்கொழுந்து வேர் இவைகளைச் சரிஎடை எடுத்து அரைத்துக் கடிவாயிற் றடவினாலும் அக்கடியால் உண்டான கடுப்பு, எரிச்சல், முதலிய தீக்குணங்கள் நீங்கிவிடும்.

குறிப்பு.—பற்பல செய்யான் கடிவிடத்திற்கு அப்பிரகபற்பத்தைக் கையாந்தகரைச்சாற்றில் கொடுக்கலாம்.

(தே.ய.வெ.உ.)

**பூரான், சிலந்தி, ஆறுகால்பூச்சி, புலிமுகப்பூச்சிக் கடிக் குறிகுணம்.**

“ மிஞ்சியதோர் பூரானுங் கடித்த தென்றால்
மேலெல்லாம் பூரானின் நிறந்த டிக்கும்
தடிப்புகண்டால் சிறுசின்னி யிலையின் சாற்றில்
தருமான கொல்லனிட கிழங்க ரைத்துக்
குடிகொண்ட நாள்மூன்றும் அறையில் வாழும்
குணமாக எழுநாள் புளியு மாகா
கடிகண்டால் சிலந்தியறு காலின் பூச்சி
கடுப்பெடுக்கும் புலிமுகத்தின் பூச்சி தானும்
நொடிக்குள்ளே தேள்விடம்போல் கடுப்பு காணும்
நோய்தானும் உடலுக்குள் ளுறைய முன்னே.”

**பூரான் பிரிவு.**

கரும்பூரம், வெண்பூரம், செம்பூரம், மண்பூரம், காட்டுப்பூரம், சிறுபூரம், பெரும்பூரம், சாணிப்பூரம் என்னும் பிரிவினையுடையது.

(பொ - ரை.)—பூரான் கடித்ததனால் உடம்பு முழுமையும் தடித்த பூரானின் நிறத்தைப்போல் தடிப்பு காணுமானால், ஆகாச கருடன் கிழங்கைச் சிறு சின்னி இலையின் சாற்றால் அரைத்து வேளைக்குக் கழற்சிக் காயளவு காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் உண்டு, உண்ட அம்மூன்று நாளும் வெளியில் வராமல் அறையினுள்ளேயே யிருக்கவேண்டும். (குப்பை மேனிச்சாற்றைப் பூசுவதினாலும் தீரும்.) இதற்கு எழு நாள் வரைக்கும் புளியாகாது.

சிலந்திப்பூச்சியாவது, ஆறுகால் பூச்சியாவது கடித்தாற் கடித்த இடத்தில் கடுப்பு காணும்.

புலிமுகப்பூச்சி கடித்தால் நொடியளவில் தேள்விடம் ஏறிக் கடுப்பது போல் கடித்த விடத்திற் கடுப்புண்டாய் அந்நஞ்சின் வேகம் முன்னதாக உடம்புக்குள் வாழும். (வி. ஆ.)

குறிப்பு.—எப் பூரான் கடிவிடத்திற்கும் அப்பிரகபற்பத்தை உத்தாமணிச் சாற்றில் கொடுக்கலாம்.

(தே.ய.வெ.உ.)

**சிலந்திப்பூச்சி.**

இது, இருபது விதப்படும் எனச் சித்தராரூடம் கூறும். மற்றுமுள்ள சில நூல்கள், வாதப்பிணிக்குணம், பித்தப்பிணிக்குணம், கபப்பிணிக் குணம் இவைகளை முறையேயுண்டாக்க ஒவ்வொன்றிலும் ஏழுஏழாக இருபத்தொன்றும், தொந்தப்பிணிகளையுண்டாக்கஏழும், ஆக இருபத் தெட்டென்றும், இவை நீங்க வேறு ஒன்பது விதச் சிலந்திகள் உண்டென் றும் கூறும். எட்டுக்கால் பூச்சியும் இதில் ஒரு பிரிவு.

வாதச்சிலந்தி பூச்சிகளின் பொதுக்குணம்.—இவைகள் வெண்மை, செம்மை நிறத்தையும், ஆசனத்தில் சித்திரங்களான மெல்லிய நூலையும் உள்ளனவாக விருக்கும்.

இவைதீண்டுவதால் வாதரோகக் குணங்கள் நேரிடும்.

பித்தச் சிலந்திப் பூச்சிகளின் பொதுக்குணம்,—இவைகள் கருமையும், பசுமையும் கலந்த நிறத்துடன் வாயில் அனலையும், ஆசனத்தில் தாமரை நூலைப்போல் நூலையும் உள்ளனவாக விருக்கும்.

இவை கடிப்பதால் பித்தப்பிணிக் குணங்கள் காணும்.

சிலேத்துமச் சிலந்திப் பூச்சிகளின் பொதுக்குணம்.—இவைகள், வெண் மை நிறத்தையும், குடலில் நீலநிறத்தையும், ஆசனத்தில் சிவந்த நூலை யும் உள்ளனவாக விருக்கும்.

இவைகள் தீண்டுவதால், சிலேத்தும ரோகக் குணங்கள் தோன்றும்.

தொந்த தோடச் சிலந்திப்பூச்சிகளின் பொதுக்குணம்.—இவைகள், ஆசனத்தில் பற்பல நிறமுடைய நூலையுள்ளனவாகவிருக்கும். தீண்டி னால் தீச்சுடுகைப்போல எரிச்சலையும், முத்தோட குணங்களையும் உண்டாக் கும்.

இவைகளன்றி வேறு ஒன்பது சிலந்திப் பூச்சிகளின் விடம்.—இவைகள் புணருங்காலத்தில் தெறிக்கின்ற சுக்கிலம் பட்டவிடமெல்லாம் விரைவில் கொப்புளங்களுண்டாகும்.

**சிலந்தியின் விடபேதம்—8.**

சிலந்திப்பூச்சிகளிடமிருந்துண்டாகும் விடம் எண்வகை. அவை— (1) மூச்சு, (2) பல், (3) மலம், (4) மூத்திரம், (5) சுக்கிலம், (6) வாய், (7) வாய்நீர், (8) ஊறு.

(1) மூச்சு.—இதனாலுண்டாகும் விடம், சுரம், தாகம் இவைகளை யுண்டாக்கும்.

(2) பல்—பல்விட விரணம், நிறவேற்றுமையும், கடினமும் நிலைத்த தாயுமிருக்கும். இதனால் உடலில் வீக்கம், எரிச்சல், வேதனை, வியர்வை, தாகம் ஆகிய குணங்களுண்டாகும்.

(3) மலம்.—இது, பட்டவிடத்தில் இலுப்பைப்பழ நிறமொத்த புண்ணும், அதில் கெட்ட மணமும், எரிச்சலும், தினவுமுண்டாகும்.

(4) மூத்திரம்.—இது, பட்டவிடத்தில் உண்டாகும் புண்ணின் நடுபாகம் கறுத்தும் உயர்ந்தும், இதைச் சுற்றிலும் வாடியும் பூப்போல் மலர்ந்துமிருக்கும். மேலும் கெட்ட நாற்றமும் எரிச்சலும் இடைவிடாதிருக்கும்.

(5) சுக்கிலம்.—இது, பட்டவிடத்தில் கடின கொப்புளங்களும் நோவுமுண்டாகும்.

(6) வாய்.—இது, பட்டவிடத்தில் முருக்கன் பூப்போன்ற செந்நிறமுள்ள புண்ணுண்டாய் அதில் குத்தலும் தினவுமுண்டாகும்.

(7) வாய்நீர்.—இது பட்டவிடத்தில் புங்கின் பூ நிறமுள்ள புண் பிறக்கும். புண்ணின் ஓரத்தில் பூச்சியூறுவதுபோன்ற உணர்ச்சியும், எரிச்சலும், குத்தலுங் காணும்.

(8) ஊறு.—பரிசம் பட்டமாத்திரத்தில் முற்கூறிய குணங்கள் எளிதில் உண்டாகும்.

இப்பூச்சிகள் பூர்வபட்சத்திதிகளில் மாலைப் பொழுதிற் கடிக்கும். கடித்த வாயில் பசுமை, வெண்மை, செம்மை, கருமை முதலிய பலவித நிறமாய் இருக்கும். கடிபட்டவிடம் மெலிந்து உயர்ந்து தடிக்கும். அத்தடிப்பைச் சுற்றிலும் சிறுசிறு கொப்புளம் கிளம்பும். இக்கொப்புளங்களிலிருந்து வடியும் நீர் பட்ட இடமெல்லாம் கொப்புளிக்கும். சோபை ஆகிய நோய்களில் காணும் துன்பங்களும், சுரமும், வியர்வையுமுண்டாகும்.

**சிலந்திப்பூச்சிக்கடிவேகம்—ஏழு.**

மேற்சொல்லிய கடிவிடம் உடலில் பரவிய

1-வது நாளில்—கடிவாயில் நிறம் தோற்றுமல் அற்ப தினவுண்டாகும்.

2-வது நாளில்—கடிவாயில் இயற்கை நிறத்துடன் தடித்து தினவோடு கூடிய சிறு கட்டிகள் எழும்பும்.

3-வது நாளில்—கடிவாய் அகலைக் கவிழ்த்ததுபோல் தடித்து, சிவந்து அங்குள்ள மயிர்கள் சிலிர்ப்பதுடன், மயிர்க்கால்களில் இரத்தம் கம்மிச் சுரமுண்டாகும்.

4-வது நாளில்—கடிவாயில் வீக்கம், எரிச்சல், மற்றும் இரைப்பு, பிரமை ஆகியவையுமுண்டாகும்.

5-வது நாளில்—கடிவாயில் விடத் துர்க்குணம் யாவும் பெருகும்.

6-வது நாளில்—கடிவாயின் வர்மங்களில் பரவும்.

7-வது நாளில்—உயிர்க்குக் கெடுதிவரும்.

ஆகையால், உடனே தக்க பரிகாரஞ் செய்யின் 21 நாளில் நன்மையுண்டாகும்.

இப்பூச்சிகளின் விடம் ஏறினுல், கடிவாயில் எழும்புகின்ற புண்களில் சில கொப்புளங்களாகவும், சில வட்டமாகவும், சில வெண்மை நிறமாகவும், சில செம்மைநிறமாகவும், சில பசுமை நிறமாகவும், சில நீல நிறமாகவும், சில மிருதுவாகவும், சில கடினமாகவும் இருக்கும்.

### சிலந்திக்கடிக்கு மருந்து.

“ சிலந்தியோ ரிருபதினில் — அழல்வாய்ச்
சிலந்திக்குச் சுண்ணும்பும் பழம்புளியும்
கலந்தந்தக் கடிவாயில் — தேய்த்திடக்
கடுப்பு மெரிப்புமுடன் விடுத்திடுமே
ஆவிரை தாளிபசலே — காடிவிட்
டவித்திட்டுக் கடிவாயில் குவித்துக்கட்ட
நாவுரை செயவேண்டுமோ — எரிப்பெங்கும்
நாடிடு மோபறந் தோடிடுமே
இருபது வகைக்குமொன்ரு — மருந்தொன்
றேலவுரைப் பேன்பிராய்வேர் நீலியின்வேர்
சுரபியின் பாலிற்கொடுக்க — முப்பொழுதில்
துறந்திடு முயிர்வந்து சிறந்திடுமே.” (சி. ஆ.)

(பொ - ரை.)—இருபது வகைப்படும் சிலந்திப்பூச்சிகளில் எது கடித்தாலும் சுண்ணும்பையும் பழைய புளியையும் ஒரளவாய்க் கலந்து கடிவாயிற்றேய்த்தாலும்,

ஆவாரையிலே, தாளியிலே, பசலேக்கீரை இவைகளைக் காடியிலிட்டு அவித்துக் கடிவாயிற் கட்டினுலும்,

பிராயமரத்துவேர், அவுரிவேர், இவ்விரண்டையும் சரி எடை எடுத்துப் பசுவின்பால் விட்டரைத்துக் காலே மாலே இருவேளையாக மூன்று நாள் கொடுத்தாலும் மேற்படி சிலந்திக் கடிகளாலுண்டான கடுப்பு, எரிச்சல் நீங்கி, அந்நஞ்சால் அடங்கின உயிர் மீண்டும் வரும்.

உறைந்தன்றே உடலெல்லாம் புன்னேக் காய்போல்
உண்டைபடக் கட்டியன்றே உழற்றும் மேனி
விரைந்தேறும் ஒடுவடக்கி புரசு மெட்டி
வேளேச்சாறு சமன்கூட்டித் துவாலே போடு
அருந்தடா நீலிஉத்தா மணியு மேனி
அந்திசந்தி நாள்மூன்று தினம ருந்த
இருந்தவிட முடலேவிட் டேங்கிப் போமே.

(பொ - ரை.)—முன் செய்யுளிற் சொல்லப்பட்டபடி சில நாள் வரைக்கும் அக் கடி நஞ்சு உடம்பிற்குள் தங்கியிருந்து, பிறகு வெளிப்பட்டு உடம்பெல்லாம் புன்னேக் காய்போன்ற உருண்டைகள் கிளம்பி உடம்பை மிகவும் வருத்தப்படுத்தும். இதற்குக் குப்பைமேனி, முருக்கு, எட்டி, வேளே இவற்றின் சாறுகளேச் சரியளவு கூட்டிக் கடித்தவாயிற் பூசுவதுடன், உடம்பு முழுமைக்கும் பூசி, அவுரியிலே, உத்தாமணியிலே, குப்பை மேனி யிலே இவைகளேச் சரியளவு எடுத்து எல்லாவற்றையும் ஒன்ருய்ச்சேர்த்தரைத்து கொட்டைப்பாக்களவாக இருவேளேயும் மூன்று நாள் கொடுக்க, உடலிலே தங்கியிருந்த மேற்படி நஞ்சுயிர்களின் கடிவிடம் உடம்பைவிட்டு நீங்கும்.

(வி. ஆ.)

### பச்சோந்தி கடிக்குணமும், மருந்தும்.

“ பச்சோந்தி கடித்திடினே — தழுதாழை
பண்ணே பரட்டையிலே நண்ணுஞ்சிறுநீர்
மிச்சமாய் விட்டரைத்துக் — கடிவாயில்
மெள்ளப்பூசி யாத்தியிலேத் தெள்ளுபொடியை
வெண்ணெய்தனி லிட்டுக்காய்ச்சி — நாசியினில்
விடுத்து வீக்கத்திற்றட விடக்குணமாம்.” (சி. ஆ.)

(பொ - ரை.)—பச்சை ஓணான் கடித்தால் கடித்த இடம் வீங்கித் தடிக்கும். இதற்கு, தழுதாழையிலை, பண்ணைக்கீரை, பரட்டைக்கீரை இவைகளைச் சரி எடை எடுத்துச் சிறுநீர் அதிகமாகவிட்டு அரைத்துக் கடிவாயிற் பூசியும், ஆத்தியிலையைப் பொடியாயிடித்துத் தெள்ளிப் பசுவின் வெண்ணெயிற் போட்டுக்காய்ச்சி மூக்கில் நசியமிட்டும், வீக்கத்தில் தடவியும்வர மேற்படி நஞ்சு நீங்கும்.

### ஓணான்கடிக் குணமும், மருந்தும்.

ஓணான் கடித்தவிடத்தில் மூன்றாம்பிறையை ஒத்த காயம் காணும். அதனால் நோவு, வீக்கம், நமைச்சல், குத்தல், களைத்தல் நேரிடும். மலம் பல நிறத்துடன் இழியும்.

இதற்கு மூங்கிற்குருத்துச்சாறு கால் ஆழாக்கில், மிளகுப்பொடி கால் பலம் கூட்டிக் காலைமாலை இருவேளையாக ஐந்துநாள்வரையில் கொடுக்க விடம் நீங்கும்.

### தவளைக்கடிக் குணமும், மருந்தும்.

இது கடிக்கில், தினவு, மிகு சோம்பல், நித்திரை, மூர்ச்சை, கறுத்துப் பரவும் சொறிகளுண்டாகும். இதற்கு, அகத்தியிலைச்சாறு படி காலில் இருகழஞ்சு கறியின்பொடி கூட்டிக்கலக்கி அருந்தியும், புகையூறல், உப்பு இவ்விரண்டையும் பருத்தியிலைச்சாற்றி லரைத்து மேலுக்குப் பூசியும் வர வேண்டும். (சி. ஆ.)

### சொறித்தவளைக்கடிக் குணமும், மருந்தும்.

இது கடிக்கில் உடலில் ஊறலுண்டாகும். இதற்கு (1) நீலி, (2) வேலி, (3) மலைதாங்கி, (4) வெண்காக்கணம், (5) ஆதொண்டை, (6) வீழி, (7) பாலொடுவை இவ்வேழின் வேர்களை சமபாகமெடுத்து உலர்த்தி இடித்துத் திரிகடிவீதம் வெந்நீரிற் கலந்துண்ண விடம் நீங்கும். மேனியழகு பெறும். உப்பு, புளி நீக்கிப் பத்தியமிருக்கவும். (சி. ஆ.)

### காட்டுத்தவளைக்கடிக் குணமும், மருந்தும்.

இது கடிக்கில் சொறியுண்டாகும். இதற்கு, காற்படி அகத்தியிலைச்சாற்றில் இரண்டு கழஞ்சு மிளகுத்தூள் சேர்த்துக் கலக்கியுண்டும், புகையூறல், உப்பு இவைகளை பருத்தியிலைச்சாற்றிலரைத்து பூசியும் வரலாம்.

(சி. ஆ.)

### ஈப்பிரிவும், கடிக்குணமும்,

காரீ, பேரீ, பசுமை ஈ, மாட்டீ, காட்டீ, நாயீ எனப் பிரியும். காட்டு ஈ நீங்க மற்றவைகள் கடித்தால் தடிப்பும், எரிச்சலும் தினவுமுண்டாகும்.

### காட்டு ஈக்கடிக் குணமும், மருந்தும்,

இதன்கடி அதிதூக்கத்தையும், மூர்ச்சையையு முண்டாக்கும். பல்வகை ஈக் கடிவிடத்திற்கும் அப்பிரகற்பத்தைக் குப்பைமேனிச்சாற்றில் கொடுக்கத்தீரும்.

(தே.ய.வெ.உ.)

### பல்லிக்கடிக் குணமும், மருந்தும்.

இங்கு கூறப்படும் பல்லி வீடுகளில் வாசஞ்செய்யும் பல்லியேயாம். இது கடித்தால், நோவு, வியர்வை, வீக்கம், எரிச்சல், மார்பில் ஒரு விதச் சங்கட முண்டாகும். சில நாட்சென்று பொடிப்பொடியாகச் சிரங்கு கிளம்பும்.

இக்கடியாலுண்டான விடம்நீங்க, பசுவின்பாலும், பாகலிலேச்சாறும் சமன் கூட்டி, இதில், பெருங்கரந்தைவேர், குதிரைச்செவியின்வேர் வகைக்குப் பலமிரண்டெடுத்து, அரைத்துக் கடிவாயில் தடவியும், உடம்புமுற்றும் பூசி யும் வரவேண்டும்.

### காட்டுக்கொசுக்கடிக் குணமும், மருந்தும்.

இக்கொசுக்கள் கடிக்குமிடந்தோறும் நமைச்சலும், தடிப்பும், நோயு முண்டாகும். அவுரியிலேக் கற்கமும், அவுரிவேர்க் கஷாயமும் இவ்விடத் தைப் போக்கும். இக்கடிவிடம் அசாத்தியமெனவும் சொல்லப்படும்.

### குளவிக்கடிக் குணமும், மருந்தும்.

இது, கொட்டினுலும், கடித்தாலும் அவ்விடத்தில் வீக்கம், தினவு, எரிச்சலுண்டாகிப் பின்பு தடித்து நோவைத்தருவதுடன் அத்தடிப்பினின்று சிலேநீரும் மாருது வடியும். இதற்கு வேலிப்பருத்திச்சாறும் குறிஞ்சான் சாறும் ஒன்றுசேர்த்துப் பூசலாம்.

அப்பிரக பற்பத்தை எருக்கிலேச்சாற்றில் கொடுக்கத்தீரும்.

(க. ஆ.—தே. ய. வெ. உ.)

### மலேஎறும்புக்கடிக் குணமும், மருந்தும்.

இது கடிக்கில் அவ்விடம் நோதல், தீயால் சுட்டதுபோல் எரிதல், நீர்த் துளிபோல் தடித்தல், தினவெடுத்தல், உடற்ருபமடைதலாகிய குணங்க ளுண்டாகும். இதற்கு :—குப்பைமேனியுடன் சிறிது மஞ்சள் சேர்த்துப் பூசலாம்.

### வண்டுக்கடி விடக்குணமும், பரிகாரமும்.

அதிகமில்லே வண்டுநூற் றிருப தாகும்
அநேகமாங் குணங்குறிக ளதிலே காணும்
இதமான வண்டுகடி யெதுவென் ருலும்
ஏகாந்தத் தயிலமொன்று சொல்வன் கேளாய்
மிதமில்லா அழிஞ்சிலின் வித்துப் புன்னே
மேலான எட்டிவித்து சேராம் வித்து
பதமான வாளம்பேய்ப் பீர்க்கம் வித்து
பாங்கான விழுதிவிதை வேப்பம் வித்து

வித்துவகை யிதுசமனய்க் குழித் தயிலந்தானும்
விதமாக விறக்கியது தணலி ருக்க
எத்தாகக் கழுதைலத்தி தயிலம் வாங்கி
எடைக்கெ டையா யிவையிரண்டு மிறக்கிக்கொண்டு
மெத்தவில்லே மேல்மருந்து கடம்பங் கொட்டை
மேலோடு நீக்கியொரு பலத்தை வாங்கி
அந்தநிறை கந்தியிட்டுத் தூள்வ டித்தே
அந்திசந்தி காசெடைத்தூள் தயிலத் துண்ணே.

உண்டுபார் வாரமொன்றில் வண்டு போச்சு
ஒருபத்தி லட்டைவிட மோடிப் போச்சு
பண்டுமேடா தவளைவிட முள்ள தெல்லாம்
பட்சமுண்ண லட்சவிடம் பறந்து போச்சு
சென்றதிங்க ளொன்றில்செவ் வட்டை போச்சு
சேனைவிட மிதனுலே யற்றுப் போகும்
மண்டலத்தி லிரண்டுமண் டலந்தான் தின்றால்
விடமேறு தொருவருட முண்டிடவுஞ் சித்தாம்.

**வண்டு பிரிவு.**

இது நீர்வண்டு, மரவண்டு, சிதள்வண்டு, சொறிவண்டு என்னும் பிரிவினையுடையது.

(பொ - ரை.)—வண்டின்தொகை நூற்றிருபதாகும். அவற்றுள் எது கடித்தாலும் பலவித குறிகுணங்கள் உண்டாயினும் பொதுவாக வீக்கம், தினவு, நோவு, உடல்தடிப்பு, நுரையுடன்கூடிய பேதி காணும்.

அவ்வண்டுகளின் கடிகட்கெல்லாம் பொதுவாக எகாந்தத்தயிலம் சிறந்தது. அதனைச் செய்கின்ற முறையும், உண்ணும் விதமும் திருநோயுமாவன :—அழிஞ்சில் விதை, புன்னைவிதை, எட்டிவிதை, சோாங்கொட்டை, வாளம், பேய்ப் பீர்க்கம்வித்து, விழுதிவிதை, வேப்பம்விதை ஆகிய இவ்வித்துகளையெல்லாம் சரியளவாய் எடுத்து அடியில் துவாரமிட்ட ஒரு மண்பானையிலிட்டு மேல்மூடிச் சீலைசெய்து பூமியில் குழிவெட்டிக் குழித்தயிலம் வாங்கிவைத்துக் கொண்டு அத்துடன் கழுதை லத்தியை உலர்த்திக் குழித்தயிலம் வாங்கி இரண்டும் சரி எடையாகக் கலந்து மேலோடு நீக்கிய கடப்பங்கொட்டை பலம் 1, சுத்திசெய்த கந்தகம் பலம் 1, இவ்விரண்டையும் பொடித்து வடிக்கட்டிக் காலை மாலை இரண்டுவேளையும் ஒரு காசெடைத்தூளும் அவ்வளவு தயிலமும் சேர்த்து எழுநாள் உண்டால் வண்டு கடியும், பத்துநாள் உண்டால் அட்டை விடமும், பதினைந்துநாள் உண்டால் இலட்சக்கணக்கான விடங்களும் பறந்தோடிப்போம். ஒரு திங்கள் உண்டால் செவ்வட்டைவிடம் போம். இவ்வளவன்றி இன்னும் எவ்வகையான விடம் தீண்டினாலும் அவைகளெல்லாம் தீர்ந்துவிடும். இத்தயிலத்தை இருமண்டலம் வரைக்கும் உண்டுவந்தால் எவ்விடமும் ஏறாது. ஒரு மண்டலம் தின்றால் உடல் வன்மையாகும். (வி. ஆ.)

மேற்கூறிய தைலமன்றி அடியிற் குறிப்பிட்ட சிகிச்சைகளுமாகும்.

(1) வண்டுகொல்லி மரப்பட்டைக்கற்கம் புன்னைக்காயளவு,

(2) ஆடுதீண்டாப்பாளை வேர்க்கற்கம் காசெடை,

(3) சங்கன்வேரின் மேற்றோல், முருக்கின்பழம் இவ்விரண்டின் கற்கம் காசெடை வீதம் எட்டு நாள் உட்கொண்டு, உப்பு, புளி நீக்கிப் பத்தியம் காக்க விடந்தீரும். (சி. ஆ.)

குறிப்பு.—மேற்படி கடிவிடத்திற்கு வெட்பாலைப்பட்டைச் சாற்றில் அப்பிரகபற்பத்தைக் கொடுக்கலாம்.

(தே. ய. வெ. உ.)

### அறுபுள்ளிவண்டுக்கடிக் குணமும் மருந்தும்.

இது கடிக்கின் சிலநாட்சென்று வட்டம் வட்டமான தடிப்புகள் உண்டாகும்.

இதற்கு ஏகாந்தத்தைலம் கொடுக்கலாம்.

### அட்டைக்கடிக் குணமும், மருந்தும்.

விடத்தன்மையுள்ள அட்டை கடிக்கில், கடித்த வாயினிடத்தில் தினவும், வீக்கமுமுண்டாகும். பிறகு சுரமும் மூர்ச்சையுங் காணும். கற்சுண்ணும்பைக் கடித்தவிடத்தில் பூசுவது வழக்கம்.

ஆடுதீண்டாப்பாளைச்சாற்றில் அப்பிரகபற்பத்தைக் கொடுக்க, சம்பத்துவரியட்டை, வச்சிராங்கையட்டை, சமாக்கரியட்டை என்னும் அட்டைகளின் விடந்தீரும்.

செவ்வட்டை.—இது கடிக்கில், கடிவாய் தடித்து, சிவந்து, திமிர் கொள்ளும்.

காட்டு அட்டை.—இதன் கடியால் உண்டாகும் விடத்திற்கு புனல் முருங்கை, செவ்வெருக்கன் வேர் இவைகளை வேப்பம்பட்டைத் தைலத்தில் அரைத்துக்கொடுக்கத் தீரும்.

மரவட்டை.—இதில், காட்டுமரவட்டை, பெருமரவட்டை, செம்மரவட்டை கருமரவட்டை, வெண்மரவட்டை என்ற சாதிகளுண்டு.

இது கடித்தால், சரீரம் தடித்தல், வியர்வை, வீக்கம், நோவு, கறுப்பகத்திப்பூ நிறம்போல் பொடிச் சிரங்குகள் எழும்புதலாகிய குணங்களுண்டாகும்.

சுக்கு, திப்பிலி, மிளகு இவைகளின் சூரணம் அல்லது காட்டுவாகைவேர் மேல்பட்டை, இலை, பூ, காய் இவைகளில் ஒன்றை வெந்நீரில் அரைத்துப் பிழிந்து வடிகட்டி நசியமிட்டு, உள்ளுக்குங்கொடுத்து மேலிலும்பூச மேற்கண்ட விடக்குணங்கள் போம்.

எல்லா மரவட்டை விடங்களும் தண்ணீர்விட்டான்கிழங்குச் சாற்றைக் கொடுக்கத் தீரும்.

### மீன்கடிக் குணமும் மருந்தும்.

விட மீன்கள் கடித்தால் கடியுண்டவிடத்தில் அழற்சி, வீக்கம், வலி காணும்.

நிலவேம்பு பலம் கால், மிளகு வராகனெடை கால், பூண்டு ஒரு திரிகூட்டி அரைத்து மூன்று பங்கு செய்து ஒருநாளைக்கு மூன்றுதரங்கொடுத்து, உப்பில்லாப் பத்தியம் வைக்க இவ்விடந்திரும்.

### கம்பளிப்பூச்சிக்கடிக் குணமும், மருந்தும்.

இது கடித்தால், வீக்கம், கொப்புளம், குத்தல், சுரம், வாந்தி, கடித்தவாயில் வலி உண்டாகும்.

குப்பைமேனிச்சாற்றில், சிறிது உப்பும் மஞ்சட்பொடியும் கலந்து பூசினாலும், பிள்ளைகளின் சிறுநீரைக்கொண்டு பூசினாலும் இக்கடிவிடம் நீங்கும்.

**அரணை நக்கல் குறிகுணமும், மருந்தும்.**

நக்கிடு மெனிலரணை — உடல்முற்றும்
　　நடுங்கிவெண் ணுரைதள்ளி நாக்குத்தடிக்கில்
சுக்கொடு வசம்பெடுத்துச் — சுட்டுப்பின்
　　சூரணித் தருந்தினுஞ் சாரணைவேர்
துவைத்ததன் சாறுடம்பிற் — பூசினும்
　　தொலையுங் குருத்துபனந் தொல்வேரும்
சுவைத்தருந் திடவரணை — விடமெலாம்
　　துடித்தொடுங் கிடும்நாத் தடித்ததுபோம்.

(பொ-ரை.)—அரணைநக்கினல் உடம்பு முழுதும் நடுக்கல், வாயில் வெண்மையான நுரைதள்ளல், நாக்குத் தடிப்பேறல் அதனுல் நன்ருய்ப் பேச முடியாமை என்பவைகளுண்டாம்.

இதற்குச் சுக்கையும் வசம்பையும் தனித்தனிச் சுட்டு எடுத்துத் தனித்தனி இடித்து வடிகட்டி இரண்டு தூள்களையும் சரியெடை கலந்து, காலைமாலை இரண்டு வேளையாக வேளைக்கு வெருகடியளவு நோய்வன்மைக்குத் தக்க நாளளவு சாப்பிட்டாலும்,

சாட்டரணை வேரையிடித்துப் பிழிந்த சாற்றை உடம்பிற் பூசினுலும்,

பனங்குருத்தையாவது, குருத்துப்பனையின் வேரையாவது வாயில்வைத்து மென்று சாற்றை விழுங்கினுலும், அரணை நக்கலாலுண்டான குற்றங்களெல்லாம் நீங்கும். (சி. ஆ.)

**தேள் தொகை.**

தேள் பன்னிரண்டுவகைப்படும். அவற்றில் சகசமாய்க் காணப்படுவன : வெண்தேள், செந்தேள், கருந்தேள், சித்திரத்தேள், கொள்ளித்தேள், சந்நித்தேள், சிறுதேள், பெருந்தேள், சினைத்தேள், நட்டுவக்காலி முதலியனவாம்.

சித்திரத்தேள்.—அதிக சிறியதாயிருக்கும்.

தேள்களில் எல்லாத் தேள்களையும்விட நட்டுவக்காலி, சித்திரத்தேள், சினைத்தேள், ஆகியவை அதிகவிடமுள்ளவைகளாகும். சிலதேள்களுக்கு இரண்டுவால்கள் உண்டு. ஒவ்வொரு வாலிலும் கொடுக்குகள் தனிப்படவிருக்கும்.

**தேள் கடியின் குறிகுணங்கள்.**

தேள்கள் கடித்தால் கடித்தவிடத்தில் விக்கம், வியர்வை, சிவத்தல். எரிச்சல், கடுத்தல், விறுவிறுத்தல், வலித்தல் முதலியவைகளும் (சிற்சிலருக்கு இரத்தமும் வெளிப்பட்டுக்) கடிவாயிலிருந்து மேலேறுவதுபோல் ஒரு பெருந்துன்பத்தையும் உண்டுபண்ணும். இதனுல், உடலில் வியர்வை, மயக்கம், குரக்குவலி, வாந்தி, மூர்ச்சை, உடல்சில்லிடுதல், மாரடைத்தல் என்னும் பலகுறிகுணங்களுண்டாம்.

### தேள் கடிக்கு மருந்து.

" வீசிய தேளினுக்குக் — கோழியெச்சம்
　　வெற்றிலே யிற்கொடுக்க விடமகலும்
கொல்லன்கோவைக் கிழங்கரைத்துக்—கொடுத்திடக்
　　கொடிதான கருந்தேளின் விடமறுமே
நல்லவெள் ளெருக்கம்பால் — சீலேயில்
　　நனைத்து மயிலிறகு தனிற்சுற்றியே
கோழியெச்ச மேற்றடவி — வைத்துலர்த்திக்
　　கொடியபன் னிருதேளுங் கொட்டிற்றெனிலவ்
வேளையிற் றீக்கொளுத்திக் — கொட்டுவாயில்
　　மெல்லப் புகைக்கவிட மில்லேகடுப்பும்." (சி. ஆ.)

### வேறு.

எருக்கன்வேர், சிறுகச்சை, கொம்மட்டிவேர், பச்சைக்கர்ப்பூரம், எட்டி வித்து இவைகளை எருக்கம்பால் விட்டரைத்து உருண்டைசெய்து வைத்துக் கொண்டு, இதை மூலேப்பாலிலாவது, எருக்கன்பாலிலாவது அரைத்து கடிவாயில் தடவி சூடுபடத்தேய்க்க விடக்கடுப்பு, விடமேறல் ஒழியும்.

எள்ளெண்ணெயைக்காய்ச்சி அதில் மேனியிலே, வெற்றிலே, உப்பு இம் மூன்றையுங் கசக்கி அதிலிட்டுக் கொட்டுவாயில் ஆவிபிடிக்க விடமிறங்கும்.

எட்டிப்பட்டையில் ஒருசிறுதுண்டெடுத்து ஒரு கல்லுப்பு சேர்த்துக்கொடுத்து மென்ற இரசத்தை உட்கொள்ளும்படி, செய்ய, விடம் இறங்கி சுக முண்டாகும்.

தேத்தான்கொட்டையை பலமுறை எருக்கன்பாலில் ஊறவைத்தும், உலர்த்தியும் பக்குவப்படுத்தினதில் ஒரு வித்தையெடுத்துக் கடிவாயில் வைக்க, விடத்தை அது இழுத்துக்கொள்ளுமட்டும் கடிவாயில்தங்கி, இழுத்துக்கொண்ட பிறகு கீழே விழுந்துவிடும்.

ஆகாயத்தூளிற் புனல்விட்டரைத்துக் கொதிக்கவைத்துக் கடிவாயில் பூசினவுடன் எரிச்சல் முதலியன நீங்கி குளிர்ச்சியுண்டாகும்.

குறிப்பு.—எத் தேள்விடமும், எருக்கிலேச்சாற்றில் அப்பிரக பற்பத்தைக் கொடுக்க நீங்கும். (தே.ய. வெ. உ.)

### நட்டுவக்காலி (இதுவே, நண்டுவாய்க்காலி எனப்படுவது)த் தொகை.

நட்டுவக்காலி மிகப் பெரிதாகவும் நண்டைப்போன்ற கால்களோடுமிருக்கும். இது கருநட்டுவக்காலி, மாரகார்த்தி நட்டுவக்காலி, மோகனார்த்தி நட்டுவக்காலி, மிருகார்த்தி நட்டுவக்காலி, பெருங்காற்சம்மிதை நட்டுவக்காலி என ஐந்து வகைப்படும்.

இது கொட்டினுல் காந்தலும், வீக்கமும், எரிச்சலுடன் கடுகடுப்பும், குமுறலும், குடைச்சலும், நெறிகட்டுதலும், வியர்வையும், வாயில் நுரைத் தள்ளலுங்காணும். இதற்கு அடியிற் கூறப்பட்ட சிகிச்சைகளைக்கொள்வது நலமாகும்.

### நட்டுவக்காலி விடத்திற்கு மருந்து.

நட்டுவாய்க் காலிகொட்டிக் — கடுத்திடில்
நன்றுவழுதுணங் காயொன்று வெதுப்பிக்
கட்டிட விடந்தணியும் — எட்டிவிதை
கழற்சிக்காய்ப் பிரமாண மிழைத்துப்பூசக்
கடுப்புட னெரிப்பொடுங்கும் — பழம்புளி
காடிதனிற் கரைத்துச் சாடியிற்பெய்தே
அடுப்பினிற் கொதிக்கவைத்துக் — கொட்டுவாயில்
ஆவிபிடிக்க விடம் போய்விடுமே
ஆகாசத்தூளி யெருமைச் — சாணிப்பால்விட்
டரைத்துக் கொதிக்கவிட் டவ்வாயில்
நீகாசினள வெடுத்துப் — பூசிவிடில்
நின்றிடுங் கடுப்பெரிப் பகன்றிடுமே.

(சி. ஆ.)

### வேறு.

1. அவுரிவேர், காஞ்சிரைவேர் ஆகிய விரண்டையுஞ் சமம் பொடித்து வெருகடிப் பிரமாணம், வெந்நீரிற் கொடுக்கத்திரும்.

2. வேலிப்பருத்தி, ஆடுதிண்டாப்பாளை இவையிரண்டையுஞ் சமன்கூட்டிச் சூரணித்து ஒரு வெருகடி, வெந்நீரிற் கொடுக்கத்திரும்.

3. கொல்லன்கோவை, வேலிப்பருத்தி, ஆடுதிண்டாபபாளை யிவைகளைச் சூரணித்து வெருகடி, வெந்நீரிற் கொள்ளத்திரும்.

4. கோழியின் பிசுபிசப்பான மலத்தை எடுத்து வெற்றிலையில்வைத்து ஒரு கிராம்புசேர்த்து மடித்து மென்று விழுங்கக்கொடுக்க விடமிறங்கும்.

5. எட்டிவேர்ப்பட்டையை கழற்சிக்காய் பிரமாணம் அரைத்து, அரைக் காற்படி வெந்நீரிற் கரைத்து மூன்றுவேளை கொடுத்தும், கொட்டுவாயிற் கத்தரிக்காயைச் சுட்டுக்கட்டியும்வர விடமிறங்கும்.

6. கொல்லன்கோவைக்கிழங்கை வெந்நீரிலரைத்துள்ளுக்குக் கொடுக்க விடமிறங்கும்.

குறிப்பு.—நட்டுவக்காலி அதன்பேதமான மாரகார்த்தி, மோகனர்த்தி, மிருகார்த்தி பெருங்காற்சம்மிதை விடத்திற்கும் அப்பிரகபற்பத்தை வெள்ளறுகுச் சாற்றில் கொடுக்கலாம்.

(தேய். வெ. உ.)

### காணாக்கடி நஞ்சுக் குறிகுணங்களும், மருந்தும்.

" காசினியில் காணாத கடியைக்கேளாய்
கண்ணாடி போலிருளில் முன்னேமின்னும்
தசையெல்லாம் பட்டையிட் டட்டைபோலத்
தானிருக்கும் கடித்தவுடன் தடித்துத்தேகம்
நசிவில்லை வடுவடுவாய்ப் புறணிதோன்றும்
நற்சிவப்பாய்த் தடித்துடலிற் றினவேமிஞ்சும்."

"மிஞ்சாமல் காடியொரு படியிலப்பா
    இதற்கிணையாய்க் கற்பூர வள்ளிதன்னை
அஞ்சாமல் நீயரைத்துப் பாதியுண்டு
    அங்கமெல்லாம் பரவியன்றோ துவாலைபூச
அஞ்சுநா ளிருநேர மருந்தவேணும்
    அரிதான பத்தியமாய் அறையுள்போடு."

(பொ-ரை.)—உலகத்தில்கடித்த நஞ்சுயிர் காணப்படாமல் ஓடிவிடுவதுண்டு. அதனால், இன்ன உயிர் கடித்ததென்று தெரிகிறதில்லை. ஆயினும், அது காணுக்கடியென்றும், அதற்குச்சில குறிகுணங்களுஞ் சொல்லப்பட்டிருக் கிறது.

அக்காணுக்கடியின் குறிகுணங்களாவன : உடம்பில் அந்நஞ்சு ஊறினால், அவன் இரவிற்சென்றால் அக்கடியால் உண்டான தடிப்புகள் மின்னலைப்போல் காணப்படும். உடம்பின் தோல்மேல் பட்டைபட்டையாய் ஒரு அடையாளங்காணப்படும். கடித்தவுடன் தடிப்புண்டாகும். மரப்புறணியிலுள்ள பொருக்குகளைப்போல் உடம்பு முழுமைக்கும் சிவந்த நிறத்தோடு வடுவுண்டாய் அவற்றில் தினவெடுக்கும்.

இந்நஞ்சுக்கு ஒருபடிக் காடியில் நாற்பது பலம் கர்ப்பூரவள்ளி இலையை அரைத்துக் கலக்கி, அதில் பாதியைச் சிறுகச்சிறுகவுண்டு மற்ற பாதியை உடம்புமுழுமையும் பூசவேண்டும். இவ்வாறு ஐந்துநாள் இரண்டு வேளையுஞ் செய்து கடும்பத்தியமிருந்து காற்றில் வராதபடி வீட்டினறைக்குள்ளேயே யிருக்கவேண்டும். அப்படியிருந்தால் மேற்படி காணுக்கடி நஞ்சுதீரும்.

(வி. ஆ.)

### சீவவெறி நஞ்சு.

செயற்கையாகவும் இயற்கையாகவும், வெறிபிடித்த நாய், நரி, மனிதர், பசு, எருமை, பன்றி இவைகளின் நச்சுக்குணம் வருமாறு :

இதை,

" *நாய்†நரிமா னிடர்பசுகா ரானிருளி வெறியிரண்டி
    னடையி யற்கை
யாய்ச்செயற்கை வழிகுணத்தி னலறிந்திட் டதற்கமைய
    வநுகூ லித்தே
நீயுளமா கவடிவெண்மை யநுபானப் படியளித்து
    நிலைக்கச் செய்தே
மாய்வுறுதே கத்தைமகி தலத்திருத்தி யாயுண்மறை
    வன்மை யுள்ளோய்."

என்னும் மாபுராணச் செய்யுளாலறிக.

இங்ஙனங் கூறப்பட்டதனால்

1. நாயில்,

(1) செயற்கைவெறி நாய்க்கடிநஞ்சு, (2) இயற்கைவெறி நாய்க்கடி நஞ்சு என இரண்டும்,

---

* நாய்—மாநாய், கருநாய், பேய்நாய், வெறிநாய்களைக் குறிக்கும்.

† நரி—நுழைநரி, பெருநரி, குள்ளநரி, பேய்நரிகளைக் குறிக்கும்.

2. நரியில்,

(1) செயற்கைவெறி நரிக்கடிநஞ்சு, (2) இயற்கைவெறி நரிக்கடி நஞ்சு என இரண்டும்,

3. மனிதரில்,

(1) செயற்கைவெறி மனிதர் கடிநஞ்சு, (2) இயற்கைவெறி மனிதர் கடி நஞ்சு என இரண்டும்,

4. பசுவில்,

(1) செயற்கைவெறிப் பசுக்கடி நஞ்சு, (2) இயற்கைவெறிப் பசுக்கடி நஞ்சு என இரண்டும்,

5. எருமையில்,

(1) செயற்கைவெறி எருமைக்கடிநஞ்சு, (2) இயற்கைவெறி எருமைக் கடிநெஞ்சு என இரண்டும்,

(6) பன்றியில்,

(1) செயற்கைவெறிப் பன்றிக்கடி நஞ்சு, (2) இயற்கைவெறிப் பன்றிக்கடிநஞ்சு என இரண்டும், ஆகப் பன்னிரண்டின் நஞ்சுகளையும் பிற பிராணிகளின் நஞ்சுகளையும் கொள்ளல்வேண்டும்.

இவற்றில் செயற்கைவெறி என்பது : உயர்திணையாகிய மாந்தர்க்கு மருந்தினால் வரும்வெறியும் அஃறிணையாகிய நாய், நரி, பசு, எருமை, பன்றி இவைகள் சுடுகாட்டிலுள்ள தலையோட்டில் தங்கிய நீரைக் குடித்தலால் உண்டாகும் வெறியுமாம். ஆயினும், சுடுகாட் டெலும்பைத் தின்னும் பசுவின் பாலும் குடித்தற்காகாது எனக் கூறியிருப்பதால், அதைத் தின்னும் பசுவையும் ஈண்டுக் கொள்ளல்வேண்டும். அதனை,

> "விஞ்சு வரணை தாராநோய் மிகுத்துச் சுழலல் வெண்புள்ளி
> துஞ்சி யலைந்து மலமருந்தல் சுடுகா டேகி யெலும்புணலிவ்
> வஞ்சு வகையி னுவின்பா லாகா தனுகிற் றிரிதோடம்
> நெஞ்சி லடையுங் கயநோயா னிறைந்த வயதுங் குறைந்திடுமே.

என்னும் அ. ப. சி. யாலுணர்க.

இயற்கைவெறி என்பது.—மேலே சொல்லப்பட்ட அஃறிணை உயிர்களுக்குப் பிறவியிலேயே உண்டான வெறியையும், உயர்திணை உயிராகிய மாந்தர்க்கு ஊழினால் உண்டாம் வெறியையும் குறிக்கும்.

இவ்விருவகையில் செயற்கைவெறி நஞ்சு தீர்வதும் (சாத்தியமும்) இயற்கைவெறி நஞ்சு தீராததும் (அசாத்தியமும்) ஆகும்.

**1. செயற்கைவெறி நாய்க்கடி நஞ்சின் குறிகுணம் :—**

வாயினின்றும் தண்ணீர் மோர்போல வழிதல், கூச்சலிடுகிற சத்தம் பேதமாகக்காணல், வேர்வைவிட்டுத் தெளிவாக வெளிப்படல், மயக்கம் தெளிவுடன் உண்டாதல் என்பவைகளாம்.

**2. இயற்கைவெறி நாய்க்கடி நஞ்சின் குறிகுணம் :—**

வாயில் நுரைதள்ளல், விடாமற்படிக்கு வேர்வை குழம்பிக்காணல், நாய் குரைத்தற்போல் கத்தல் என்பவைகளாம்.

**1. செயற்கைவெறி நரிக்கடி நஞ்சின் குறிகுணம் :—**

இருமல், இருமும்போது வாயிலும் மூக்கிலும் வேர்வைநீரைப் போல் ஒரு விதமாகக் தண்ணீருண்டாதல், விட்டுவிட்டு நடுக்கலுண்டாதல், பேசும்போது பேச்சுதவறி ஒருவிதமான ஊளையிடுதல் என்பவைகளாம்.

**2. இயற்கைவெறி நரிக்கடி நஞ்சின் குணம் :—**

வாய் வரட்சியாயுலர்ந்து நீரில்லாமற்போதல், உட்டிணமாக உடம் பெல்லாம் வேர்வையில்லாமற்போதல், நரிக்கூச்சலைப்போற் கூச்சலிடுதல், என்பவைகளாம்.

**1. செயற்கைவெறிப் பசுக்கடி நஞ்சின் குறிகுணம் :—**

ஒரு வேளை பசுவைப்போல மேய்தல், நீர் அருந்தல், ஒருவேளை இனத் திற் சார்தல், கூச்சலிடுகின்ற சத்தம் மிகுபேதமில்லாதிருத்தல், செவ்வையா கப் பார்த்தல் என்பவைகளாம்.

**2. இயற்கைவெறிப் பசுக்கடி நஞ்சின் குறிகுணம் :—**

வாய் வரட்சியாய் உதட்டில் ஈரமில்லாதுபோதல், பசியின்மை, தாகமின்மை, நித்திரையின்மை என்பவைகளாம்.

**1. செயற்கைவெறி எருமைக்கடி நஞ்சின் குறிகுணம் :—**

வெளியிற் புறப்படாமை, பதுங்கித்திரிதல், பல்லைக்கடித்தல், வித்தி யாசமாகக்கூவல், புசிப்பும் நித்திரையும் உண்டாகியு மில்லாமலுமிருத்தல், என்பவைகளாம்.

**2. இயற்கைவெறி எருமைக்கடி நஞ்சின் குறிகுணம் :—**

இருந்தவிடத்திலேயே அசையாமல் இருத்தல், வாயில் நுரையாக உமிழ் நீர் வெளிப்படல், ஏரி, குளங்களில்போய் விழுதற்குத் துரிதப்படல், வாயை "ஆ" என்று திறத்தல், சத்தவேற்றுமையில்லாமற் கூவுதல், பசி, தாகம், நித்திரையில்லாமலிருத்தல் என்பவைகளாம்.

**1. செயற்கைவெறிப் பன்றிக்கடி நஞ்சின் குறிகுணம்: —**

கொஞ்சநேரம் விட்டுவிட்டுச் சீறல், பார்வை தெரியாமல் இருண்டு காணல், பூமியில் புரளல், வாய்நீர் வற்றிப்போதல், பசி, தாகம், தூக் கம் வருவதும் வராமலுமாயிருத்தல் என்பவைகளாம்.

**2. இயற்கைவெறிப் பன்றிக்கடி நஞ்சின் குறிகுணம் :—**

வாயில் கள்ளைப்போல் ஒருவிதமான நாற்றம் நாறுதல், மண்ணைத் தின்னல், ஓரிடத்திலும் நிற்காதபடி திரிதல், கூவுகிற சத்தமானது தற்சாதிகமாகவே இருத்தல் என்ப்வைகளாம்.

**1. செயற்கைவெறி மனிதர் கடி நஞ்சின் குறிகுணம் :—**

கொஞ்சநேரம் மயக்கமாயிருத்தல், வாயில் நீர்பெருகல், விடாமற் கண்டபடி பேசிக்கொண்டிருத்தல், பசி, நித்திரை, தாகம் இவை நன்றாய்த் தோன்றுவதாகத் தெரியாமல், கொஞ்சம் தோன்றுவதாகவே தெரிதல் என்பவைகளாம்.

**2. இயற்கைவெறி மனிதர் கடி நஞ்சின் குறிகுணம் :—**

மார்படைத்துக் கொள்ளல், வாயினின்றும் நீர் நுரைநுரையாய்ப் புறப்படுதல், ஒரு விகாரக்கூச்சலிடல், பசியின்மை, தாகமின்மை, நித்திரை யின்மை என்பவைகளாம்.

**இவற்றிற்குச் சிறப்பு மருந்துகளும், துணை மருந்துகளும், பத்தியமும்.**

**1.** செயற்கை வெறிநாய் நஞ்சுக்குப் பலகறைப் பற்பத்தை அளவுப்படி கல்லாலின் சாற்றில் கொடுத்துக் கொள்ளுக்கஞ்சியும்,

**2.** இயற்கைவெறி நாய் நஞ்சுக்கு மேற்படிமருந்தைக் நிலப்பனைச் சாற்றில் கொடுத்து, காராமணிப் பருப்புக்கஞ்சியும்,

**3.** செயற்கைவெறி நரி நஞ்சுக்கு மேற்படி மருந்தைக் கீழாநெல்லிச் சாற் றிற் கொடுத்து, சிறுபயற்றங்கஞ்சியும்,

**4.** இயற்கைவெறி நரி நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தை மூங்கிலின் சாற் றிற் கொடுத்துத் துவரம்பருப்புக் கஞ்சியும்,

**5.** செயற்கைவெறிப் பசு நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தை நாயுருவிச் சாற்றிற் கொடுத்து வரகரிசிக் கஞ்சியும்,

**6.** இயற்கைவெறிப் பசு நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தை வெற்றிலைச் சாற்றிற் கொடுத்துச் சாமையரிசிக் கஞ்சியும்,

**7.** செயற்கைவெறி எருமை நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தை வன்னியிலைச் சாற்றிற் கொடுத்துப் புல்லரிசிக் கஞ்சியும்,

**8.** இயற்கைவெறி எருமை நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தைக் கோரைச் சாற்றிற் கொடுத்துத் தினையரிசிக் கஞ்சியும்,

**9.** செயற்கைவெறிப் பன்றி நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தைப் பாகலிலைச் சாற்றிற் கொடுத்து மூங்கிலரிசிக் கஞ்சியும்,

**10.** இயற்கைவெறிப் பன்றி நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தைப் பேய்ப்புடற் சாற்றிற் கொடுத்து கோதுமையரிசிக் கஞ்சியும்.

**11.** செயற்கைவெறி மனிதர் நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தை நரிப் பயற்றங்கொடிச் சாற்றிற் கொடுத்து அவரைபருப்புக் கஞ்சியும்,

**12.** இயற்கைவெறி மனிதர் நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தைச் செருப் படைச் சாற்றிற் கொடுத்து உளுந்துக் கஞ்சியும், காய்ச்சிக் கொடுக்கவேண் டியது.

**நஞ்சினரை வைக்குமுறை.**

பழம்பழுக்கும்பொருட்டு வாழைக்காய், மாங்காய் முதலியவற்றை ஒரு அறையிலிட்டாவது ஒரு மண்பானையிலிட்டாவது காற்று நுழையாமற்செய்து உப்பலிற்போட்டு ஊதல் கொடுத்தால், எப்படி அவைகள் அடங்கியொடுங்கிப் போமோ, அப்படியே கடி நஞ்சடைந்த உயிர்களை வெளியில்வராதபடி காவல்வைத்து அவ்வுயிர்கள் இருக்கும் இடத்தில் காற்றும் நுழையாமற்படி செய்தால் மெத்தவும் நன்மையாயிருக்கும். இல்லாவிட்டால் அது செம்மைப் படாமல் (திருவதும் திராமற்) கெட்டுப்போய், மருந்து, துணைமருந்துகளின் நற்குணங்களையும் கெடுத்து துர்க்குணங்களையே கொடுப்பதாகும்.

"பித்தி னுய்முதற் பெருங்கடிப் புன்னோ
யத்தின வவுடத மாநு பானமேற்
பத்தியந் தபுமெனிற் பண்டி தங்கெடும்
சத்தியங் கரவன்மை சரத முண்மையே."

என மாபுராணப் பெருவாகடமும்,

"மண்ணை ஞமலிமாய் மானிட ரான்பன்றி
எண்ணு மெருமை யிவையிரு பாற்கடி
நண்ணு தொழிய நரிப்பய றுஞ்சேர்தி
கண்ணுறு கொட்கஞ்சி காவ லதிகமே"

எனத் திருமூல நாயனுர் திருமந்திரத் திரட்டும்,

"சோகி லிரண்டு வகைக்கடி
யாகல் சுணங்க னரிக்கடி
சோகியட லேப்பயறு நீர்களறு பானி
நாகவலி வேதமுறை காலது பத்தியம்
பண்ணப்படு
மெண்ணப்படி
பதறிக்கொளினுதறும்
பருப்பமுறை யநுபானம்
நெருப்பை நிகராமே."

"பஞ்சாகு முதலவிடப் பிணி
பஞ்சா னனமுன்னர் கரித்திரளவிடமிது
பார்க்க வொண்ணுதது
பார்க்கு ளிதுநிதமே
பாரகா வியமுறைப் பண்பினை யறிமின்
பாங்கர் பாரிசம் பாலென லொன்றெனப்
பகருணர் வினரே
பார்த்தறி யிதுவே."

என அகத்தியர் கரிசலும் கூறுவதாலறிக.

**வேறு.**

**பேய் நரி, பேய் நாய்க் கடிக்கு**

மணித்தக்காளியிலைச்சாறு.

எண்சீர் விருத்தம்.

தானென்ற பேய்நரியாய் கடித்த தானல்
தழைத்தமணித் தக்காளி யிலைச்சா றப்பா
பானென்ற படிகால்தான் கொடுப்பா யப்பா
பாங்காக மூன்றுநா ளாறு வேளை
கோனென்ற பத்தியந்தா னுப்பா காது
குணமாகு மேழாநாள் நீரை வாரு
வேனென்ற பேய்நரிநாய்க் கடிதான் தீரும்
விதமாகு மிதன்றழையை மேலே பூசே.

(பொ-ரை.)—மணித்தக்காளி இலைச்சாறு வேளைக்குக் கால்படியாக நாளொன்றுக்கு இரண்டுவேளை மூன்றுநாள் ஆறுவேளை கொடுத்து அம்மூன்று நாட்களும் உப்பில்லாப் பத்தியம்வைத்து, மறுபத்தியமாக மூன்றுநாளும் வறுத்த உப்பு கூட்டிக்கொண்டு, ஏழாவதுநாள் ஓமந்தேய்த்து வெந்நீரில் தலைக்குவார்த்துக்கொண்டு, அக்கடிவாயிலும் மற்ற பாகங்களிலும் மேற்படி இலையையே அரைத்துப்பூசவேண்டும். அப்படிச் செய்தால் பேய்நரிக்கடி, பேய் நாய்க்கடி விடந் தீரும். (புலி-500.)

குறிப்பு.—நரி விடத்திற்கு அப்பிரக பற்பத்தை, ஒரிலைத்தாமரைச்சாற்றிலும் நாய் விடத்திற்கு வன்னியிலைச்சாற்றிலும் கொடுக்கலாம்.

(தே.ய.வெ.உ.)

## குரங்குக்கடி நஞ்சுக் குறிகுணம்.

கைகால்கள் நீட்டினபடியேயிருந்து துடித்தல், ஆகாயத்தைக் கண் சிமிட்டாமல் பார்த்தல், குரங்கைப்போல் சேட்டை செய்தல், ஆடல், பாடல், தாவல், குதித்தல், கூச்சலிடல், சுரமடித்தல் என்பவைகளாம்.

## ஒற்றடக்கட்டு மருந்து.

அறுசீர் விருத்தம்.

“ குரங்கு வலியக் கடித்ததெனில்
கோளில வேர்வயி ரச்சுக்கும்
குறிஞ்சிப் பூசீர் வராகியிலை
கொழுஞ்சி யிலையும் துவைத்திட்டு
நருங்க வோட்டில் வறுத்தொற்றி
நலமா யாற்றிக் கட்டிடவே
யொருங்கு கோடி குரங்குவிடம்
ஒழிந்தே யொடுங்கிப் போய்விடுமே.”

(பொ-ரை.)—குரங்கு வன்மையாகக் கடித்ததானால், இலவம்வேர், நன்றாய் முதிர்ந்த தோல்சீவின சுக்கு, சிறுகுறிஞ்சான்பூ, நிலப்பனையிலை, கொள்ளுக்காய்வேளையிலை இவைகளைச் சரிஎடை எடுத்துத் துவைத்து ஓட்டிலிட்டு வறுத்து ஒரு துணியில் முடிந்து கடித்தவிடத்தில் ஒற்றடம்போட்டு அதைச் சூடாற்றி அக்கடிவாயில் வைத்துக்கட்டினால், கோடி குரங்கு கடித்ததனாலுண்டாம் நஞ்சானாலும், அதன் வன்மை கெட்டு ஒடுங்கிப்போய்விடும்.

இஞ்சியை யரைத்து நீரில் கலக்கிக் கொடுத்தாலும் குரங்குக்கடி நஞ்சு விலகும்.

## பூனைக்கடி நஞ்சுக் குறிகுணம்.

பூனையானது கடிப்பது மிகவும் அரிது. அது சீறுவதே இயற்கை. அப்படியிருந்தும் தவறிக் கடிக்குமாயின், நெஞ்சில் ஒருவகையான சத்தம், இரைப்பு, மூர்ச்சை, கோழைகட்டுதல், சுரம் அதிகரித்தல், பூனைபோற்கத்தல், சீறல் முதலியவைகள் உண்டாகும். இக்கடி நஞ்சை உடனே மருத்துவஞ்செய்து நீக்காவிட்டால் சிலகாலங்கழித்து இருமல், காசம் முதலிய ஈளைநோய்கள் உண்டாவனவாம்.

இதுவன்றிக் குழந்தைகள் குடிப்பதற்கு வைத்திருக்கும் பாலைப் பூனைகள் குடித்து மிச்சப்பட்ட பாலைக் குழந்தைகள் குடித்தாலும் ஈளைநோய் உண்டாம்.

**பூனைக்கடி தீரக் குப்பைமேனிக் கற்கம்.**

எண்சீர் விருத்தம்.

பூசியே பூனையிட கடிதான் தீரப்
புனிதமுள்ள பூனைதொழும் பட்டை வாங்கி
ஆசியே பசுவின்பால் தனில ரைத்தங்
கப்பனே பத்தியமாய்க் குடிக்கச் சொல்வாய்
கூசியே முன்போலப் பத்தியமே காவாய்
குணமுள்ள நீலிவேர் தனைய ரைத்து
வாசியே யீராறு நாளும் பூச
வகையாகப் பூனைகடி தீருந் தானே.

(பொ-ரை.)—குப்பைமேனி வேர்ப்பட்டையை எடுத்துப் பசுவின்பால்விட்ட ரைத்துக் காலைமாலை இரண்டு வேளையாக மூன்றுநாள்வரைக்கும் ஒரு கழற்சிக்காயளவு கொடுத்து மூன்று நாளும் உப்பில்லாப் பத்தியமிருந்த பின், மறுபத்தியம் மூன்றுநாள்வைத்து வறுத்த உப்பு சேர்க்கவும். ஏழா வது நாள் ஒமந்தேய்த்து வெந்நீர் முழுக்காட்டவேண்டும்.

அவுரி வேர்ப்பட்டையை வெந்நீராலரைத்து கடிவாயிலாவது உடம்பு முழுமையுமாவது பன்னிரண்டு நாள் பூசவேண்டும். இப்படிச் செய்தால் பூனைக்கடி நஞ்சு தீரும். (புலி-500.)

**புழுகுபூனை, குரங்கு, பூனை, பன்றி, நரி, முதலை, புலி, நாய்க்கடிகளின் நஞ்சுகளுக்கு அவுரிக் கற்கம்.**

அறுசீர் விருத்தம்.

நாவி குரங்கு பூனைபன்றி
நரிநீர் முதலை யுழுவையுடன்
மேவுஞ் சுணங்க னிவையெட்டும்
மேலே விழுந்து கடித்தக்கால்
ஆவின் பாலில் நீலியின்வே
ரரைத்துக் கொடுக்க நாள்மூன்றில்
மேவுங் கனலில் மெழுகதுபோல்
விடந்தான் கழன்று போய்விடுமே.

(பொ-ரை.)—அவுரிவேர்ப்பட்டையைப் பசுவின் பாலால் அரைத்துக் கழற்சிக்காயளவு மூன்றுநாள் ஆறுவேளை கொடுத்து, அந்நாள் மூன்றும் உப்பில்லாப் பத்தியம் இருந்தால் மேற்படி உயிர்களின்கடி நஞ்சுகள், நெருப் பிற்பட்ட மெழுகைப்போல், வன்மை கெட்டொழியும். (க.ஆ.)

**வேறு பரிகாரங்கள்.**

அறுசீர் விருத்தம்.

புலருங் கள்ளி தனைவாட்டிப்
புண்வாய் பிழிந்தால் விடந்தீரும்
சுலவுங் கருடக் கொடியரைத்துத்
துவாலை யிடினும் விடந்தொலையும்

அலரும் விழிச் சமூலத்தை
அரைத்திந் தாலும் விடந்தணியும்
பலவும் வேண்டா மியாமிங்கே
பகரேள டதங்கள் தெரிந்திடுமே.

(பொ-ரை.)—கொடிக்கள்ளியை நெருப்பில்வாட்டிக் கடிவாயிற் பிழிந்தாலும், கருடன்கிழங்குக்கொடியை அரைத்துத் துவாலேயிடினும், விழிச் செடியின் சமூலத்தை அரைத்துக் கடிநஞ்சின் வன்மைக்குத்தக்க அளவு, நாள் இவைகளைக்கண்டறிந்து, விதிப்படி கொடுத்தாலும் மேலே சொல்லப் பட்ட கடி நஞ்சுகள் திரும். (க.ஆ.)

**வேறு.**

**வேம்புப்பூச்சு.**

அறுசீர் விருத்தம்.

வேப்பங் கொழுந்தி னுடன்சிந்தில்
வேருஞ் சிறுநீர் விட்டரைத்துக்
கோப்பா யுலர்த்தி வட்டாக்கிக்
கொண்டே யுடைத்துப் பொடிசெய்து
தாப்பாய் முட்டைக் காடிவைத்துத்
தடவித் தண்ணிர் தனில்முழுகக்
காப்பா யுடம்பு நன்றாகும்
கடிதே விடங்கள் தீர்ந்திடுமே.

(பொ-ரை.)—வேப்பங்கொழுந்தையும், சீந்தில்வேரையும் சரி எடை எடுத்துச் சிறுநீர் விட்டரைத்துப் பில்லேதட்டி உலர்த்திப் பொடிசெய்து வைத்துக் கொண்டு, கோழிமுட்டையை உடைத்து வெள்ளம்பிலியைமட்டும் ஒரு பீங்கானில் ஊற்றிப் புளிக்கவைத்து அதில், அப்பொடியைப்போட்டுப் பிசைந்து கடிவாயிலும் உடம்பிலும் பூசி ஊறவைத்து வெந்நீரால் தலைமுழுக்காட்டினல், மேற்கூறிய நஞ்சு திரும். உடம்பு நன்றாகும்.

**வேறு.**

**மத்தநெய், வெற்றிலேச்சாறு.**

அறுசீர் விருத்தம்.

மத் தத் துளியா றெட்டுள்ளே
வருந்தி நல்லெண் ணெயிற்கொண்டால்
சித்த ரெதிர்பே யோடுதல்போல்
திரா விடங்கள் தீர்ந்திடுமே
பத்தி யுடன்வெற் றிலேச்சாறு
படிகால் கொடுக்க நாள்மூன்றில்
சத்தி யருளால் நாய்நரிவே
தனேகள் திரும் சத்தியமே.

(பொ-ரை.)—ஊமத்தை இலேச்சாறு ஆறுதுளியாவது எட்டுத்துளியாவது, வேளை ஒன்றுக்கு ஒரு உச்சிக்கரண்டி நல்லெண்ணெயில் விட்டுக்கொடுக்க வேண்டும். இப்படி நோய்வன்மைக்குத்தக்க நாளளவு கொடுத்தால், சித்தரை எதிர்த்தபேய் ஓடிவிடுதல்போல் மேற்படி கடி நஞ்சுள் திரும்.

வேளைக்குக் கால்படி வெற்றிலேச்சாறாக மூன்றுநாள் ஆறுவேளை கொடுத்தாலும் நாய், நரிக்கடி நஞ்சுகளின் வேகந்தணியும். (க.ஆ.)

**கடிவாய்ப்புண்ணுக்குப் பச்சிலைக்கட்டு.**

கடிவா யுளைந்து புண்ணானால்
 கட்டெள டதங்கேள் பருத்தியிலை
பிடியாந் தும்பை யாவிரையும்
 பிடியாஞ் செம்பை புளியிலையும்
படிவா யைந்துஞ் சமனாகப்
 பறித்து வெதுப்பித் தான்கட்ட
வடிவா யுலரும் புண்களெல்லாம்
 மருமம் வெளியே சொல்லாதே.

(பொ-ரை.)—கடிவாயானது வருந்தும்படியான புண்ணானால் பருத்தியிலை, தும்பையிலை, ஆவாரையிலை, கருஞ்செம்பையிலை, புளியிலை என்னும் ஐந்திலைகளையும் வகைக்கு ஒரு பிடி எடுத்திடித்து வெதுப்பிப் புண்ணின் மேல் வைத்துக் கட்டினால் சீநீர், புண்ணீர் முதலியவை வடிந்துகொண் டிருக்கிற புண்ணின்வாய் உலரும். புண்களெல்லாம் ஆறும். ஆனால், இதன் மருமத்தை வெளியிற் சொல்லவேண்டாம். (க.ஆ.)

**குதிரைக்கடி நஞ்சுக் குறிகுணம்.**

குதிரையானது கடித்தால், உடம்பில் வலியுண்டாய் மூர்ச்சைகாணல், கைகளும் கால்களும் அடித்துத்துவைத்ததுபோல் அசைவறக்கிடத்தல், குடைச்சல், குதிரை பல்லிளித்தல்போல் பல்லை இளித்தல், மீண்டும் மூடல், கழுத்திலும் சிரசிலும் மிகுவியர்வை, நெஞ்சிலும், முதுகிலும், தோளிலும் உதிரத்தைப்பற்றிய உபத்திரவம், குதிரைபோற்கனைத்தல் என்னும் குறி குணங்கள் உண்டாம்.

இதற்குக் கீழ்கண்ட விடக்குழம்பு-மையைக் கையாள்க.

**நாய், குரங்கு, பூனை, குதிரை, நரி, சிறுத்தை, முதலை, வேங்கைக்கடிகளுக்கு அவுரிவேர்ப்பட்டைக் கற்கம்.**

நாய்வா னரம்பூனை — துரகம்
 நரிசிறு புலிகரா பெருவேங்கை
தியவிவ் வெண்வகையும் — கடித்திடில்
 தேடிநீலிவே ராவின்பாலி லரைத்தே
மூன்றுநா ளருந்திடவே — ஓடிடும்.

(பொ-ரை.)—அவுரிவேர்ப்பட்டையைப் பசுவின் பாலால் அரைத்துக் காலை மாலை இரண்டு வேளையும், வேளைக்குக் கழற்சியளவாகப் பசுவின் பாலிற் கரைத்து மூன்றுநாள் கொடுத்தால் உயிர்களின் நஞ்சுகள் நீங்கும். (சி.ஆ.)

**விடக்குழம்பு.**

தீராத விடங்க ளெல்லாந் தீர்ப்பதற்குத்
 தெளிவாகக் கருங்குழம்பு செப்பக் கேளு
நேரான கருநாபி வெண்கார மிந்து
 நிர்விடமுங் கருஞ்சீ ரகமுங் கூட்டிச்
சீரான கந்திரச மனோசிலையும் வாளந்
 திறமாகச் சுத்திசெய்து சார மரையாகப்
பேரான குழிக்கல்லி லாட்டித் தூளாய்ப்
 பின்னுமோர் வேலியிலைச் சாற்று லாட்டே.

ஆட்டுவாய்ச் சாம மூன்று மதற்கப்பால் தேங்காய்ப் பாலுங்
கூட்டுவாய் கருப்புக் கட்டி கொட்டாங்கச் சியின்க ரியும்
வாட்டமாய்த் தேங்காய்ப் பாலு மகிழவிட் டரைத்து நன்றாய்
ஊட்டுவாய் விடங்க ளெல்லா முசிவறக் குன்றி போல.

(பொ-ரை.)—கருநாபி, வெண்காரம், இந்துப்பு, நிர்விடம், கருஞ்சீரகம், கந்தகம், இரசம், மனேசிலை, நேர்வாளம் இவைகளைச் சுத்திசெய்து வகைக்கு ஒரு பங்கு எடுத்து இவைகளுடன் நவாச்சாரம் அரை பங்கு சேர்த்து உத்தாமணிச் சாற்றாலும், தேங்காய்ப் பாலாலும் தனித்தனியே மும்மூன்று சாமம் அரைத்து மைபோலானபின் சிரட்டைக்கரியும், கருப்புக்கட்டியும் கூட்டி அரைத்து மெழுகுபதத்தில் எடுத்துக்கொள்க. இதில் குன்றி அளவு கொடுக்க சகல விடங்களும் நீங்கும்.

பற்பல பாம்பு, சில்விடம், செவ்வட்டை, செம்பூரான், வண்டு, ஓந்தி தவளை, சிலந்தி முதலிய விடங்களுக்கு—

### விட—மை.

(1) மத்த மழிஞ்சில் வெண்குன்றி வாளந் தில்லை வித்தைந்தும்
சித்தர் கெவுரி தாரமனே சிலைபொன் மெழுகு நிர்விடமே
சுத்தி லிங்கம் நாபிபச்சை துருசு கெந்தி திரிகடுகு
கத்தன் சாரமி ரசஞ்சீனக் கார மிவைதான் பதினாறே.

(2) வகைக்கோர் கழஞ்சி வாங்கிக்கல் வத்தி லிட்டுப் பழச்சாற்றில்
திகைக்கா தரைத்துப் பீங்கானில் சிவனைப்பூசித் தடைத்து வைத்தே
பகைக்கும் விடந்தான் கொண்டவர்க்கோர் பசும்வெற் றிலையிற் [பணவெடைதான்
உகைப்பாக் கொடுநீ விடமெல்லா மோடு முண்மை யறிவாயே.

(3) இந்த மருந்து போலுனக்கிங் கெவருஞ் சொல்லார் நான்சொன் [னேன்
விந்தை யாகக் கொடிகட்டி விருது பெறநீ கொடுத்திடலாம்
நைந்தே விரியன் கடியரணை நக்கல் துட்ட நாகவிடம்
எந்த விடங்க ளானாலும் இறங்கி யோட்டம் பிடித்திடுமே.

(4) கடியால் வந்த திமிர்குட்டம் கைகால் முடக்க முதலாக
வெடிவாய் சிழார் புண்களெல்லாம் விட்டுப் போகும் நிச்சயமே
படிவா ரிந்த விடமையைப் பாரி லெவர்க்குஞ் சொல்லாதே
நடமார் சிவன்று ளுமைக்கந்த நாளிற் சொன்ன மருந்திதுவே.

(5) இசையு மருந்தின் பத்தியந்தா னெண்ணெ யுப்பு புளிகடுகு
முசிய வாகா தொருவாரம் முயங்கு மறுபத் தியமாதம்
பசுவின் பால்பச் சரிசிபச்சைப் பயற்றம் பருப்புஞ் சேர்த்தாக்கி
நசையோ டுண்ண லாமுழுக்கு நாள்தொட் டெல்லா முணலாமே.

(க.ஆ.)

### இடுமருந்தின் பயன்.

இது, ஈடு, கரம் எனவும் வழங்கும்.

பெண்கள் ஆடவரையும், ஆடவர் பெண்களையும், தொழிலாளர் தன் முதல்வனையும், தத்தம் எதிரியை தன்வசப்படுத்தும் பொருட்டு உணவாதிப் பொருள்களிலாவது, தாம்பூலாதிகளிலாவது, பற்பல செந்துக்களின் உறுப்பு

களேயும், விடமுள்ள பச்சிலே, வேர் முதலியவற்றையும், தம்முறுபிப் பிறக்கும் சிற்சிலக் கழிவிடப் பொருள்களேயும் சேர்த்துக் கொடுப்பதற்கு இடு மருந்தெனப்படும்.

**இடுமருந்தின் தீக்குணம்.**

முற்கூறிய பொருள்களே அன்னபானதிகளில் ஒருவர் கலந்து கொடுக்க, அவையுணராமலே உட்கொண்டவர்க்கு முகம்வெளிறல், இருமல், இரைப்பு முதலிய இளேப்பு (கய) நோய்களில் காண்கின்ற முற்குறிகள் யாவும் காணும். இக்குறிகுணங்கள் தோன்றிய காலத்தே பரிகாரஞ் செய்துகொள்ள முயன்றல் தீரும். இன்றேல் தீராவாம்.

**விடங்கலந்த அன்னத்தின் இலக்கணம்.**

விடங்கலந்த அன்னத்தை, நோக்கின் அதன் மணமும் தோற்றமும் வேற்றுமைப்பட்டிருக்கும். அஃதாவது, பிளப்புற்றதாகவும், ஒன்றோடொன்று கூடிக்குழைந்து உருண்டை உருண்டையாகவும், தளதளப்பாகவும், பழையசோற்றின் வாசனே கொண்டதாகவுமிருக்கும். மேலும், இதையுற்று நோக்குவான் சோர்தலேயும் மூர்ச்சையையும், வாய்நீர் சுரத்தலேயுமடைவான்.

**விடங்கலந்த கறி பதார்த்தத்தின் இலக்கணம்.**

இது, வரண்டதுபோலவும், கறுத்த கஷாய நிறமாகவும், நுரையும், நீர்க்குமிழியும், அகண்ட கீற்றும் படிந்ததாகவும் இயற்கைத் தோற்றமில்லாதனவாயு மிருக்கும்.

**விடங்கலந்த அன்னத்தின் சோதனே.**

இதை நெருப்பிலிட்டால், சுடர் எழும்பும். மயில் கண்டத்தின் நிறத்தையொத்த புகை எழும். வெறுப்புற்ற மணம்வீசும். ஈமொய்த்தால் சாகும். காக்கை கிட்டினல் தாழொலியோடு கத்தும். வலியன் களேத்துவிழும் புரு, குயில், உயிர்நீங்கும். பூனே பயந்தோடும். குரங்கு மலங்கழியும். மயில் பார்வையிழந்து மயங்கும். கிளி கூச்சலிடும்.

**விட அன்னமுண்டவருக்குண்டாகும் நோயைப்போக்க.**

வெண்பூசனிக் கறி—நெய்—லேகியம்—சூரணம், விளாம்பழத்தோட்டுக் கற்கம் முதலிய தாவரப்பொருள் மருந்துகளும், அப்பிரக பற்ப—செந்தூரம், தங்கபற்ப—செந்தூரங்களாகும். (பக்கம் 36 பார்க்கவும்.)

---

# நஞ்சு நூல்.

## அட்டவணை.

